THE RIVER FLOWS EAST

*By* :

NAN-KUNG PO

Published by :

RAINBOW PRESS

HONG KONG



*

TAMIL EDITION :

T. N. KUMARASWAMY

ILLUSTRATIONS :

SWAMINATHAN

PRICE : Rs. 2 · 50



PRINTED AT :

SRI B. L. S. PRESS

MADRAS - 24

## சொற்றுளி

———

‘ கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை’ என்ற பொய்யா மொழி ஓர் ஆற்றின்கண் வரும் பெருவெள்ளத்திற்கும் சாலப் பொருந்தும். ஆற்றுப் போக்கில் பெரு மாறுதல் தோன்றும்போது அதன் கரைகளில் மக்கள் நடத்தும் அமைதி வாழ்வு சீர்குலைந்து விடுகிறது. 1954இல் தோன்றிய இயாங்க்ட்ஸிநதியின் வெள்ளத்தை நிலைக்களனாக வைத்து இந்தப் புதினம் உருவாக்கப்பட்டது. இந்நாவலாசிரியரான நாந்-குங்போ ஓர் உயர் வகை எழுத்துக் கலைஞன் என்பதை இந்த நவீனம் எடுத்துக்காட்டும்.

நண்பர் திரு. த. நா. குமாரஸ்வாமி அவர்கள் இனிய தமிழ் மொழியில், தமக்கே இயல்பான சிறந்த நடையில், சுவை சிறிதும் குன்றாது இந்நவீனத்தை எங்களுக்காக மொழிபெயர்த்து உதவியுள்ளார். அவருக்கு எங்கள் நன்றி.

தங்கள் ஆதரவை விழையும்,

மங்கள நூலகத்தார்

# கிழக்கோடும் நதி

## 1

சலிப்பூட்டும் நீளிரவு. ஆறு கீழ்த் திசை நோக்கிப் பெருகியது. சுழலும் அதன் அலைகள் அணைச்சுவர்மீது மோதின. ஆற்றிலிருந்து வீசிய காற்று அவ்விரவின் புழுக்கத்தைச் சற்றுத் தணித்தது. அணைக்கரை நெடுகிலும் இருபது அடிக்கு ஒன்றாகப் புயல்விளக்குகள் எரிவது தெரிந்தது. அவற்றின் மஞ்சள் ஒளி ஆற்று நீரில், உருகியோடும் பொன் போல் பிரதிபலித்தது. இருட்டுடன் மேகமூட்டமும் செறிந்த அவ்விரவில் அசைந்தாடிய அவ்விளக்குகளின் சுடர்கள் அச்சந்தரும் ஒரு சூழ்நிலையை உண்டு பண்ணின. அணைக்கரையெங்கிலும் பல்வேறு உயிரினம் இருந்தும், அச்சமயம் நிச்சப்தமே நிலவியது. அப்பெரிய ஆறு, கடலை நோக்கி விரைவாகச் செல்லும் ஓசையைத் தவிர வேறொன்றும் செவியில் படவில்லை. அதில் அடித்துச் சென்ற குப்பையும் கூளமும் இடிபாடுகளும் அதன் பயங்கர வன்மையைப் பறைசாற்றின.

திடுமென ஒரு வெடியோசை கேட்டது. உடனேயே நாலைந்து காவல் படையினர் எழுந்து வந்து, ஈரம் கசியும் அவ்வணைக்கரை யோரமாகவே, துப்பாக்கி வெடி வந்த காரணத்தை ஆராய நகர்ந்தனர்.

ஆனால் மறுகணமே மீண்டும் நிச்சப்தம் நிலவியது. துப்பாக்கி வெடி கேட்டு விழிப்புற்ற வேறு சிலர் மீண்டும் உறங்கலாயினர்.

வாங் சிங்-சி மட்டும் ஆற்று நீரின் ஒலிக்குச் செவி சாய்த்தவண்ணம் விழித்திருந்தான். தன்னைப் போன்ற வேலையாட்கள் பதின்மர் கோரைப்புல் வேய்ந்த தாழ்ந்த குடிசைகளில் ஒடுங்கி, ஆழ்ந்து நித்திரை செய்வதை நோக்கினான். துப்பாக்கி வெடியோசை அவன் உள்ளத்தைக் கலக்கிவிட்டது.

குடிசையிலிருந்து மெல்லத் தவழ்ந்துகொண்டே வெளியேறி, அணைக்கரையைத் தொட்டுக்கொண்டு ஓடிய ஆற்று நீரை நோக்கினான். அமைதி நிலவுவது போன்று அந்த இரவு பொய்த் தோற்றம் கொண்டிருந்தது. முன்பு ஹாங்கோவில் ஏற்பட்ட பெரு வெள்ளங்கள் அவன் நினைவுக்கு வந்தன. அப்படி ஏற்பட்ட பெருக்கொன்றினால் 1931-இல் அந்நகரம் அநேகமாக அழிந்து போய்விட்டது. இந்த ஆண்டும் அதைப் போல், ஏன் அதையும்விட, படுமோசமான வெள்ளம் வரக்கூடுமென ஜனங்கள் பேசிக்கொண்டனர்.

''சிங்-சி!'' என்று குடிசையிலிருந்து வெளியே வந்த மற்றொருவன் அவனைக் கூப்பிட்டான். ''வெளியே என்ன பண்ணிக் கொண்டிருக்கிறாய்? தூங்க வேண்டிய நேரத்திலே நீ இப்படி விழித்துக் கொண்டிருக்கிறாயே; இந்த அணையைச் சரிப்படுத்தும் வேலையில் நாம் உழைத்துச் சாகிறோம். இரவிலே நாம் சற்றுத் தூங்கினால்தானே...'' என்றான்.

புயல்விளக்குகள் வீசிய மங்கிய ஒளியில் அப்படிப் பேசியது ஸு கெங்-ஸெங்தான் என்பதை வாங் சிங்-சி புரிந்து கொண்டான். ஸிலிங் மாவட்டத்து அதிகாரியாக இருந்தவன் ஸு. வாங்கின் குடும்பத்துடன் அவனும் ஹாங் கோவிற்குத் தப்பியோடி வந்தவன். ''என்னமோ எனக்குத் தூக்கமே வரவில்லை'' என்று வாங் கைகளை விரித்துச் சோம்பல் முறித்துக் கொண்டான். ''விசித்திரமாகத்தான் இருக்கிறது எனக்கு. இந்த ஆறு ஆபத்தானது என்பதை



என்னால் நம்பவே முடியவில்லை'' என்றான். ஸு கெங்-ஸெங் மெல்லச் சிரித்து, ''நீ இங்கே இன்றுதானே வந்தாய்; பகல் வேளையில் பார்த்தால் இது பயங்கரமாக இருக்கும். நீர் மட்டம் நாளைக்குள் மளமளவென்று ஏறிவிடுமென்றே தோன்றுகிறது'' என்றான்.

''ஸு மாமா, பகல் வேளையில் இந்த ஆற்றைப் பார்க்கப் பயமாகவா இருக்கிறது உங்களுக்கு?'' என்றான் வாங்.

'ஆம்' என்பதைக் குறிக்க கெங்-ஸெங் தலையை அசைத்தான். அவன் எழுந்து நின்று அவ்விளங்காலைக் குளிர் காற்றில் தன் ஆடையை உதறிக் கொண்டான்.

''சற்றுக் குளிராகத்தான் இருக்கிறது'' என்றான் வாங்.

அதற்கு கெங்-ஸெங், ''என்னளவு உடல் வலிவுள்ளவனல்ல நீ'' என்றான்.

அவனுக்கு ஐம்பது வயதாகிவிட்டது. இருப்பினும் அவன் நடத்திய கடின வாழ்க்கை அவன் உடலை உறுதியாக்கிவிட்டது. அவன் அகதியாக ஓடி வந்து அந்த அணைக்கரை வேலையில் ஒரு மாத காலமாகக் கடுமையாக உழைத்துங்கூட அந்த உறுதி சிறிதும் குலையவில்லை.

வாங் சிங்-சி தன் மெலிந்த மார்பைப் பார்த்துக் கொண்டான்.

''என்னோடு ஒத்திட்டுப் பார்ப்பதில் பயனில்லை'' என்று கெங்-ஸெங், வாங்கின் தன்மானத்துக்கு ஊறு நேராமல் உஷாராகவே சொன்னான். அவனைத் தோளில் தட்டிக் கொடுத்து, ''உன் தந்தையும் நானும் ஒரே ஈடு. இளம் வயதிலிருந்து ஊரெங்கும் அலைந்து திரிந்து உழைத்துக் கடினம் பாய்ந்தவர்கள் நாங்கள். ஆனால் நீயோ? குழந்தைப் பருவத்திலிருந்து பள்ளிக்கூடம் சென்று படித்தவன். உன் போன்றவர் இது போன்ற அணைக்கரையின் கஷ்டமான வேலைக்கு வரவே கூடாது'' என்றான் ஸு.

தன் இளமைப் பருவத்தைப்பற்றி இவ்வாறு குறிப்பிட்ட பொழுது வாங் சிங்-சியின் உள்ளத்தில் ஒரு வேதனை

படர்ந்தது. அணைக்கரைக்கு அப்பால் சுழன்றோடும் ஆற்றையே அவன் வெறித்து நோக்கினான். சிதறுண்ட நினைவுகள் எத்தனையோ அவன் மனத்துள் முட்டின.

''வா, போகலாம்'' என்று ஸு நேசப்பான்மையுடன் மெல்லத் தட்டி யழைத்தான். ''போய்ச் சற்றுத் தூங்கு. அப்போதுதான் உடலில் தெம்பு வரும். ஒரு வேளை நாளை இரவெல்லாங்கூட வேலை செய்யும்படி நேரலாம்...தாங்கவே முடியாது'' என்றான்.

வாங் சிங்-சி அவனைப் பின்தொடர்ந்து குடிசைக்குள் சென்றான். மனித உடலிலிருந்து வரும் வியர்வை நாற்றத்தாலும், குப்பைக்கூளம் நிரம்பியிருந்ததாலும், தரையில் ஈரம் கசிந்ததாலும் அவ்விடத்துக் காற்றில் துர்நாற்றம் மிகுந்திருந்தது. சற்றுமுன் அவன் நுகர்ந்த ஆற்றோரத் தூய காற்றெங்கே, இந்த அழுகிய நாற்றமெங்கே! சிங்-சி தன் பாய்மீது முடங்கிப் படுத்தான். ஆனால் அவனுக்குத் துளியேனும் தூக்கம் வரவில்லை. தன் தந்தையைப் பற்றியும், தன் இளம்பிராயத்தைக் குறித்தும் ஸு சொன்னவை அவன் மனத்தை விட்டு அகலவே இல்லை. அவன் அந்தக் குடிசையின் இருளில் படுத்திருக்கையில் பழைய நினைவுகள், அந்நாள் காட்சிகள், அன்றைய பேச்சுக்கள் யாவும் அவன் மூளையைக் குழப்பின.

'சிங்-சி! வாழ்க்கையில் நேரிடும் ஏமாற்றங்களைக் கண்ணியமாக ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். பல்லைக் கடித்துக்கொண்டு சகித்துக் கொள்ள வேண்டியதுதான். உன் உறுதியை ஒருபோதும் கைவிடாதே. பொறுத்தவனே பூமியாள்வான். உறுதி குறைந்தால் எல்லாமே போய்விடும். சிங்-சி, இப்போது நிலைமை மாறிவிட்டது.' — இவை அவனுடைய தந்தை கூறிய கடைசிச் சொற்கள்.

அகதியாய் ஓடி வந்து அமைதி காணாமல் தவிக்கும் இந்நாட்களில் இந்தச் சொற்களை அடிக்கடி நினைவு கூர்ந்து தைரியம் பெறப் பார்ப்பது அவனுக்கு வழக்கமாகிவிட்டது. எப்போதுமே அவன் தன் தந்தையைப்பற்றி மதிப்பாகவே



நினைப்பவன். அவரை ஒரு மகாபுருஷரென்றே போற்றி வந்தான்.

நன்கு படித்த குடும்பத்தில் பிறந்தவராயினும் வாங் சிங்-சியின் தந்தை கை வேலையிலேயே ஈடுபட்டு வாழ்க்கை நடத்தியவர். இளமையில் நாடோடியாகத் திரிந்து பற்பல தொழில்கள் புரிந்த அவர், பிற்பாடு ஸிலிங் நதிப் படுகையில் பல படகுத் துறைகளுக்கு மேஸ்திரியாக இருந்து கௌரவத்துடன் வாழ்ந்தவர். வாங் சிங்-சியைப் பள்ளியில் சேர்த்தார். பின்னர், சீன - ஜப்பான் போரினால் பெருங் குலைவு ஏற்பட்ட போதிலும் அவனைப் பல்கலைக் கழகத்திற்குப் படிக்க அனுப்பினார். தாம் அலட்சியம் செய்ததுபோல் இராமல் தம் மகனுக்கு நல்ல கல்வி புகட்ட வேண்டுமென்பது அவருடைய அவா. ஆனால், அந்நாளில் அமைதி சிறிதேனும் இல்லை. உள்நாட்டுக் கலகத்தால் குழப்பமும் துன்பமும் எங்கும் மலிந்திருந்தன. விவசாயமும், வாணிபமும் அடியோடு பாழாயின. குடும்பங்கள் சிதறுண்டு போயின. அவன் தந்தை நோய் வாய்ப்பட்டார். அவர் இறந்த அன்று, ஸிலிங் நதிப் படுகையில் காம்யூனிஸ்டுக்கள் செங்கொடியை நாட்டியது வாங் சிங்-சியின் நினைவுக்கு வந்தது. அதற்கப்புறம் எதுவுமே சீர்த்திருந்தவில்லை. தனக்குக் கிடைத்த சிறு ஊதியத்தைக்கொண்டே குடும்பத்தைத் தன்னால் முடிந்த வரை நிர்வகிக்க வாங் சிங்-சி முயன்றான். ஆனால் 1954-ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் அவன் தந்தை காலமானதற்குச் சில மாதங்கள் கழித்து மூண்ட பெருவெள்ளம் அவனுடைய வீடு வாசலையெல்லாம் அடித்துக்கொண்டு போய்விட்டது. வெள்ளத்திற்கு அனைத்தையும் பறி கொடுத்த ஆயிரக்கணக்கான அகதிகளுடன் அவனும் ஒருவனாக ஹாங்கோ வந்தடைந்தான்.

ஆழ்ந்த பெருமூச்செறிந்தான் வாங் சிங்-சி. தன் தந்தையைப்போல் உடல் வலிவும், சாமர்த்தியமும் தனக்கு இல்லை என்பது அவனுக்குத் தெரியும். ஆயினும் தன் வயதான தாய், இளந்தங்கை, மற்றும் ஸியுமின் ஆகியோரைப் பராமரிக்க அவன் இயன்றதனைத்தும் செய்யவில்லையா?

லியு-மின்னைப்பற்றிய நினைவு அவன் உள்ளத்தை மிகமிகக் கலக்கியது. கண்களை மூடிக்கொண்டவனாய், அவளுடைய நளினமிகு நீள்வட்ட முகத்தையும், மென் முறுவலையும் தன் மனத்துள் வரைந்து பார்த்துக் கொண்டான். அவளை அவன் ஆண்டுக்கணக்காக அறிந்திருந்தான். லிலிங்கில் ஏற்பட்ட வெள்ளக் கொடுமையால் தன் தாய்தந்தையரை இழந்ததும் வாங்கின் குடும்பத்தவருடன் ஹாங்கோவிற்குத் தப்பி வந்தவள் அவள். ஒரே இடத்தில் நெருங்கி வாழ்ந்ததாலும், ஒரே வகைத் துன்பத்தை அனுபவித்ததாலும் அவ் விருவரிடையே தோன்றிய ஒரு பற்றுதல், மெல்லக் காதலாக வளர்ந்தது. அதைத் தடுக்க வாங் பெரிதும் முயன்றான். ஆயினும் லியு-மின்மீது அவன் கொண்ட காதல் குன்றவில்லை. அவளைத் தனக்கு உரிமையாக்கிக்கொள்ளத் துடிதுடித்தான். ஆனால் என்ன பிரயோசனம்? நிச்சயதார்த்தம் செய்துவிட்ட போதிலும் அவர்கள் மணந்துகொள்வதற்கு வாய்ப்பு இருந்தால்தானே! அவனைப்போல் வீடு வாசல், சொத்து எதுவுமே இராத ஓர் அகதி எவ்வாறு அவளை மணப்பான்? கும்பலாக அகதிகள் குவிந்து கிடந்த அந்த முகாமில் தன் இனியாளுக்கு ஆறுதல்மொழி கூறுவதற்கும் அவனுக்கு வழியில்லையே! 'மென்மையுணர்ச்சிக்கு இடமே அளிக்காது ஒரு போராட்டமாக அல்லவோ இங்கே வாழ்வு இருக்கிறது?' என்று வெறுப்பினால் சிணுங்கினான் வாங். 'இருவர் மணந்து இல்லறம் தொடங்குவதற்கு இங்கேதான் எத்தனை நேர்த்தியான சூழ்நிலை! என்னைப்போல் லியு-மினும் துயில் துறந்து இக்காரிருளிடை என்னைக் குறித்து ஏங்கிப் பாயில் புரண்டு வெதும்புகின்றாளோ?'

வானத்தில் வைகறையின் செம்மைக்கீற்று புலனாகியது. புயல்விளக்குகளின் ஒளி மழுங்கத் தலைப்பட்டது. பொழுது விடிந்ததுமே அணைக்கரையில் மெய்வருந்த வேலை செய்யப் புறப்படவேண்டியதுதான். வாங் சிங்-சி மெல்ல எழுந்து குந்திக்கொண்டான். காலைப்படரொளியில் ஆறு, மங்கலாக மின்னுவதை நோக்கினான். முன்னாள் இரவில் பார்த்த



போது இருந்ததைவிட அது அதிகம் மாறிவிட்டதாக அவனுக்குத் தோன்றவில்லை. ஒரு சிறு தூக்கம் போட மீண்டும் படுத்துக்கொண்டான்.

லூ கெங்-லைங் படுக்கையில் மூரிக்கொண்டே கொட்டாவி விட்டான். அவன் எப்போதுமே மெலுக்காகத் தூங்குபவன். வேலைக்கு ஆயத்தம் செய்ய வழக்கமாக அவன் எல்லோருக்கு முன்னரே எழுந்துவிடுவான். பதினான்கு ஆட்கள் அடங்கிய ஒரு 'குழுவின் மேஸ்திரி அவன். அவர்களுள் பதினொரு பேர் அவனைப்போல் லிலிங்கிருந்து வந்த அகதிகளே. லிலிங்கில் மாவட்டத்து அதிகாரியாய் இருந்ததால் மக்களுக்கும் காம்யூனிஸ்டுக்களுக்கும் இடையில் அவன் வேலை பார்க்க வேண்டியிருந்தது. அதனால் எச்சாராருக்கும் அவனிடத்தில் நம்பகமோ பிடித்தமோ ஏற்படவில்லை. எனினும் அவன் தந்தை தனக்குப் பழைய நண்பன் என்றதனால் வாங் சிங்-சி மீதும், அவன் குடும்பத்தவர் பாலும் அவன் அக்கறை காட்டலானான்.

லிலிங்கிலிருந்து அவர்கள் தப்பியோடி வந்த சமயம், தனக்குள்ள பகுத்தறிவாலும், மேலதிகாரிகளின் போக்கை நன்கு அறிந்தமையாலும் அக்குடும்பத்தாருக்கு வேண்டிய உதவிகள் புரிந்தான். ஆகவே, சாங்குங் அணைத்திட்ட வேலையில் அவன் குழுவிலேயே தன்னைச் சேர்க்கும்படி வாங்சிங்-சி வேண்டிக்கொண்டதில் வியப்பில்லை.

கெங்-லைங் படுக்கையிலிருந்து எழுந்து குடிசையில் படுத்துறங்கிய மற்றவர்களைத் தாண்டிக்கொண்டே வெளியே வந்து புரண்டோடும் ஆற்றை நோக்கினான். புயல்விளக்குகளை இன்னும் அணைக்கவில்லை. கணக்கற்ற விட்டில் பூச்சிகள் அவற்றின் சுடர்கள்மீது பறந்து விழுந்து பொசுங்கின. இந்தக் காட்சியைச் சோம்பலுடன் பார்த்த வண்ணம் நின்றான் லூ.

எதிர்ப்புறமாக இருந்த இரு குடிசைகளிலிருந்து விரசமான சிரிப்பொலி எழவே அவன் திரும்பினான். தன்னை நோக்கி ஒரு பெண் வருவதைக் கண்டான்.

''ஸு - மாமா!'' என்று அந்தப் பெண் இரைக்க இரைக்கக் கூப்பிட்டாள். ஸு அந்த மங்கலொளியில் அவளைக் கூர்ந்து நோக்கித் தலையை அசைத்துவிட்டு வாங் சிங் - சியை எழுப்பச் சென்றான். ''யாரோ ஒருத்தி உன்னைக் காண வந்திருக்கிறாள்'' என்று சிங் - சியிடம் வந்த வளைச் சுட்டிக் காட்டினான் ஸு.

''ஓ ஸியு - மின்னா!'' என்றான் சிங் - சி. ''இந்த மாதிரி நீ இரவில் இங்கே தனியாக வரக்கூடாது, தெரியுமா?'' என்றான். தன் களைப்பையும் மறந்து அப் பெண் மெல்ல முறுவல் செய்தாள்.

''உனக்காக எங்கெல்லாம் தேடுவது நான்? ஒரு மணி நேரமாக உன்னைத் தேடி அலைகிறேன்'' என்றாள் அவள்.

அங்கே குடியிருந்த மற்றவர்களின் இன்துயில் கலையாம லிருப்பதற்காக அவளை வேறுபுறமாக அழைத்துவந்து சிங்-சி மெல்லவே பேசினான்: ''என்ன நடந்தது, அம்மாவுக்கு என்னமாவது உடம்பா?''

''அம்மாவுக்கு ஒன்றுமில்லை'' என்று அவள் நாணத்தால் குறுகச் சொன்னாள். ''இங்கே காலையில் குளிர் ஒடுக்கு கிறது என்று அம்மா இந்தச் சட்டையை என்னிடம் கொடுத்தனுப்பினாள். இதைப் போட்டுக்கொண்டால் இந்தக் குளிரில் கதகதப்பாக இருக்குமென்று சொன்னாள்.''

''அப்படி எனக்குக் குளிர் தெரியவில்லையே'' என்று அவன் மறுத்துக் கூறியபோதிலும் தன்னைக் காணத்தான் அவள் இப்படி ஒரு சாக்குக் கண்டுபிடித்தாளென்று உள்ளூறப் பூரிப்படைந்தான்.

''இரவு ஏதாவது விசேஷம் உண்டா?'' என்றபடி அவள் பருத்தித் துணிச் சட்டையை அவனிடம் தந்துவிட்டு, ஆற்றைப் பார்க்கத் திரும்பினாள். ''இந்த முகாமில் எல்லோரும் பேசிக்கொள்கிறார்கள், நீர் மட்டம் ஆற்றில் ஏறிக்கொண்டே வருகிறதாமே? சின்னத் தங்கைகூட இதே திகிலாக இருக்கிறாள்'' என்றாள் அவள்.



''இப்போது திகில்படுவதற்கு ஆபத்து ஒன்றும் வந்து விடவில்லை'' என்றான் சிங் - சி, மெல்லச் சிரித்து.

புலரிப்பொழுதில் ஆற்றிலிருந்து வீசிய காற்று சற்றுச் சிலுசிலுவென்று இருந்தது. எனவே சட்டையை உடலில் போட்டுக்கொண்டான்.

''சிங் - சி!'' என்று ஸியு - மின் அவன் கையை மெல்லத் தீண்டினாள். ஒரு சிறு காகிதப் பொட்டலத்தை ஏந்தி அவள், ''நேற்று இராச்சாப்பாட்டிலிருந்து இந்தச் சோற்றுருண்டையை எடுத்து வந்திருக்கிறேன்; இதை எடுத்துக்கொள்'' என்றாள்.

ஸியு - மின் கொண்டு வந்தது அற்பப் பொருள்தான். ஆயினும் எல்லோரும் வயிற்றுக்குப் போதிய அளவு கிடைக்காமல் வாடிய வேளையில் மிகுத்துக் கொடுத்ததால் அதுவே பெருமகத்துவம் பெற்றுவிட்டது.

இளங்காலை வெளிச்சத்தில் ஸியு - மின்னின் முகம் பசலை பாய்ந்து விளங்குவதைக் கவனித்தான் சிங் - சி. தனக்கு அவளிடம் மூண்ட காதலையும், அவள் தன்னைக் காதலிப்பதையும் திடுமென உணர்ந்து புளகம் கொண்டான். ஸியு - மின்னை வாரி அணைத்திடத் துடித்தான். ஆனால் பிறர் பார்த்து விடப் போகிறார்களே என்ற அச்சம் வரவே தயங்கினான்.

''ஓ ஸியு - மின்!'' என்றபடி அவள் கரம் ஒன்றைப் பற்றினான். ''முடிந்தபோது உன்னைக் காண வருவேன்'' என்றதும் அவள் அன்புடன் ஈந்த அச்சோற்றுருண்டையை நோக்கினான். அதை அவள் வாயருகில் வைத்து, ''இதோ இதை நீயே சாப்பிடு. விடுதியில் நமக்கு வழங்கும் சோற்றைவிட அணைக்கரையில் தரும் சாப்பாடு எவ்வளவோ நன்றாக இருக்கிறது'' என்றான்.

அவள் சிரித்து மெல்லத் தலையசைத்தாள். ''நாம் இதைப் பங்கிட்டுக்கொள்வோம்'' என்று சோற்றுத்திரளை இரு கூறாக்கினாள். நாலைந்துவாய் போட்டுக்கொள்ளும் அளவுக்கு இருந்தது அது.

"ஸியு - மின் தனியாக மட்டும் இந்தப் பக்கம் வராதே; அணைப்பக்கமாகவும் போகாதே...இருட்டிலும் வெளியே செல்லாதே. அம்மாவிடம் சொல்லு என்னைப்பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை என்று."

"சரி" என்று அவனையே பருகிவிடுவதுபோல் ஸியு-மின் பார்த்தாள். அவனை விட்டுப் பிரிய மனம் வரவில்லை.

"உங்களை நீங்களே ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். உங்கள் விடுதியில் வயிற்றுப்போக்கு கண்டிருக்கிறது என்று கேள்விப்பட்டேனே?" என்றான் வாங் சிங் - சி.

"ஆமாம்."

"கவலைப்படாதே, ஸியு - மின். வெள்ளத்தின் மட்டம் இறங்கியதும் நாம் நம் இடத்திற்கே திரும்பிப்போவோம். மணவாழ்க்கை நடத்துவோம்"—வாங் சிங் - சியின் பேச்சில் உறுதி தொனித்தது. அவன் அணைக்கரை வேலைக்கு அப்போதுதான் வந்திருந்தானாகையால் வெள்ளக் கொடுமை எவ்வளவு பெரியதென்பதை அவன் உணரவில்லை.

ஸியு - மின் தலையசைத்தபடித் திரும்பினாள். அவள் கண்களிலிருந்து நீர்த்துளிகள் உருண்டு தாடையில் வழிவதை வாங் சிங் – சி கவனித்தான்.

எதற்காக அவள் அழுகிறாள் என்பது அவனுக்குப் புரியவில்லை. அவளைத் தேற்ற வேண்டும் என்பதை மட்டும் உணர்ந்தான். அவளைத் தன்னருகில் இழுத்து உடலுடன் கெட்டியாக அணைத்துக்கொண்டான்.

"ஸியு - மின், வருத்தப்படாதே. இப்படியே இருக்காது காலம். இங்கே எதுவும் சரியாக இல்லை; மனசுக்கும் பிடிக்கவில்லைதான். வெள்ளம் எப்போதுமா இருக்கும்? விரைவில் குறைந்துவிடும். அப்புறம் பழயபடி நம் இடத்திற்கே திரும்பிவிடுவோம், ஒன்றாய் இருப்போம்" என்றதும் கண்ணீர் தோய்ந்த அவள் இமைகளை முத்தமிட்டான் வாங் சிங்-சி. தன் முயக்கிலிருந்து அவளைத் தளர்த்தினான். அவள் முகத்தில் மலர்ச்சி தோன்றியது. சிரித்தாள். போகும் போது இருவரும் ஒன்றும் பேசவில்லை. அவள் கண்ணுக்கு மறையும்வரை வாங் சிங் - சி மட்டும் அவள் உருவத்தையே நோக்கிக் கொண்டிருந்தான்.



வங்கியம் விம்மியது. பொழுது நன்றாகப் புலர்ந்துவிட்டது. வலிவு மிகுந்த இயாங்கிட்ஸி நதி சங்குங் அணையின் கட்டிலிருந்து மீறக் கொந்தளித்தும், நுரைத்தும், பெருகியும் பொங்கியும் ஓடியது.

## 2

ஹாங்கோ நகரமும், அதற்கு இணையான வூசாங், ஹனியாங் என்ற இரு நகரங்களும், ஹான் ஆறும் இயாங்கிட்ஸி நதியும் ஒன்றுகூடும் சமவெளிப் பரப்பில் அமைந்தவை. இயாங்கிட்ஸி அவற்றின் கிழக்கெல்லையாகவும் ஹான் என்ற அதன் கிளையாறு அவற்றின் தென்புறமாகவும் ஓடுகின்றன. திபெத் பருவதங்களில் பனி உருகுவதாலும், பருவகால மழைகளாலும் கோடையில் ஏராள நீர் இயாங்கிட்ஸியிலும் அதன் உபநதிகளிலும் சேரும். கரை புரளக் கீழ்த்திசை நோக்கிப் பழுப்பு நிற வெள்ளமாக இயாங்கிட்ஸி ஓடும். அப்போது ஹாங்கோவில் அதன் மட்டம் சாதாரணமாகச் சுமார் ஐம்பது அடிவரை ஏறிவிடும். அங்கே கரையில் உடைப்பு ஏற்படாமல் இருக்கப் பெரிய கல்லரண்கள் காத்து வருகின்றன. எனினும் மலைகளில் ஏராளமான மழை பெய்யும் போது அடிக்கடி இயாங்கிட்ஸியும், ஹான் ஆறும் கரையைக் கடந்து பள்ள நிலங்களுள் பாய்ந்து விடுகின்றன. இந்தக் கல்லரண்கள் சுற்றிலும் இராமல் போனால் அப்போது இம் மூன்று நகரங்களும் வெள்ளத்தில் அழுந்திப் போய்விடும். ஹாங்கோவிற்கு வடக்கிலும், கிழக்கிலும், பெரிய வில் வளைத் தாற்போல் பல மைல் தொலைவுக்குச் சங்குங் அணைத்தடுப்பு காத்து நிற்கிறது. நகருக்குப் புறம்பாக, மேடுபள்ளமான

நிலங்களில் இருபது அடியிலிருந்து ஐம்பது அடி உயரம் வரை எழும்பி நிற்பது அணைகளே. அதன் அகலமான உச்சிமீது சாலையொன்று செல்கிறது. எதிர்பாராத அளவு வெள்ள நீர் வரும்போது அந்தப் பேரணைகூடப் பயனற்றுப் போய்விடும். அச்சமயம் நீர் விசையையும், அரிப்பையும் தடுக்க அந்த அணை மீது மணல் மூட்டைகளையும், மட்குவியலையும் ஏற்றி மட்டத்தை உயர்த்துவர்; கடுவிசையாகச் செல்லும் வெள்ளக் காலுக்கு ஈடுகொடுக்க மரக்கட்டைகளையும் முன்னிறுத்துவர்.

1954-இல் இயாங்கிட்ஸியில் பெருவெள்ளம் வந்தது. ஆற்றுக்கு அடுத்ததாக உள்ள இடங்கள் வெள்ளக்காடாயின. தப்பியோடி வந்த மக்கள் ஹாங்கோ நகர்ப்புறமெங்கும் முகாம்களில் நெறிக் கிடந்தனர். நகரவாசிகள், நகர்த் துறைகளை வெள்ளத்திலிருந்து பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டனர். ஆயிரக்கணக்கில் வந்து குவிந்த அகதிகளை ஊசாங்கில் லாங்கியாங் அரணையும், ஹான்யாங்கில் தெங் ஓாங் அரணையும், ஹாங்கோவைக் காக்கும் சங்குங் அரணையும் வலுப்படுத்தும் வேலையில் ஈடுபடுத்தினர்.

இப்போது வேலையாட்கள் வந்து குழுமுகின்றனர், சங்குங் அரண்பக்கம். சில நாட்களாகப் பெய்த மழையில் ஆற்று நீர்மட்டம் உயர்ந்து வரவேதான் இந்த ஏற்பாடு. அரண்மீது வெள்ளநீர் பெருந்திரளாக வந்து மோதி புடைக்கிறது. ஆயினும் அந்தப் பக்கத்தில் ஆபத்து நேரிடக்கூடிய வாய்ப்பு இருந்தும் வேலையாட்கள் அலட்சியமாக மெல்லப் பணிபுரிகின்றனர். அதைக்காண சிங்-சிக்கு ஒரே குழப்பமாக இருந்தது. இருபத்து நான்கு மணி நேரம் அவன் துளிக்கூடக் கண்ணை மூடவில்லை. ஆனாலும் எடுத்துக் கொண்ட வேலையைச் செய்ய அவனுக்குத் தெம்பாகவே இருந்தது. பொங்கி நுரைத்து விரையும் ஆற்றையே வெறித்துப் பார்த்தான். வாழ்வதா சாவதா என்ற இக்கட்டான பிரச்னை எதிர்நோக்கி நிற்கையில் இப்படி மக்கள் சற்றும் அக்கறை கொள்ளாமல் இருந்ததைப் பார்த்து



அவனுக்கு எதுவுமே புரியவில்லை. இந்தக் கடின முயற்சியில் சிறிதேனும் தளர்ச்சி ஏற்பட்டால் ஹாங்கோ நகரில் ஆயிரக் கணக்கான மக்கள் ஆபத்துக்குள்ளாவர் என்பதை அவன் நன்கறிந்திருந்தான்.

மெத்தனத்திற்குக் காரணத்தைத் தெரிந்து கொள்வதற்கு அவன் கெங்-லெங்கை அண்டினான்.

அவனோ கோபத்தால் சற்றுக் கடுகடுப்பாகவே பேசினான். ''பிறர் விஷயத்தை நீ ஏன் அறியப் பார்க்கிறாய்? உன் வேலையைக் கவனி, போ'' என்றான்.

சிங்-சிக்குத் தூக்கிப் போட்டது. அவன் மனம் புண்ணானது. விஷயம் தெரிந்து கொள்ள மேலும் அவன் வற்புறுத்தும் சமயம் திடுமெனப் பெரியதோர் கூச்சல் கிளம்பியது.

''எங்கே மணல் மூட்டைகள்? சீக்கிரம், இந்தப் பக்கம்'' என்று யாரோ அலறுவது கேட்டது.

''எட்டாம் பிரிவு...இங்கே உடைப்பு கண்டிருக்கிறது.''

''சடுதி, மணல் மூட்டைகளைக் கொண்டு போங்கள் ஓடுங்கள்; ஆச்சா—''

சிங்-சிக்குக் கால் எழவே இல்லை. மூன்று காம்யூனிஸ்ட்டு அதிகாரிகள் இங்குமங்கும் ஓடுவதும் கூவுவதுமாய் இருந்தனர். ஆனால் பக்கத்தில் இருந்த வேலையாட்கள் வேணுமென்றே அவர்கள் சொல்வதைக் காதில் போட்டுக் கொள்ளாமல், ஏதோ வேறு வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருப்பது போல் பாசாங்கு செய்தனர். அவர்கள் அழைப்புக்கு சிங்-சி ஒருவனே நின்று செவிசாய்த்தான்.

''ஏன் நிற்கிறே? வா...'' என்று காம்யூனிஸ்ட்டு அதிகாரி ஒருவன் அவனை இழுத்தான். ''எட்டாம் பிரிவு வேலை செய்யுமிடத்திற்குப் போ. மடமடவென்று மண்ணைத் தூக்கிக் கொட்டு!'' என்றான்.

மறுத்துக் கூற முடியாமல் அவன் பின்னுல் சிங் - சி செல்ல வேண்டியதாயிற்று. அந்தக் காம்யூனிஸ்ட்டு அதிகாரி மணல் மூட்டைகளைக் கைமாற்றி அனுப்ப மேலும் சில ஆட்களைத் திரட்டிக் கொள்ளச் சொன்னுன். எனவே, பக்கத்திலிருந்த லீயையும், சாங்கையும் கூட்டிக் கொண்டான். மணல் மூட்டைகளைத் தூக்குவதில் முன்பே ஈடுபட்டிருந்த நூறு பேருக்குமேல் கொண்ட பட்டாளத்துடன் சேர்ந்து கொண் டான். அவர்களுக்கெல்லாம் முன்னுகச் சென்று, உடைப்பு கண்ட இடத்தில் மண்ணையும், மணல் மூட்டையையும் போடலானுன்.

அப்படி ஆபத்துக்கிடமான உடைப்பு அல்ல அது. மணல் மூட்டைகளை அடுக்குவது திருப்திகரமாகவே நடந்து கொண் டிருந்தது. ஐந்துமணி நேரம் விடாமல் வேலை செய்தான் சிங் - சி. அவனுக்கு ஓய்வு தந்தனர். தன் பழைய இடத்துக்கே திரும்பிப் போனுன். வேலை செய்யும் குழுவினர் கலைந்து போகு முன்பு, சற்றுத் தடித்த உடலுள்ள ஒருவன் கறகறப் பான குரலில் பேசலானுன். வெற்றியுடன் அவர்கள் தம் வேலையைச் செய்ததை அவன் பாராட்டிச் சொற்பொழி வொன்றையே நிகழ்த்தி விட்டான். அந்த மனிதன் ஒன்று மிராத விஷயத்தைப் பெரிதாக்கினுன் என்றே நினைத்தான் சிங் - சி. மிகையாக இப்படிப் புகழுரை வழங்குவது அவனுக்கு சற்று வியப்பாகவே இருந்தது. அந்த அதிகாரி அணிந்திருந்த சட்டையின் மார்புப் பகுதியில் ஒரு பட்டையில் 'சுவு பெய் - ஹிங்' என்ற பெயர் இருப்பதைக் கவனித்தான்.

அவனுடைய சொற்பொழிவு முடிந்ததும் சிங் - சி தன்னி டத்திற்குத் திரும்பலானுன். அப்போது சாங்குடனும் லீயுடனும் அந்த வேலை பற்றிப் பேசவேண்டுமென்று விரும் பினுன். ஆனுல் சாங்கைப் பார்க்க முடியவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வரும் லீ மட்டும், சிங் - சி கூப் பிடவே ஏதோ முணுமுணுத்தான். தன்னிடத்தை அடைந்த போது குடிசை யோரமாக ஒரு பாறைத் துண்டுமீது சாங் உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.



''அடே, சாங், எப்போதடா வந்தாய்? இவ்வளவு சீக்கிரமாக எப்படித் திரும்ப முடிந்தது?'' என்றதும் சிங் - சி வலியெடுக்கும் தன் கைகளை உதறியவண்ணம், ''ஐந்தரை மணி நேரம் வேலை செய்து நிரம்ப ஓய்ந்து போய்விட் டேனடா'' என்ருன்.

''ஓய்ந்து போய்விட்டாயா? உதவிக்கு ஓடும் வீரன் பேசுகிற பேச்சாக இல்லையே?'' என்று சாங் தன் முதுகைக் காட்டி ஏளனமாகச் சொன்னுன்.

''அடே சாங், என்ன இப்படிப் பேசுகிருய்? உனக்கு என்னமாவது தவறு செய்தேனுடா?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. நீ யாருக்குமே தவறு இழைக்காதவனுயிற்றே'' என்றதும் சாங் வேணுமென்றே எச்சில் துப்பிவிட்டு, மணற்கரைமீது வேலை செய்யும் கும்பலை நோக்கினுன்.

சிங் - சிக்கு ஒன்றுமே புரியவில்லை. பாறைத் துண்டின் மறுபுறம் அமர்ந்து தன் கையிலுள்ள அழுக்கைத் துடைத்துக் கொண்டே, ''சாங், உன் மனசை வருத்தும் விஷயத்தைத் தான் சொல்லேன்?'' என்ருன்.

லீ அச்சமயம் அங்கு வந்தான். கவனிக்காதவன் போல் சிங் - சியின் கால் விரல்களை மிதித்துவிட்டான். வலி தாளா மல் அவன் துள்ளிக் குதித்தான். லீ மன்னிப்புக் கேட்கும் போது சாங், ''இவ்வளவு பெரிய அசகாயசூரன் இந்தத் துளி நோவுக்குத் துடித்துப் போகிருயே!'' என்று குத்திக் காட்டினுன்.

இந்த ஏளனச் சொல் கடைசியாக சிங் - சியைக் கிளறி விட்டது. கோபம் பொங்க அவன், ''பசங்களா, என்ன வந்துவிட்டது உங்களுக்கு? என்னை எதற்காகக் கிண்டு கிறீர்கள்?'' என்று சீறினுன்.

''என்னடா சொல்லிவிட்டேன்?'' என்று சாங் எழுந்து தன் தோளை உலுக்கி, ''அதற்காக என்ன செய்யப் போகிருய் எங்களை?'' என்று எறிந்தாற்போல் கேட்டான்.

''நீங்கள் என்ன பண்ணுவதாக இருக்கிறீர்கள்? வாருங்கள் பார்க்கலாம்'' என்று சிங் - சியும் சாங்கின் அறை கூவலை ஏற்கத் தயாராயினுன்.

''சும்மாக் கிடங்கடா! இரண்டு பேரும் என்னமோ குஸ்தி யளவுக்கு வந்து விட்டீர்களே? விளையாட்டாக நினைத்துக் கொள்ளுங்கள் இதை'' என்று லீ குறுக்கிட்டு அவர்கள் இரு வரையும் பிரித்தான். வேணுமென்றே அவன் சிங் - சியைச் சற்று வலுவாக ஒதுக்கித் தள்ளும்போது அவன் தரையில் கவிழ்ந்து விட்டான்.

ஏதாவது சண்டையைக் கிளப்ப வேண்டுமென்றே இரு வரும் திட்டம் போட்டதை சிங் - சி புரிந்து கொண்டான். ஆனுல் அநாவசியமாக அதில் மாட்டிக் கொள்ள அவனுக்கு விருப்பமில்லை. கோபத்தை அடக்கிக் கொண்டு அங்கே நிற்காமல் போய்விட்டான். அவனுக்குக் களைப்பாக இருந் தது. ஓய்வை நாடி ஒரு தனியிடத்தை அவன் தேடிச்சென்ற போது ஒரு கண்காணி அவனை மடக்கினுன். கரைக்கு மண்ணும் மணலையும் கொண்டு சேர்க்கும் பணிக்கு ஏவினுன்.

அன்று மாலை மங்கும்வரை அவன் உழைத்தான். பிறகு தான் அவனுக்கு விடுதலை கிடைத்தது.

குடிசைப்பக்கம் ஒரே கும்பல். அவன் திரும்பி வருவதைப் பார்த்துச் சாங்கும் லீயும் சேர்ந்து, ''வரார் ஐயா, உதவி வீரர்!'' என்று ஏளனம் செய்தனர்.

சிங்-சி அவர்களைச் சட்டை செய்யவில்லை. தனக்கென விட்டிருந்த இடத்தில் படுத்துக் கொண்டான். அன்றுபோல் அவன் தன் வாழ்விலேயே உழைத்ததில்லை. அதுபோன்ற உடல் வருத்தும் வேலைக்கு அவன் பழக்கப்பட்டவனே யன்று. அவனுக்கு ஓய்வு கிடைத்தபோது ஏறக்குறைய அவன் ஒடிந்து கீழே விழும் நிலைக்கு வந்துவிட்டான்.

''சிங்-சி'' என்று ஸூ கெங்-ஸெங்கின் குரல் கேட்டது. சிங்கைப் பார்த்து அவன் இளித்து, ''இப்போதாவது தெரிந்ததா, அந்த அணை வேலை எவ்வளவு கஷ்டமென்று?'' என்ருன்.



சிங்-சி முகத்தைக் கடுத்துக்கொண்டான். ''அவருக்கென்ன, எல்லோருக்கும் பாடம் சொல்லித் தரும் அசகாய சூரராச்சே!'' என்று சாங் ஏளனம் செய்து, ''அண்ணே, இன்னிக்கு அவர் எல்லாரையும் முந்திக்கொண்டு வேலை செய்த ஜோரைப் பார்க்க வேண்டுமே! மற்றவங்களையும் இழுத்துப் போட்டுக் கொண்டார்'' என்றான்.

சிங்-சிக்குச் சட்டெனப் புரிபட்டது; தங்களை அந்தக் கடுமையான வேலையில் ஈடுபடுத்தியதற்காகவே அவர்கள் கொதிப்படைந்துள்ளனரெனத் தெரிந்து கொண்டான். அவன் எழுந்து உட்கார்ந்து படபடவென்று, ''சாங், அது என் எண்ணமே அல்ல; என்னைக் கட்டாயப்படுத்தினார்கள்'' என்றான்.

''இல்லை, நீ அப்படி எண்ணவில்லைதான். ஆனாலும் மற்றவர்களை அதட்டி வேலை வாங்குவதன்முன் நீ நன்றாக வேலை செய்ய வேண்டாமா?'' என்றதும் ஏளனம் தொனிக்கத் தொடர்ந்தான்: ''எல்லோரையும் மேய்த்து வேலை வாங்கும் அளவுக்கு நீ வரும்போது ஹாங்கோ நகரமே இராது போனாலும் போகலாம்''.

சிங்-சி சினந்து, துள்ளி எழுந்தான். ஸு கெங்-ஸெங் அவனை அழுத்திக் கீழே உட்கார வைத்து, "சிங்-சி, பேசாதே! போய்த் தூங்கு. ஞாபகமிருக்கட்டும், பாதி ராத்திரிக்கு மேல் நீ காவல் புரியப் போகவேண்டும்'' என்றான்.

சிங்-சி தயங்கினான்; கோபமாக ஏதோ முணு முணுத்தபடியும் தன்னிடத்திற்கு வந்து படுத்தான். சற்று நேரங்கழித்து ஸு கெங்-ஸெங் அவன் பக்கலில் மெல்ல வந்து அமர்ந்தான்.

''தம்பி, அதிக உற்சாகமுள்ளவனாகக் காட்டிக் கொள்ளாதே!'' என்று கிசுகிசுத்துவிட்டுச் சற்று நிறுத்தினான். சிங்-சி அவனையே மனக்குழப்பத்துடன் நோக்கினான்.

ஸு மேலும் தொடர்ந்தான்: ''அந்தக் கரைப் பக்கம் எல்லாமே விசித்திரம்தான். அதை நீ தெரிந்து கொள்ள

வேண்டியது அவசியம். அங்கே உள்ளவர்கள் ஒவ்வொருத்.
தரும் வேலை வாங்கும் அந்த அதிகாரிகளைச் சபித்துக்
கொட்டுகின்றனர். உன் வேலையைச் செய்தாயிற்றா, வந்து
விடு: மற்ற விஷயங்களை யார் கவனித்தால் என்ன? இது
ஏன், அது ஏன் என்று யாரையும் கேட்காதே. அவர்கள்
எல்லாம் ஏன் அந்தமாதிரி சரியாக வேலை செய்யாமல்
நழுவுகிறார்கள் என்றாயே, அந்தக் காம்யூனிஸ்ட்டுப் பேர்
வழிகளை அவர்கள் வெறுக்கின்றனர். பகல் வேளையில் இதை
எப்படி உன்னிடம் உடைத்துக் கூறுவது? நம்மைச் சுற்றிலும்
பலர் வேவு பார்க்க அலைகின்றனர்.'' ''காம்யூனிஸ்ட்டுக்
கள்மீது வெறுப்பா?''—சிங்-சிக்கு இன்னும் தெளிவாகவில்லை.
ஆட்கள் மெத்தனமாக வேலை செய்வதன் காரணம்.
''இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? மண்ணணை சரிந்
தால் அவர்களுக்கு மட்டுமல்ல எல்லோருக்குந்தானே
அபாயம்?'' என்றான்.

''ஆமாம்'' — ஸூ கெங்-ஸெங் கடுத்த சிரிப்புடன் தோளை அசைத்து, ''அந்த மண்ணணை சரிந்தாலும் சரி, சரியாவிட்டாலும் சரி, நாம் செத்தொழிய வேண்டியது தான். கொஞ்சம் முன்னால் இறந்தால் என்ன, பின்னால் இறந்தால் என்ன, இரண்டும் ஒன்றே'' என்றான்.

''அந்த அணைக்கரையைப் பாதுகாக்க நாம்தானே பொறுப்பேற்று இருக்கிறோம்!'' என்றான் சிங்-சி.

''உண்மையில் வீரனென்று பெயர் எடுக்க வேண்டு மென்பது உன் ஆசையா?'' என்றதும் ஸூ கெங்-ஸெங் நகைத்து, ''தம்பி—'' என்று நிறுத்தினான்.

''நான் வீரனாக வேண்டுமென்று விரும்பவில்லை. அப்படி ஒருநாளும் ஆகவும் மாட்டேன். இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டுவிட்டபடியால் சரியாகச் செய்ய வேண்டுமே என்று தான் சொன்னேன். இப்படி வேலையில் பராக்கு இருந்தால் யாருக்கும் நன்மையிராதே'' என்றான்.

''சிங்-சி, மனச்சாட்சிக்கு விரோதமாக இருக்கிறதென்று நினைப்பதற்கு இது சமயம் அல்ல. உனக்கு இதனால்



நன்மையே இல்லை. இன்னும் அவர்களுடைய கொடிய முறைகளை நன்கு அறியவில்லை நீ!''

சிங்-சி வாளாயிருந்தான். காம்யூனிஸ்ட்டுக்கள்மீது எங்கும் துவேஷம் பரவியிருந்தது அவன் அறிந்ததே. ஆயினும், வெள்ளத் தடுப்பு வேலை நல்லதொரு பணி என்றே அவன் நினைத்தான். இது போன்ற வெள்ளந்தானே அவனை வீடு வாசலிழந்த அகதியாக்கி விட்டது!

வெளியே கூச்சல் கேட்டது:

'மதகில் நீர் கசிகிறது...மதகில் உடைப்பு' —

திடுமென அணைக்கரைப்பக்கம் ஒரே சந்தடி. ஸூ கெங்-ஸெங் அவனை இடித்து, ''தம்பி! இதைவிட இன்னும் ஆபத்தானது நேரிடப் போகிறது. இது ஒன்றுமே இல்லை; பரபரப்படையாதே. உடல் பலத்தைக் காத்துக்கொள்'' என்றான்.

அணைப் பாதுகாப்பு வேலைக்கு ஆட்களைக் கூவியழைத் தனர். ஆனால் சிங்-சி, ஸூவின் உபதேசப்படி இருந்த இடத்தைவிட்டு நகரவில்லை. மதகில் கசிவென்றால் சற்று ஆபத்தான விஷயந்தான். மணலில் அப்படிக் கசியத்தலைப் பட்டால் மடமடவென்று நீர் புகுந்து அணைக்கரை உடைத்துக் கொள்ள எத்தனை நேரமாகும்? சங்குங் அணையில் இது போன்ற ஆபத்துக்க்ள் அடிக்கடி நேர்வதுண்டு. எனவே நகரைக் காக்கும் பெருமுயற்சியில் சற்று நேரம் கூட ஓய்வுக்கு இடமிருக்கவில்லை.

சிங்-சி இருளார்ந்த ஆற்றையே நோக்கினான். நீத்தம் எதற்கும் மசியாமல் உறுமிச் சென்றது. ஆற்றின் நீர்மட்டம் சற்று ஏறியிருப்பதாகவே தோன்றியது.

திடுமென இருளைக் கீறும் இரு துழாவி விளக்குகளின் ஒளி அணைக்கரைமீது பாய்வது தெரிந்தது. கட்டளையிடும் தளத் திலிருந்து ஒலிபெருக்கியின் மூலம், 'ஒன்பதாவது பிரிவில் உடைப்பு எடுத்துவிட்டது. அணைக்கரை உடைந்துவிட்டது. உடனே வரவும்' என்ற கட்டளை பிறந்தது.

தெருக்கோடியோர விளக்குகள் பல ஒளிர்ந்தன. பலபேர் பேசும் குரலோசையும், கட்டளைக் கூச்சல்களும் ஆற்றின் பொங்கொலியுடன் கலந்து அச்சத்தை உண்டு பண்ணின. சாரி சாரியாகக் கூலியாட்கள் உடைப்புக்களை அடைக்கத் தலை மீது மண் சுமந்து சென்றனர். சிங்-சியும் அவன் குழுவில் உள்ளவர்களும் அழைக்கப்பட்டனர். ஆனால் இந்தத் தடவை முன்போல் இராமல், உற்சாகமிழந்தே வேலையில் ஈடுபட்டிருந்தான் சிங்-சி. எனினும் உண்மையிலேயே நெருக்கடியான சமயமே என்பதை உணர்ந்திருந்தான் அவன். சற்று நேரங்கழித்த வேலையாட்களைப் பல பிரிவினராகப் பிரித்தனர். ஒவ்வொரு பிரிவுக்கும் இத்தனை நேரமெனக் குறித்து மாற்றி மாற்றி வேலை செய்யப் பணித்தனர். இவ்விதம் முழு வீச்சுடன் அடைப்பு வேலையும், அணை மராமத்தும் துலைக் கரையோரமாகத் துரிதமாக நடந்து வந்தன.

பின்னர் இந்தக் கூலிப்பட்டாளத்தை அணையின் பல்வேறு வேலைகளுக்கு நிரந்தரமாக நியமித்தனர். ஒன்பதாம் பிரிவின் வேலையில் எப்போதும் ஒழுங்கீனம் இருந்தது. வேலையாட்களுக்குச் சரியாக வேலையைப் பகிர்ந்து அளிக்கத் தவறிவிட்டது. வெள்ளத் தடுப்புக் கமிட்டி. அதனாலேயே வேலையின் முப்புறம் மட்டுப்பட்டது. பல சாராராகப் பிரித்து அவரவருக்கான பணியைச் செய்ய ஏவிவிட்டால் தங்கள் காரியம் எளிதாகிவிடுமென அதிகாரிகள் நினைத்தனர். மேல் பார்வையிட்டு வேலை வாங்குவதோடு அவர்கள் கடமை தீர்ந்தது.

வா செங்-மிங் புதிதாக உருவாகிய பதினேழாவது குழுவின் தலைவனான். சிங்-சி அவனிடமே வேலை செய்ய மீண்டும் முன்வந்தான். லு ஹெப்-பிங் என்ற இளைஞன் ஒருவன் தன்னுடன் வேலை செய்வதைக் கண்டான். ஹாங் கோவிற்கு ஓடி வரும் வழியில் அவனை ஒருமுறை சந்தித்திருந்தான். அந்த முகாமிலேயே அவன் இருந்ததும் தெரியும். இந்த லு ஹெப்-பிங், எப்போதும் முகமலர்ச்சியுடன் இருக்கும் ஓர் அப்பாவி இளைஞன். இருவரும் மண்ணை வெட்டித் தூக்கும்போது லு, ஏதோ பேச்சோடு பேச்சாக,



''இது போல் நல்ல வாய்ப்பு ஏற்படும்போது நம் கையில் நூறு துப்பாக்கிகள் இருந்தால் இந்த இடத்தில் பெரிய புரட்சியையே உண்டு பண்ணி விடலாமே'' என்றான்.

''உனக்கு ஏதாவது மூளைக் கோளாறு?'' என்றான் சிங்-சி. ''கனா ஏதாவது காண்கிறாயா?''

''கனா இல்லை, அப்பனே! இதைக் குறித்துத் தீவிரமாகத் தான் சிந்தித்துள்ளேன். நூறே துப்பாக்கி போதும், இந்த அணையின் ஒரு பகுதியை நம் வசப்படுத்திக் கொள்ள. இந்தப் பொதுஜன பந்தோபஸ்து ஆட்களை அமுத்தி அவர்களுடைய ஆயுத அறைகளையெல்லாம் பிடித்துக் கொள்ள முடியும். அங்கே இயந்திர பீரங்கிகள் வேறு உள்ளன'' என்று உற்சாகமாகப் பேசினான். ''எழுநூறு துப்பாக்கிக்குமேல் நம் கையில் சிக்கிவிடும். இங்கோ ஆட்களுக்குக் குறைவில்லை. அணையில் வேலை செய்யும் ஆட்களில் முப்பதினாயிரம் பேரை எளிதாக வளையக் கட்டி விடலாம். திடுமெனப் பிடிக்க வேண்டியதுதான், அத்தனைப் பேரும் நமக்கு அடி பணிந்து பின்னால் வருவார்கள். நேற்று ரெயில் பாதைகளை வெள்ளம் அடித்துப் போய் விட்டது. இங்கே ஏதாவது எதிர்பாராத கலகம் நடந்தால் இந்தக் காம்யூனிஸ்ட்டுக்களால் எந்த விதமான உதவியும் அனுப்ப முடியாமல் போய்விடும்'' என்றான்.

''ஹெப்-பிங், என்ன உளறுகிறாய்?'' என்றான் சிங்-சி. அவனுக்குப் பயமாகிவிட்டது. ''துப்பாக்கிகள் என்ன ஆகாயத்திலிருந்து புலபுலவென்று விழுந்துவிடுமா என்ன?'' என்றான்.

''ஒரு துப்பாக்கியையாவது எப்படிக் கைப்பற்றுவது என்பது எனக்கு நன்றாகத் தெரியும்''—அவன் பல்லை இளித்து, அந்த இடத்தை நோக்கி வந்த ஒரு ரோந்துப் படையிலனைச் சுட்டி, ''இதோ பார் வேண்டுமானால், அவன் பின்புறமாகச் சென்று குண்டுக்கட்டாகப் பிடித்து விடுகிறேனா இல்லையா பார்'' என்றான் லு ஹெய்-பிங்.

''ஹெய்-பிங், வாயை மூடிக்கொள்; வேறு எதைக் குறித்தாவது பேசு'' என்று சிங்-சி அவனைத் தடுத்தான். சற்று நடுக்கத்துடன் சுற்றிலும் நோக்கியவாறு, பேச்சை வேறு வழியில் திருப்பி, ''நீ இந்த வேலைக்குப் புதுசா?'' என்றான்.

''மூன்று நாட்களாக நான் இந்த அலைக்கரையில் வேலை செய்து வருகிறேனே, தெரியாதா? நேற்றுதான் இந்தக் காங்கியில் என்னைச் சேர்த்தார்கள்'' என்றதும் மண்வெட்டியால் மண்ணைக் கொத்தினான். மேலும் பேச்சைத் தொடர்ந்தான்: ''இன்று இரவு எப்படியாவது நழுவிவிடுவேன்; என் மனைவியையும் குழந்தையையும் காணத் துடிக்கிறேன்'' - சட்டென எதனாலோ அவன் முகம் வாட்டமடைந்து, ''கூலியும் போதவில்லை; சோறும் சரியாக இல்லை. என் பிள்ளை எப்படிக் கொழுகொழுவென்று இருப்பான்! என் மனைவி படாதபாடு படுகிறாள். கடவுளுக்குத்தான் வெளிச்சம். இந்தப் பாழும் வெள்ளம் எப்பத்தான் வடியுமோ, என் ஊருக்கு எப்பத்தான் திரும்பிப் போவேனோ?'' என்றதும் அவன் பெருமூச் செறிந்தான்.

குரலொன்று அவனை விளித்து, ''நானும் உங்களுடன் சேர்ந்துகொள்ளத்தான் வருகிறேன்'' என்றது. வெறுந் தோள் தெரிய ஓர் இளைஞன் மெல்ல வருவது தெரிந்தது. அவர்கள் இருவருக்கும் தெரிந்த நண்பன்தான்.

''யார், வாங் து-பவோவா? நீ கீழ்ப்பக்கம் மண் வேலை செய்துகொண்டிருக்கவில்லையா?'' என்று லு ஹெய்-பிங் வினவினான். ''வேடிக்கை, நாம் மூவரும் ஒரே இடத்தில் சேர்ந்து விட்டோமே'' என்றான்.

''ஆமாம்'' என்றதும் து-பவோ, ''மண்ணைக் குனிந்து வெட்டுவதைவிட கரைமீது வேலை செய்வது எவ்வளவோ மேலானது. சிங்-சி, இரவு மிகக் குளிராக இருப்பதால் ஜாக்கிரதையாக உன் உடம்பைக் கவனித்துக்கொள்ளச் சொன்னாள் உன் தாயார்'' என்றான்.



லு ஹெய்-பிங் சிரித்து, ''உன் அம்மா இன்னும் உன்னைக் குழந்தையாகவே எண்ணிக்கொண்டிருக்கிறாள். ஆனால் அக்கறையுடன் விசாரிப்பதற்கு அம்மா ஒருத்தி இருக்கவேண்டியதுதான். து-பவோ, என் மனைவியைப் பார்த்தாயா?'' என்றான்.

''அவளைப் பார்த்தேன். உன் பிள்ளையும் அவளும் சௌக்கியமே. கவலைப்பட வேண்டாமென உன்னிடம் சொல்லச் சொன்னாள்.'' அதே சமயம் ஸு கெங்-லெங் அங்கு வந்தான்.

''மூன்றுபேரும் சேர்ந்துவிட்டீர்களா? போய் வேலையைக் கவனியுங்கள்'' என்றான் அவன்.

லு ஹெய்-பிங் அவனுக்கு அழகு காட்டி, துடுக்குத்தனத்துடன் இளித்தான்.

''நம் தலைவர் ஐயாவுக்கு வந்தனம். தங்கள் மேலான பார்வைக்கு—'' என்று அவன் தொடங்கினான்.

''போதுமடா!'' என்று அவனைத் தடுத்து ஸு, ''பசங்களா, நாக்கை ரொம்ப வளர்த்துவிட்டீர்கள். நீங்கள் இந்த மாதிரி பேசுவதை அவர்கள் பார்த்துவிட்டால் ஆபத்துத்தான்'' என்று எச்சரிக்கை செய்துவிட்டு, வேறு குழுவினர் வேலை பார்க்கும் இடத்தை நோக்கி நடந்தான்.

''இங்கேயும் பாசாங்கு செய்து மேலுக்கு வரப் பார்க்கிறார், பார். இரண்டு பக்கத்துக்கும் நல்லவராக இருக்கப் பார்க்கிறார், இல்லையா?'' என்றான் லூ.

''ஸுவைத்தானே சொல்கிறாய்?'' என்றான் புதிதாக இவர்கள் கோஷ்டியில் வந்து சேர்ந்தவன்.

அவன் லீ என்பதை சிங்-சி தெரிந்துகொண்டான். நேற்று அவனிடம் வாலாட்டிய ஆளே. எனவே, வேறு புறமாகத் திரும்பினான் சிங்-சி.

''லீ, உனக்கு எப்படித் தோன்றுகிறது?'' என்று லூ ஹெய்-பிங் கேட்டான்.

'' எனக்குத் தெரிந்தவரை ஸு அந்தமாதிரி இரண்டு பக்கத்துக்கும் நல்லவனுகிவிடப் பார்க்கவில்லை. இரண்டு நாட்களுக்கு முன்பு அவனை சு பெய் ஹுங் நன்ருக மட்டம் தட்டி விட்டதை என் கண்ணுலேயே பார்த்தேன். அப்புறம் ஆள் ஒரேயடியாக ஆடிப்போய் விட்டான்!'' என்றதும் லி, சிங்-சி பக்கம் வந்து அவனை மெல்ல இடித்து, '' எப்படி இருக்கே குரப்புலியே! இன்னுமா என்மீது கோபம்?'' என்ருன்.

சிங்-சி அவனுடன் பேசவோ, அவன் பக்கம் நிமிர்ந்து பார்க்கவோ இல்லை. பிறகு லி, நண்பன் என்ற தோரணையில், '' நீ படித்தவனுயிருக்கலாம், ஆனல் இங்கே நடப்பதை உன்னுல் புரிந்துகொள்ளமுடியவில்லையே. தட்டுக்கெட்டுப் பிறந்த அந்தப் பயல்களுக்காக நீ உழைக்கின்ருய். அதனுல் எங்களில் எவருமே துளியேனும் உன்னிடம் அனுதாபம் காட்டமாட்டோம். நாம் ஒரே இடத்திலிருந்து ஓடி வந்தவர்களே. நான் சொல்வது அவ்வளவும் நிசமே'' என்ருன்.

சிங்-சி தரையை வெறித்து நோக்கியபடியே இருந்தான். லி, சிரித்து அவனுக்கு மேலும் தெளிவாக்கினுன்: '' நேற்று சாங்கும், நானும் இவனை நன்ருக மொத்தப் போனேம். அவ்வளவு ஆக்ரோஷம் வந்துவிட்டது எங்களுக்கு.''

சிங்-சி பக்கம் திரும்பிய லு, '' நீ ஒரு முட்டாள்! அந்த அணை இடிந்து போகும் பட்சத்தில் நீ ஒருவன் மட்டும் அதைக் காப்பாற்றி விடுவாயா? யோசனை பண்ணிப்பார்'' என்றதும் பேச்சைச் சற்று நிறுத்தி, '' நம்மிடம் ஒரு நூறு துப்பாக்கிகள் மட்டும் இருக்குமானுல்'' என்று மெல்லச் சொன்னுன்.

'' மறுபடியுமா அந்த யோசனை?'' என்று லி சிரித்து, '' அந்த அசட்டு யோசனையை இன்னுமா வைத்துக் கொண்டிருக்கிருய்? காற்றுவாக்கில் அவர்கள் காதில் எட்டிவிடப்போகிறது; அப்புறம் உன் உயிருக்கே ஆபத்து'' என்ருன். சுற்றுமுற்றும் நோக்கியதும், '' சாங்கும் நீயும்



ஒரே மாதிரிதான். உங்களால் வாயைப் பொத்திக்கொண்டிருக்க முடிவதேயில்லை'' என்ருன்.

''சாவதற்கு நான் அஞ்சவில்லை!'' என்று லு தன் மார்பைத் தட்டிப் பேசினுன். '' என் மனைவியிடம் அப்போதே சொல்லிவிட்டேன், அணைக்கரையில் வேலை செய்பவன் எந்தக் கணமும் சாவதற்குச் சித்தமாகத்தான் இருக்கவேண்டும் என்று. என் சாவு பெரிதல்ல; அதுபற்றி வருத்தப்படவே வேண்டியதில்லையென்றும் சொல்லி விட்டேன் அவளிடம். அவள் என் பிள்ளையை வளர்த்துப் பெரியவனுக்கினுல் போதும். அவள் ஒரு திருடியாகவும் மாறலாம்; வேறு யாரை வேண்டுமானுலும் மணந்து கொள்ளலாம்; விபசாரங்கூடச் செய்யலாம். அவள் இஷ்டம் எதுவும்'' என்ருன்.

'' இவ்வளவு வெறுப்பு தட்டிவிட்டதா உனக்கு?'' என்ருன், சிங்-சி திடுக்கிட்டு.

'' ஏய், உதவாக்கறை, மூட நம்பிக்கை, மதம் இதில் எல்லாம் என்னடா இருக்கிறது? அதுவும் இந்தக் காலத்தில்?'' என்றதும் லு ஹெய்-பிங் கடுமையாகச் சிரித்தான். ''இந்த வருடம் ஒரு பெண் —''

''தெரியும் ஹெய்-பிங், போதுமே'' என்றதும் சிங்-சி அவன் பேச்சு காதில் விழாத இடமாகச் சென்று தன் வேலையைக் கவனிக்கத் தொடங்கினுன். சாக்குப் பைகளில் மணலை நிரப்புவது, தூக்கிப் போடுவது, கரைமீது ஏறி இறங்குவது, உடைப்புக்களைப் புல்பற்றையால் மூடி மறைப்பது - இவ்வாறு சலிப்புத் தரும் வேலைகள் மும்முரமாக நடந்து வந்தன. சிங்-சி துணைக்கரையின் அடிப்பகுதியில் வேலை செய்து கொண்டிருந்தான். ஆற்று நீர் விசையைத் தடுப்பதற்குக் கழிகளில் மரத்துண்டுகளைப் பொருத்தும் வேலையில் து-பவோ ஈடுபட்டிருந்தான். இருட்டுமுன் கரைமீதே சாப்பாடு வழங்கப்பட்டது. ஆட்கள் அருமையாகக் கிடைத்த அந்தச் சோற்றை உண்ணக் குழுமினர். ஒரு நாளுக்கு இரண்டே தரந்தான் சாப்பாடு. இருபது மணிநேரம்

தொடர்ந்து வேலை செய்தாலும் இதே சோற்றுப் பாகந் தான்.

சாப்பாட்டு வேளையில் ஒலிபெருக்கிகளில் அறிக்கைகள் அலறின: 'சங் ஆற்றின் வெள்ளக் கதவு திறக்கப்பட்டு விட்டது. மத்தியத் தென் வெள்ளத் தடுப்புத் தலைமையகத் தின் வேண்டுகோளை இராஜ்ய கௌன்சில் ஏற்று ஆமோதித்து விட்டது. சிங் ஆற்றின் வெள்ளத் தடுப்பு, வெள்ளத் திருப்ப தலைமை அலுவலகம் இரவு 2-30 மணிக்கு வெள்ளத்தைத் திருப்பும். அணைக்காலை ஜுலை 22-ஆம் தேதி திறந்து விட்டது.'

''ஜுலை 22? இன்று காலைதான்!'' என்று சிங்-சி வியப் புடன் கூறினான்.

''அதைக் கேள்!'' என்று ஸு கெங்-ஸெங் சோற்றை அள்ளிப் போட்டுக் கொள்ளும் குச்சியைக் கீழே வைத்தான்.

ஒலிபெருக்கி மீண்டும் முழங்கியது:

'அணைக்குச் செல்லும் டெய்பிங்கோ பாதை 1054 மீட்டர் நீளமானது. அணையின் ஐம்பத்திநான்கு கண்களும் திறக்கப்பட்டுள்ளன.

'ஒரு விநாடிக்கு ஐயாயிரத்து அறுநூறு கன மீட்டர் அளவு வெள்ளநீர், மாற்றுக் கால்வாய்கள் வழியே திருப்பப்பட்டுள்ளது - ஷாஸியில் நீர்மட்டம் இறங்கி வருகிறது.

'பிரம்மாண்டமான சிங் ஆற்று அணை, கியாங்கன் சம வெளியிலுள்ள நிலங்களை வெள்ளத்திலிருந்து காக்கிறது...'

''என்ன மருந்தெல்லாம் தந்து நம்மை ஏமாற்றப் பார்க் கின்றனர்!'' என்று சாங், ஒலிபெருக்கியின் பக்கம் சோற்றுக் குச்சிகளை அசைத்தான். ''இதோ கேளேன் - அடுத்தது, மக்களின் மகத்தான ஒத்துழைப்புச் சக்தியானது எதிர்த்து வரும் வெள்ளத்தையும் அடக்கி விட்டது என்ற புகழுரை வரும்'' என்றான்.



அவன் இவ்வாறு சொல்லும்போது அவனுடன் வேலை செய்வோருக்குச் சிரிப்பு தாளாமல் சோறு புரையேறிற்று. ''அருமையான பேச்சு. 'எதிர்த்திடும் வெள்ளம்' ஹ, ஹ'' என்று நகைத்தனர். ஆனால் ஸு கெங்-ஸெங் ''உஷ்'' என்று எச்சரித்தான். ''பேசாதீர்கள் — முட்டாள்களே!'' — சுற்றுமுற்றும் பார்த்து — ''என்றைக்காவது அவர்கள் காதில் நீங்கள் பேசுவது விழத்தான் போகிறது'' என்றான்.

* * * *

ஹாங்கோ - ஓசாங் பகுதியில், சிங் ஆற்று வெள்ள நீரைத் திருப்பும் அணை, வெள்ளத்தடுப்பு வேலையை எவ் வளவோ எளிதாக்கிவிட்டது. வெள்ளத் தடுப்பு வேலை செய்யும் நான்காவது குழுவின் உட்பிரிவு, இரவு நேரம் வந்ததும் வேலையை முடித்துவிட்டுக் கரையிலிருந்து அகன்றது. அகலமான அணைக்கரைமீது பாதுகாப்பு ரோந்துக்காரர் மட்டும் இருந்து வந்தனர்.

கண்காணிப்பும் அவ்வளவாக இல்லை. ஆகவே, இரவு நேர வேலையும் குறைந்தது. இரவின் பிற்பகுதில் சிங்-சியும் லு ஹெய்-பிங்கும் வேலையினின்று விடுபெற்றனர். அகதி கள் முகாமுக்குச் செல்ல ஸு கெங்-ஸெங் அவர்களுக்கு அநுமதியும் தந்தான்.

சிங்-சியின் முகாம் ஒரு பெரிய பழைய வீட்டில் இருந்தது. அவ்வீட்டுச் சுவரிலுள்ள ஒரு துவாரத்தின் வழியே பக்கத் திலுள்ள ஓர் இடிந்த ஆலயத்துக்குச் செல்லலாம். இவ் விரண்டு இடங்களும் பல வருடங்களாக யாருமே உபயோகப் படுத்தாமலே இருந்தவை. சுவர், முற்றம் இங்கெல்லாம் ஒதுத்தால் காரைப்பூச்சு தொட்டமாத்திரம் உதிர்ந்தது. செங்கற்கள் தெரிந்தன. காங்கிரீட், கல்தரைகளில் ஆங் காங்கு விரிசல்கள். மண்ணும் புழுதியும் அந்த விரிசல்களுள் படிந்திருந்தன. பழமைபட்ட துதிப்பாடல்களை ஏற்ற காகிதத்தாள்கள், காலக்கிரமத்தால் மக்கிப் போய்ச் சுவர் களில் தென்பட்டன. சிவப்பும், தங்க நிறமும், பச்சை

திறமுமான பூஜாபாத்திரங்கள் ஒரு காலத்தில் இருந்த ஆலய அறைகளின் மச்சுக்களிலிருந்தும் அவை நைந்து தொங்கின. ஒரு சமயம் தூபமணம் கமழ்ந்த வேதிகைகள் மீது அகதிகளின் ஓட்டை உடைசல் சாமான்கள் குவிந்திருந்தன. அறைகளும் முற்றங்களும் மூங்கில் தட்டிகளால் பல சிற்றறைகளாகத் தடுக்கப்பட்டிருந்தன. அவற்றுள் காலம் கடத்தும் எத்தனைக் குடும்பங்கள்! ஒரே கூரையின் கீழ் ஆண், பெண் குழந்தைகள் ஆயிரத்துக்கு மேற்பட்டவர்! காற்று நுழைய இடமே இல்லை. துப்புரவே இராமல், பூச்சிக்கள் மேயுமிடமாக அவை காட்சி தந்தன. காற்றுக்கும், வெயிலுக்கும் சற்று மறைப்பாக இருந்தனவே ஒழிய வேறில்லை. அங்கே குடி புகுந்தவரெல்லாம் சில நாட்கள்தானே தங்கி இருக்கப் போகிறவர்கள்? வெள்ளம் குறையும்வரைக்குத்தான். அப்புறம் அவரவர்கள் இடத்திற்குத் திரும்ப வேண்டியது தான்.

மனிதர்கள் ஒருவருடன் ஒருவர் ஒன்றிக் கும்பலாக இருப்பதால் ஏற்படும் துர்நாற்றம் சிங்-சி, ஹெய்-பிங் இவர்களின் நாசியைத் துளைத்தது, அந்தப் பக்கம் வந்தபோது.

''அப்பப்பா!'' என்று ஹெய்-பிங் முகத்தைச் சிடுத்துக் கொண்டான். ''என்ன துர்க்கந்தம்! இந்த இடத்தில் இருந்தால் ஜனங்கள் அழுகித்தான் சாவார்கள். அணைக்கரைப் பக்கம் செத்துப் போனாலும் தேவலை; அங்கே இந்தத் தினறல் இல்லை'' என்றான்.

சிங்-சி தன் குடும்பத்தவரைக் காணச் செல்லும் வேகத்தில் இவன் சொன்னதைக் காதில் வாங்கிக்கொள்ள வில்லை. அவனுடைய தங்கை அஹ்-சுயென்தான் அவன் வருகையை முதன் முதல் கவனித்தவள். உடனேயே தாயையும், ஸியு-மின்னையும் எழுப்பினாள்.

''சிங்-சி!'' என்று ஸியு-மின் சட்டென எழுந்தாள், கண்களைக் கசக்கிக்கொண்டே.



ஹெய்-பிங் தன் நண்பன் தோளில் தட்டிக் கொடுத்தான். ''திரும்பிச் செல்லும்போது நான் வந்து கூப்பிடுகிறேன் உன்னை. போய்ச் சற்றுத் தூங்குவதைப் பார்'' என்றான்.

சிங்-சி தன் தங்கையை ஒரு கையால் பற்றி, தன் மறு கையை ஸியு-மின்னின் தலைமீது மெல்லப் பதித்தான். தாய் தன் மகனையே சற்று வேதனையுடன் பார்த்தாள்.

''வந்து விட்டாயா? மறுபடியும் போகவேண்டுமா?'' என்றாள்.

''இன்னும் சில மணி நேரமே நான் இங்கு இருப்பேன், அம்மா. பொழுது விடிவதற்குள் நான் திரும்ப வேண்டும்'' என்றான் சிங்-சி.

''ஐயோ!'' என்று அவன் தாய் ஏங்கினாள். ஆனால் அந்தப் பொழுதிற்கு அவளுடைய ஆசைமகன் பத்திரமாக உடல்நலத்துடன்தான் இருந்தான். இது அவளுக்கு ஆறுதலைத் தரவே அவள் முகம் சற்று மலர்ச்சியுற்றது.

''அணைக்கரைப் பக்கம் நிலவரமெல்லாம் எப்படி?'' என்று வினவினாள் ஸியு-மின்.

''மூன்று நாட்களுக்குமுன் நான் அங்கே போனபொழுது நிலைமை சற்று மோசமாகத்தான் இருந்தது. இன்று எவ்வளவோ மேல். சிங் ஆற்றுவெள்ளத்தைத் திருப்பும் அணைக் கரைகளைத் திறந்ததுமே நீர்மட்டம் வடியத் தொங்கிவிட்டது மடமடவென்று.'' அந்த அணையைப் பற்றி, அதிகம் அறியாது போனாலும், தன் காதில் பட்டவாறு சொன்னான்.

''நல்லது, நீர் வடிந்து வருகிறதா? அப்படியானால் சீக்கிரமே நாம் ஊருக்குத் திரும்பிவிடுவோம்'' என்று ஆறுதல் மூச்செறிந்தாள் சிங்-சியின் தாய். ''அங்கே மீண்டும் வாழ்க்கையைத் தொடங்குவது கஷ்டந்தான். ஆனால் பழகிப்போன இடமாதலால் சமாளித்து விடலாம். இங்கே இத்தனைப்பேர் இருக்கின்றனரே, எனக்கு இவர்கள் மனுஷ்யர்களாகவே படவில்லை. இன்று இராச் சாப்பாட்டின்போது ஸையவோலின் சம்சாரம் இன்னொரு அகைப்பை சோறு

பரிமாறச் சொன்னாள். உணவு அதிகாரி அவள் கன்னத்தில் ஓர் அறை விட்டான். இந்த மாதிரியெல்லாம் நடத்துகிறார்கள். அகதிகள் என்றால் அவ்வளவு கிள்ளுக்கீரையாக இருக்கிறது. இந்த மாதிரியெல்லாம் நடத்துவதற்கு அவர்கள் என்ன பாவம் செய்தார்களோ? இங்கே ஆட்சி நடத்துகிறவர்கள் நம்மவரைப்போல் இல்லவே யில்லை'' என்றாள் மீண்டும். முகாமில் தான் கண்ட அசௌகரியங்களையும், மடத்தனத்தையும், முரட்டுப்போக்கையும் பற்றிச் சொல்லிக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை அவளால். சிங்-சி அவ்வளவையும் கம்மென்று கேட்டுக்கொண்டான். ஆனால் பதில் எதுவுமே சொல்லவில்லை. அணைக்கரைப் பக்கம் வேலைசெய்வோரிடை அதிருப்தி வளர்ந்து வருவதையே அவன் உன்னிப் பார்த்தான். ''ஆனால் இதெல்லாம் எத்தனை நாள் நீடிக்க முடியும்?'' என்று அவன் தாய் சொன்னாள். ''முடிந்ததும் ஊருக்குத் திரும்பிவிடுவோம். நீங்கள் இருவரும் மணந்துகொண்டு சுகமாக இருக்கலாம்'' என்றாள். கிழவிக்கு எல்லாம் பழைய நிலைமைக்குத் திரும்பிவிடுமென உறுதியான நம்பிக்கை இருந்தது. ''நிரம்ப நாளுக்கு இப்படியே கஷ்டப் படமாட்டோம். இங்குள்ள மனிதர்கள்தான் — சேச்சே எவ்வளவு முரடர்கள்...!'' என்றாள்.

''உஷ், அம்மா! இப்படியெல்லாம் பேசாதே'' என்றாள் ஸியு-மின், திகிலுடன். ஆஹ்-சுயென் தினவு தாளாமல் உடம்பைச் சொறிந்து கொண்டாள்.

''அண்ணா, நீ வேலை செய்கிற இடத்தில்கூட இந்த மாதிரி மூட்டைப் பூச்சியும் கொசுவும் இருக்கிறதா என்ன?'' என்று அப்பேதை கேட்டாள். ''இவை நாளுக்கு நாள் அதிகரிக்கிறதே'' என்றாள்.

''அங்கேயும் இருக்கிறது; ஆனால் இவ்வளவு இல்லை'' என்று சிங்-சி சிரித்து, தன் தங்கையின் தலைமயிரைத் தடவிக் கொடுத்தான்.

''சிங்-சி, நீ சற்றுத் தூங்கேண்டா'' என்றதும் அவன் தாய் அவன் படுப்பதற்கு ஓரிடத்தை ஒழித்துத் தந்தாள்.



அவன் தாய், தங்கையின் முன்பு ஸியு-மின் அவன் பக்கமாகச் சுருட்டிக் கொள்ளத் துணியவில்லை. சிங்-சி படுத்ததும், மெல்லத் தன் காலால் அவளைச் சீண்டினான். ஸியு-மின்னின் இதயம் பட படத்தது. ஊருக்குத் திரும்பி அவர்கள் இருவரும் மணந்து இல்வாழ்க்கை நடத்தி அமைதி பெறும் காலத்தைப்பற்றி நினைக்கலானாள்.

பத்தடித் தொலைவிலேயே இருந்த தன் இடத்தில் ஒரு பாய்மீது நீட்டியபடி கண்ணயரும் தன் சிறுவனையே லு ஹெய்-பிங் உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

அவனுடைய மனைவி, ''அவனையே பார்க்கிறாயே, என்னையுந்தான் சற்றுப் பாரேன்!'' என்று கிளறினாள்.

''உன்னை எத்தனையோ வருஷங்களாகப் பார்க்கிறேனே'' என்று சிரித்து, ''பாரடீ அவனை; அந்தப் பிஞ்சு முகத்தை; இன்னும் இரண்டு மாதங்கூட ஆகவில்லை அவனுக்கு. சியு-சு, நிசமாகச் சொல்லு, அவன் என் ஜாடையாக இல்லை?'' என்றதும் லு ஹெய்-பிங் தன் இளம் மகவை இன்னும் கூர்ந்து நோக்கினான். ''ஆனால் வாய்ப் பக்கம், கண் பக்கம் எல்லாம் உன்னையே உரித்துக் கொண்டுதான் வந்திருக்கிறான்'' என்றதும் குழந்தைமீது கவிந்தவாறு, தன் ஒரு கரத்தால் மனைவியையும் தழுவித் தன் பக்கம் இழுத்துக் கொண்டான்.

''உஹூம்...வேண்டாம் இங்கே இத்தனைபேர் மத்தியில். உஹூம் யாராவது பார்த்து விடுவார்கள்'' என்று மெதுவாக முனகினாள் சியி-சூ.

''அதைப்பற்றி நமக்கென்ன? நாம் கணவன்-மனைவி தானே?'' என்றான் லு.

கணநேரம் அவனையே நோக்கினாள் சியு. அவள் கண்களில் நீர் வார்ந்தது. ''ஹெய்-பிங், நீ தூங்க வேண்டும். பொழுது விடிந்தால் வேலை செய்யவேண்டுமே'' என்றாள்.

''இந்தப் பெண்பிள்ளைகளே இப்படித்தான்!'' என்று லு அவளுக்கு முத்தம் ஈந்தான். கடைசியாக அவர்கள் இருவரும் படுத்து உறங்கினர்.

அட்டிக்கு மறுபுறமோ சிங்-சி, தன் அண்ணேயுடன் பலத்த குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான்.

## 3

சிங் ஆற்று வெள்ளத் திருப்பத் திட்டம் தாற்காலிக மான நிவாரணமே அளித்தது. ஹூஹான் பகுதியில் வெள் ளத்தின் மட்டம் சேர்ந்தாற்போல் மூன்று நாட்களாகத்தான் குறைந்து வந்தது. நான்காவது தினம் மாறுதல் ஏதும் தென்படவில்லை. இரவில் மற்றொரு பொங்கோதம் அந்தப் பகுதியில் புகுந்ததும் மறுபடியும் விரைவாக நீர் மட்டம் உயரத் தொடங்கியது.

சங்குங் அணைக்கரையில் மீண்டும் பரபரப்பு மூண்டது. அணைக்கரையைப் பலப்படுத்தும் வேலையும், கழிக்கால்வாய் களில் மரப்பலகைகள் நிறுத்தும் வேலையும் சடுதியில் நடந்தன. இந்தச் சங்கடம் போதாதென்று வலுத்த காற்று இயாங் கிட்ஸிமீது அலைத்துச் சென்றது. நகரைச் சுற்றிலும் எழுப்பி யிருந்த மண்ணரண் இவ்விரு உற்பாதங்களால் கிடுகிடுத்தது. பிரம்மாண்டமான சங்குங் அணையண்டை பாதுகாப்பு நடவடிக்கை ஜுரவேகத்தில் நடந்து வந்தது. துழாவிவிளக்கு களின் ஒளிக்கதிர்கள் ஆற்றுமீது அடிக்கடிப் பாய்ந்தன. வெள்ளத் தடுப்பைச் சேர்ந்த பொறியியல் வல்லுநர்களும், நுட்பமறிந்தவர்களும் எந்த இடத்தில் உடைப்பு, எந்த இடத்தில் வலிவில்லை என்பதை அணைக்கரையெங்கும் இடை விடாமல் துருவிப் பார்த்துக்கொண்டே சென்றனர்.

துணைக்கு எழுப்பும் அணைக்கரையை வலுப்படுத்துவதி லேயே அவர்கள் தம் முழு கவனத்தையும் செலுத்தினர். இப்பணிக்குப் பல வேலைக் குழுக்களை ஏவினர். அபாய நிலைமை இருந்தும், காங்கித் தலைவர்கள் அதட்டியும், காம் யூனிஸ்ட்டு அதிகாரிகள் மிரட்டியும், ஆட்கள் நின்று நிதான மாகச் சுறுசுறுப்பே இராமல் வேலையைச் செய்தனர். ‘புலி’



என்று புனைபெயர் பெற்ற மேஸ்திரி சு பெய் ஹுவங்கிற்கு ஆக்ரோஷம் வந்துவிட்டது. வெறி பிடித்தவன் மாதிரி, ஆட்களைத் திட்டித் தீர்த்துவிட்டான்.

வேலையாட்களைப் பார்த்து, ''நீங்கள் நாசமாகப் போக! உதவாக்கறைகளே, சோற்றுப்பட்டாளமே! சுறுசுறுப்பாக வேலையைச் செய்யுங்கடா!'' என்று கூவினான்.

ஆட்கள் நாக்கைப் பிதுக்கி அவனுக்கு அழகு காட்டினர். அவன் தலை மறைந்ததும் தங்களுக்குள் முணுமுணுத்தனர்.

''புலிக்குப் பசிதான் இல்லையோ? என்னமாத்தான் கத்துகிறான். நம்மைப் போல் இருபது மணி காலம் இரண்டு கவளம் உண்டுவிட்டு வேலை செய்தால் ஐயாவுக்குத் தெரியும் கஷ்டம்!'' என்றான் ஒருவன்.

''ஒருவேளை ஆற்றுத் தண்ணீர் அருந்திப் பசி மந்தித்துப் போயிருக்கும் ஆசாமிக்கு!'' என்று இன்னொருவன் குத்தலாகப் பேசினான்.

மற்றொருவன் எச்சில் உமிழ்ந்து, ''தண்ணீர் ஏதுக்கு இவனுக்கு? பெண்பிள்ளை அகப்பட்டால் போதும். இரண்டு நாள் பெண்பிள்ளை இராமல் போனால் இவனுக்கு வலிப்பு வந்துவிடுமே! அந்த மாதிரி சமயந்தான் நம்மேல் சீறுகிறான்'' என்றான்.

ஓ ஹெய் - பிங் தனக்குப் பிடித்த விஷயத்தை எடுத்து, ''என்னிடம் மட்டும் ஒரு நூறு துப்பாக்கி இருக்கட்டும், இந்த அணையில் வேலை செய்யும் அத்தனை ஆட்களும் ஒரு கை பார்த்து விடுவார்களே. கடவுள்மேல் சாட்சியாக இந்தப் பட்டிக்காட்டு நாயை உடைப்புப் பள்ளத்தில் போட்டு மூடி விடமாட்டேனா—'' என்றான்.

''தெரியுமா கதை? அஹ்ஸியின் தங்கச்சிக்கும் இந்தப் 'புலி'க்கும் ஏதோ தொடிசு இருக்கு!'' என்றான் து பவோ, பேச்சில் தன் பங்கைச் செலுத்த.

''உனக்கு யார் சொன்னது?'' என்றான் சாங் சட்டென.

''நானே பார்த்தேன்'' என்முன் துபவோ, தைரியமாக. ''முதலில் நானும் யாரோ சொல்லித்தான் கேட்டேன். அப்புறம் ஒரு நாள் அஹ்ஸியின் தங்கை பெங் - ஸியன் அணைக்கரைப் பக்கம் என்னவோ எடுத்து வருவதைக் கவனித்தேன். 'புலி'யும் அவளும் மறைவாக ஓரிடத்தில், உடல் ஒட்டப் பேசிக்கொண்டிருந்தனர். அன்று ஆள், அரை நாள் ரஜா போட்டுவிட்டான்'' என்முன்.

''பஜாரி !'' என்முன் சாங்.

''எதற்காக அவர்களைப் பற்றி இந்தச் சர்ச்சை ? அந்த ஆள் அவள்மேல் ஆசைப்படுகிமுன். அவள் அதற்கு இணங்குகிமுள். நீங்கள் இந்த விஷயத்தில் தலையிடுவானேன் ?'' என்று ஒருவன் சாங்கை ஒதுக்கித் தள்ளினுன்.

சாங்கின் முகம் கோபத்தால் கறுத்தது. தலையைத் தாழ்த்தி அவன் முணுமுணுத்தான். ''அஹ் - ஸியின் தங்கை அப்படி குரூபியல்லவே! அவளா, இந்த நாய் பின்னுல் திரிவது ?''

''உனக்குப் பொருமையா இருக்குதா?'' என்று மற்றவர்கள் அவனைப் பார்த்து நகைத்தனர்.

நகைப்பு ஓயுமுன் ஆட்களைத் திரண்டுவர அவசரமாக அழைக்கும் சேகண்டி முழங்கியது. லு ஹெய் - பிங் நிமிர்ந்து உட்கார்ந்தான். ''இதென்ன இழவு மறுபடியும்? என்ன ஆபத்து வந்துவிட்டது ?'' என்முன்.

ஸு கெங் - ஸெங்கும் நாலைந்து ஆட்களும் திணறத்திணற ஓடிவந்தனர். லு பிங் முன்னுல் சென்முன்.

''என்ன சமாசாரம் ?'' என்று அவன் கேட்டபோது, ஸு அவனை உதறித் தள்ளுமுன் அதிகாரிகளில் ஒருவன் லு ஹெய் - பிங்கின் கையைப் பற்றி, ''நல்லது, நீதான் சரி. வா'' என்முன்.

அவனையே நடுக்கத்துடன் நோக்கிய லு, ''எதற்காக ? எங்கே வரவேண்டும் ?'' என்முன்.



மூழ்கி வேலை செய்யும் இயந்திரம் இன்னும் வந்து சேர்ந்தபாடில்லை. ஆகவே, கீழே சில ஆட்களை அனுப்ப வேண்டும். அதற்காகத்தான்—'' என்முன் அதிகாரி.

'உடைப்பு' என்று ஒலிபெருக்கி ஊளையிட்டது. 'ஒன்பதாவது காங்கி — உஷார் — காங்கி பதினெழும் பத்தொன்பதும்...'

இருளையும் குழப்பத்தையும் துணையாகக்கொண்டு கும்பலில் சாங் தலைமறைத்துக் கொண்டான். லி சிங் - சியை, அவன் சொக்காயைப் பிடித்திழுத்துக் கரைமீது வேலை செய்யும் ஆட்கள் பக்கமாகத் தள்ளிவிட்டான்.

''என்ன விஷயம், லி ?'' என்முன் சிங் - சி.

''உயிர் பிழைத்திருக்க உனக்கு விருப்பமில்லையா என்ன ? பெரிய உடைப்பு ; நீருள்ளிருந்தே அடைப்பதற்கு ஆட்களை முழுக்கு வேலைக்கு அனுப்புகிமுர்கள். ஒரு தரம் உள்ளே போனவன், மறுபடி வெளியே தலை காட்டுவதேது ? பாவம், ஹெய் - பிங் ! எதற்கும் தான் முந்தி என்று வந்தால் இந்தக் கதிதான். இங்கிருந்து நாம் நழுவிச் செல்லாது போனுல், நமக்கும் இந்தக் கதிதான்'' என்முன் லி.

''ஓடுவதா ? நம்மை அவர்கள் கவனித்து விட்டால் என்னவாகும் ?''

''மிஞ்சிப்போனுல் அடிப்பார்கள், அவ்வளவுதான். அதனுல் உயிர் போய் விடாதே!''

''சிங் - சி, நீ ஆனுலும் அதிகமாகப் பேசுகிமுய். அதைக் கொஞ்சம் குறைக்கப்பார்.''

வளைந்து செல்லும் பாதை வழியே, அணைக்கரைக்குத் தொலைவிலுள்ள ஓர் இடத்தை அடைந்தனர் இருவரும். அங்கே சில கூலியாட்கள், புயல்விளக்கின் ஒளியில் மண்ணை வெட்டுவதும், தட்டுக்களில் தூக்குவதுமாய் இருந்தனர். அவர்களுடன் இருவரும் ஒன்றிக்கொண்டனர்.

''லி, ஹெய் - பிங்கின் கதி என்னவோ ?'' என்முன் சிங் - சி கவலையுடன்.

''இங்கே அவனவன் கதையை அவனவனே பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்'' என்று லி கடுமையாகக் கூறினான். அவன் நகர்ந்து, மண்ணை வெட்டத் தொடங்கினான். சிங் - சி ஏதோ நினைவில் ஆழ்ந்தான். பின்னர் பெருமூச்செறிந்து லியைப் பின் தொடர்ந்தான்.

* * * *

அணைக்கரையருகில் ஒரே அமர்க்களமாக இருந்தது. அதிகாரிகள் வேலை வாங்கும் கூச்சலும், ஆட்களின் சாபக் குரல்களும் சரிசமமாகப் போட்டி போட்டன. இதற்கிடையே வெள்ளநீர் பாயும் ஓசை. கண்ணைப் பறிக்கும் மின்விளக்கு ஒளியில் ஆட்கள் போவதும் வருவதும் தெரிந்தது. அணைக்கரையின் கீழ் உடைப்புக் கண்டு விட்டது. நீர் கசிவதும் மறுபுறம் நன்கு புலப்பட்டது. ஆற்றுச் சுழல்கள் அரித்து, உடைப்புக்கள் அகலமாகிக்கொண்டு வருவதை இது காட்டியது. இதுபோன்ற சமயத்தில் முழுக்காளிகளைத் தேடி எங்கே போவது? அதனால், கிடைத்த ஆட்களைக் கட்டாயப்படுத்தி நீருள் முழ்கி மணல் மூட்டைகளைப் போடச் சொல்லி உடைப்புக்களை அடைக்க முயன்றனர். ஆபத்தான வேலைதான். ஆற்று நீரோட்டம் விசையாக ஆட்களை உள்ளுக்கு வலித்தது. இந்த வேலை நடக்கும்போது இரண்டொருவர் பலியும் ஆயினர். யாரோ ஒருத்தன், நீருள் மூழ்க்குப்போட சாம்பிய உள்ளத்தவராய் நிற்கும் ஆட்களுக்கு உற்சாகம் ஊட்ட, ''பழைய காலத்தில் இப்படித்தான் உடைப்புக்களைச் சீர்படுத்தினர்'' என்றான்.

சட்டெனக் குழப்பமான பல குரல்கள் வந்தன. 'அவர்களெல்லாம் தயார்...இறங்குங்கள்' என்ற உத்தரவு பிறந்ததும் பலர் சளாரென நீருள் குதிக்கும் ஓசை வந்தது. அவர்கள் இவ்வாறு மூழ்குவதைப் பார்க்க எவருமே வேலையை நிறுத்தவில்லை. இதுபோன்ற மரணவிளையாட்டை அவர்கள் முன்பே கண்டிருக்கின்றனர். இது பார்த்துப் பழகிப்போன காட்சியே. பொறுப்பதன்றி வேறு வழியில்லை.

* * * *



லியும், சிங் - சியும் எவர் கண்ணிலும் படாமல் புத்திசாலித்தனமாக ஒதுங்கியே இருந்தனர். அணைக்கு நேரிட்ட ஆபத்தான நிலைமையைச் சமாளிக்கும் பொறுப்பை ஏற்றுள்ள பதினேழாவது காங்கியில் தாங்கள் இராததை யாருமே கவனிக்க மாட்டார்கள் என்று நம்பியிருந்தனர். சாங்கும் பதினேழாவது பிரிவிலிருந்து நழுவி லியும், சிங் - சியும் வேலை செய்யுமிடத்தில் இருந்தான். மூழ்க்குப் போட்டவர்கள் ஆற்றிலிருந்து பிழைத்து வந்தார்கள் என்பதைக் கரையேறிக் காண சிங் - சி துடித்தான். அன்று இரவு அவன் துப்பாக்கி ஏந்திப் புரட்சி செய்யத் திட்டம் வகுத்ததைக் குறித்து ஹெய் - பிங்கை மற்றவர்கள் ஏளனம் செய்து தீர்த்து விடுவார்களென நினைத்தான். குழம்பி யோடும் ஆற்றில் விழ அடுத்தது தன் முறையாக இருக்குமோ என பயந்தான். அவன் இவ்வாறு எண்ணமிடும்போது சாங் அவனைக் கலைத்தான்.

''நாம் இனித் திரும்பிப் போகலாம்'' என்றதும் சில வெற்றுச் சாக்குப் பைகளை எடுத்துக் கொண்டான். ''இவற்றுள் மணலைத் திணித்துக் கரைக்குச் சென்று என்ன நடந்ததென்று பார்ப்போம். பாவிப் பசங்கள், எத்தனைப் பேர் மூழ்கி மாண்டனரோ ?'' என்றான்.

உடைப்பு கண்ட இடத்தை அணுகும்பொழுது முகம் வாடி, கைகாலெல்லாம் சோர்ந்துபோய், எஞ்சியவர்களைத் திரட்டிக்கொண்டு ஸூ கெங் - ஸெங் வருவதைக் கவனித்தான்.

சிங் - சி முன்னால் ஓடி, ''ஸூ மாமா, என்ன நடந்தது ?'' என்றான்.

ஸூ - கெங் - ஸெங் ஒன்றுமே பேசவில்லை. இரு சடலங்கள் கிடக்கும் கரையின் ஒரு பக்கம் அவனை அழைத்து வந்தான். அந்த உடல்களைச் சிங் - சி கூர்ந்து நோக்கினான். ஒன்று அஹ் - ஸியினது. மற்றொன்று? ஸூ கெங் - ஸெங்கை நோக்கினான். அடையாளம் தெரியவில்லை.

"ஹோப்-பிங் என்னவானான்? அவனுக்கு ஆபத்து ஒன்றுமில்லையே?" என்றான்.

"ஹோப்-பிங்கா? அவனுடைய உடல் எங்களுக்குக் கிடைக்கவில்லை. நீ முகாமுக்குத் திரும்பும்போது அவன் மனைவியிடம் இந்தச் செய்தியை நிதானமாக வெளியிடு" என்றதும் லா, கடினம் பாய்ந்த குரலில், "பல பேருடைய சடலங்கள் கிடைக்கவில்லை" என்றான்.

"ஹோப்-பிங் செத்துப் போய்விட்டானா?"—வாங் செங்-சி திடுக்கிட்டு நின்றான். சற்று முன்பு அவன் பார்த்த, ஆரோக்கியத்துடன் சிரித்தமுகமாய் இருந்த அந்த இளைஞன் இப்படி மாண்டு போனான் என்பதை அவனால் நம்பவே முடியவில்லை.

"அதனால் என்ன? செத்தவன் செத்தவனுடன் சேர்த்தி" என்று லா செங் வள்ளென விழுந்தான். "நீ தப்பித்துக் கொண்டாயே, உன் நல்லகாலம்! இங்கே நிற்காதே" என்றான்.

லா செங்-லெங் தன் உணர்ச்சிகளை மறைத்துக் கொள்ளத் திரும்பியபோது, மூழ்குவதே தொழிலாகவுடைய இருவர் ஆற்று நீரிலிருந்து கரையேறி அணைமீது வந்து நின்றனர். அவர்கள் தம் முழுக்காளி உடுப்புக்களையும் சாதனங்களையும் அகற்றிவிட்டு காம்யூனிஸ்ட்டுக் கண்காணிப்பாளனை சு பெய்-ஹாங்கிடம் போய் விவரம் கூறுவதைக் கவனித்தான். லாவுக்கு வாழ்க்கையே கசத்துவிட்டது. எத்தனையோ கண்ணராவியான காட்சிகளைத் தன் வாழ்நாளில் பார்த்திருக்கிறான் அவன். ஆனால், இப்படி வீணாக ஆட்கள் மடிவதைக் காண அவன் மனம் தவித்தது. முழுகுவதையே தொழிலாக உடையவர்களுக்கு பயம் ஏதுமில்லைதான். தப்புவதற்கு அவர்களிடம் சாதனங்கள் இருந்தன. ஆனால், இந்தத் தொழிலை செய்து அறியாத, உதவிக்கு எதுவுமே இராத அசதிகளான இளம் யுவகர்களை இப்பணியில் சிக்க வைத்து உயிர்த் துறக்கச் செய்வது அநீதமேயாகுமென அவன் எண்ணினான்.



இந்த அநீதத்தைக் குறித்துக் கும்பல் கும்பலாக இங்குமங்கும் ஜனங்கள் கோபத்துடன் பேசிக்கொண் டிருந்தனர்.

சாங்கிற்கு வந்த கோபத்திற்கோ எல்லை இல்லை. அவன் சொற்கள் தடுமாற, "நாம் பழிதீர்க்கவேண்டிய பட்டியலில் இப்போது இன்னும் சில பேர் சேர்ந்து விட்டார்கள்!" என்றான்.

ஷாலியிலிருந்து வந்த ஒரு பழைய ஆள் - அவன் நெற்றியில் ஐம்பதாண்டு காலத்தின் கடின உழைப்பின் கீற்றுக்கள் விழுந்திருந்தன - ஆற்றையே நோக்கினான். "1931-ஆம் ஆண்டு வெள்ளத்தைப் போல் ஒன்று உண்டா? இந்த வெள்ளம் அப்படிப் பிரமாதமானதன்று. முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருந்தால் இப்படி நேர்ந்திராது" என்றான்.

"நீயும் உன் முன்னெச்சரிக்கையும், போய்யா!" என்று சீறினான் சாங். அந்தக் கிழவன் சொன்னது பின்னும் சாங்கின் கோபத்தைக் கிண்டிவிட்டது.

"வாஸ்தவமே, எல்லோரும் கட்டிக் கவிந்து வேலை செய்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காதுதான். ஆனால் யார் அப்படி அவர்களோடு ஒத்துழைக்க முடியும்? இந்த வருஷத்தில் நடந்திருக்கும் அநீதங்களை யாரால் மறக்க முடியும்? கிழவா, உன் நிலங்களெல்லாம் பறிமுதலாகி உன் நண்பர்களெல்லாம் துப்பாக்கிக்கு இரையாகி இருந்தால்தானே உனக்குத் தெரியும் அந்தக் கஷ்டம்?" என்றான். யாருக்குமே அவன் பயப்படவில்லை; அக்கம் பக்கம் பார்த்துக்கூடப் பேசவில்லை. "நம்மை மனிதர்களாகவா நடத்துகிறார்கள் இவர்கள்?" என்று உரக்கப் பேசினான். "நாம் மாடுகளா என்ன, இப்படி ஈவு இரக்கமின்றிக் கொல்லப்படுவதற்கு?" என்றான். "டே, சிங்-சி, ஏன் வெறுமே இருக்கிறாய்? உன் வீரமெல்லாம் எங்கே போச்சு? இன்று உன் துணிச்சலைக் காட்டியிருக்கலாமே நீ!" என்றான்.

சிங்-சி தலையை ஆட்டினான். அணைக்கரையில் இறுகியிருந்த மனக்கொதிப்பை அவன் புரிந்து கொண்டான்.

ஹு ஹெய்-பிங்கின் அதிகாரப் படையைப் பின்னும் இந்தக் கொடியைக் கட்டிவிட்டதைக் கண்டான். இருப்பினும் தன் சொந்தக் கருத்துக்களையும் அவனுல் உதறித்தள்ள முடியவில்லை. ''நாமெல்லாம் கடுமையாக உழைத்திருந்தால் ஹெய்-பிங் போன்றவர்கள் செத்தே இருக்க வேண்டிய தில்லை. இந்த அமைப்பை வலுப்படுத்த நாம் ஒத்துழைப் புடன் முயன்றால்—'' என்றான்.

''நீ முன்னால் போய், பாடுபடேன்'' என்று சாங் அவனை வெட்டி, ''அட மடப் பயலே!'' என்றான். சற்று நின்று அவன், ''லு ஹெய்-பிங்கிற்காக நான் வருந்துகிறேனடா. எப்படி இருந்தாலும் அவன் செத்திருப்பான். ஆனாலும் அவன் திட்டப்படி நாறு அப்பாக்களுடன் ஒரு கை பார்த்துவிட்டு உயிர் நீத்திருந்தால் பரவாயில்லையே—'' என்றான்.

சாங் இவ்வாறு வாய்விடுவது அங்கிருந்த பலருக்கும் திகில் மூட்டியது. அவர்கள் நடுங்கிப்போய் அந்த இடத்தை விட்டு நகர்ந்து போயினர்.

''ஓங்-ஓ'' என்று து-பவோ, பின்புறமாக வந்து காதோடு, ''அலு-லியின் தங்கைக்குச் சமாசாரம் எப்ப டியோ எட்டிவிட்டது; இந்தக் காரைப் பக்கம் அவள் வருகிறாளடா. சு-பெய்-ஹீங் இப்போது இங்கே இல்லையே. அவளுடைய அண்ணனை எப்படிச் சாகடித்தான் என்ற விஷயத்தை அவன்தானே ஒன்றுவிடாமல் அவளுக்கு விளக்க முடியும்?'' என்றான்.

தட்டுத் தடுமாறிக்கொண்டே ஒரு பெண் அங்கு வந்தாள். கரைந்து கிடக்கும் ஒரு சவத்தின் பக்கம் அவள் மண்டியிட்டாள். வெகுநேரம் அவள் அசையாமல் இருந்தாள். அவள் கண்களில் நீரே வற்றிவிட்டது.

''பார் பஜாரியை!'' என்று சாங் தனக்குள் கூறி, ''பார், செத்துப்போன அண்ணன் பிணத்தைப் பார்த்துக்கூட அவள் ஒரு பொட்டுக் கண்ணீர் சிந்துகிறாளா?'' என்று சொல்லி அவளைச் சபித்தான்.



[illegible]

ஸூ கெங்-ஸெங் அவள் பக்கத்தில் வந்து நின்று பெண்ணை அவள் தோள்மீது தொட்டான். ஆனால் அந்தப் பெண் அதைக் கவனித்ததாகத் தெரியவில்லை.

வெகு நேரம் பொறுத்து அவள் எழுந்து நின்றாள். அவள் முகத்தில் ஒருவித உணர்வுமில்லை! கடினம் பாய்ந்து விளங்கியது. ஆனால் பகைமையைத் தெறிக்கும் ஒரு பாவம் அவள் கண்களில் பளபளத்தது.

''பொங்-ஸியின், அஹ்ஸியின் சடலம்; அவனைப் புதைக்க வேண்டும்'' என்று வெகு நேரம் பூண்டிருந்த மௌனத்தைக் கலைத்தான் ஸூ.

அவனையே கணநேரம் நோக்கினாள் அவள். சற்றுத் தயங்கி அவள் சுருக்கமாகவே பதில் சொன்னாள் :

''இந்த ஆற்றிலேயே போட்டுவிடுங்கள்! இங்கே உள்ளவர்களிடம், அவன் எப்படி மாண்டான் என்ற விஷயத்தைத் தெளிவுபடுத்துங்கள்'' — மெல்லிய முறுவற்கீற்று அவள் முகமதில் உலவிற்று. ஸூ கெங்-ஸெங்கின் முதுகில் ஒரு நடுக்கத்தை அது உண்டுபண்ணியது.

கரையின் மேட்டை நோக்கி அந்தப் பெண் மெல்ல நடந்தாள். இக்காட்சியைக் கண்டபேர் தம் வேலையைக் கவனிக்கத் திரும்பினர். சிலர் அவளை எள்ளி நகையாடினர். சிலர் 'சுசு' என்று நாக்கைக் கொட்டித் தம் அநுதாபத்தை வெளிப்படுத்தினர். இதையெல்லாம் அவள் சட்டை செய்யவில்லை. அவள் மனம் எங்கோ நிலைத்திருந்தது. பகையைக் கக்கிப் பழி தீர்த்துக்கொள்வதிலேயே அவள் எண்ணங்கள் ஈடுபட்டிருந்தன.

இதைவிட அவள் செத்தொழிந்து போயிருக்கலாம்'' என்றாள்.

''அப்படியெல்லாம் சொல்லாதேயடா அம்மா'' என்று சிங்-சியின் தாய் தடுத்தாள். ''எப்படியாவது எல்லாரும் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு இருந்துதானாக வேண்டும். பச்சைக் குழந்தைக்காரி. தன் நினைவாகத் தன் சதையில் பிறந்த அதையாவது ஹெய்-பிங் விட்டுச் சென்றானே? சியு-சு இறந்து போனால் அந்தக் குழந்தை கதி என்னவாகும்? இப்போது கசப்பாகத்தான் இருக்கும் எதுவுமே. குழந்தை பெரியவனானதும் இ குடும்பத்தின் வருங்காலம் ஒளிமயமாகும். அதையாவது அவள் நினைக்க வேண்டும். செத்துப் போய் விடுவதனால் என்ன பலன்?'' என்றாள். ஷியு-மின் வேறெதுவும் பேசவில்லை; சிங்-சியின் தாய் சொன்னது அவளுக்கு உள்ளூற உரைத்து விட்டது.

''வாங் வீட்டுக்காரி படுகிடையாகக் கிடக்கிறாள். இப்போதோ பின்னேயோ என்று இருக்கிறது அவள் நிலை...'' என்றாள் கிழவி.

''லீயின் சம்சாரமும் இந்த நிலையில்தான் இருக்கிறாள்'' என்றதும் அவள் கண்களை இறுக மூடிக்கொண்டாள். ''மக்களுக்குத்தான் என்ன கஷ்டம் போ!'' என்றதும் நிறுத்தி ஓரிடத்தைக் குறிப்பிட்டு, ''பெங்-ஷியின் இருக்கிறானே, அவனுக்குத்தான் என்ன கல் இதயமோ, என்ன கொடிய மனமோ! அவள் அண்ணன் போனதைக் குறித்துத் துளியாவது கண்ணீர் விட்டாளா?'' என்றாள்.

''பெங்-ஷியனுக்குக் காரணம் இருக்கிறது'' என்று ஷியு-மின் தொடங்கினாள். ஆனால் உடனேயே பேச்சை நிறுத்தினாள். பெங்-ஷியன் திட்டம் போட்டிருப்பதை வெளியிட அவள் விரும்பவில்லை.

''சிங்-சி சற்று இளைப்பாறடா, நான் போய் லுவின் சம்சாரத்தைப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்றாள் அவன் தாய்.



தாய் சென்றதும், சிங்-சி, ஷியு-மின்னின் கையைப் பிடித்து, ''ஹெய்-பிங்கைப் போன்ற ஒரு மனுஷ்யன்... யாருக்குமே அந்த மாதிரி விதி ஏற்படக்கூடும்தான்'' என்று மெல்லவே சொன்னான். ''என்னுடைய முறை அடுத்தபடி வரலாம் - நாளைக்கோ, அப்புறம் என்றைக்காவதோ. ஷியு-மின், நான் அந்த மாதிரி மரணமுற்றால் நீ வருத்தப்படவே கூடாது; தைரியமாக வாழவேண்டும்; விதியை யாராலும் தடுக்கமுடியாது. வருங்காலத்தைப் பற்றி எதுவும் நிச்சயமாகச் சொல்லுவதற்கில்லை'' என்றான்.

''சிங்-சி'' என்று விம்மினாள் அவள். ''அந்த மாதிரி பேசாதே; அவர்கள் உன்னைக் கொல்லும் அளவுக்கு எதிலும் சிக்காதே'' என்றாள்.

''ஷியு-மின், அழாதே; நம்மால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை'' என்றதும் சற்று நின்றான். ஹெய்-பிங் மரணத்தே பிடித்து தன் வீடு, குடும்பம், தாய், தங்கை, ஷியு-மின், தன் நிலை, ஒன்றாகப் பிணைந்த இவர்களது வாழ்வு இவைபற்றிய பயங்கர நினைவுகள் அவனைச் சூழத் தொடங்கிவிட்டன. மூன்று பெண்கள் அவனை நம்பித்தானே உயிர் வைத்துக் கொண்டிருக்கின்றனர்? எனவே, ஹெய்-பிங்கைப்போல் தானும் மரிக்கக்கூடுமென்ற துன்ப நினைவை அகற்ற முயன்றான். தன் உள்ளத்தைவிட்டுப் பேசத் துடித்தான். அச்சமயம் அவன் தங்கை குறுக்கே வந்து, ''அண்ணா, சற்றுப் படுத்து இளைப்பாறு, இதைப்பற்றியெல்லாம் விசனப் படாதே'' என்றாள். அவள் இப்படிச் சொல்லவே தன் மனத்திலுள்ள பளுவை உதறத் தலைப்பட்டான்.

''சின்னத் தங்கச்சி! இந்த இரண்டு நாளாக நீ தூங்கினாயா இல்லையா?'' என்றதும் அவளது வாராத கூந்தலைத் தடவித் தந்தான். அந்தப் பெண்ணுக்கு வயது பதினாலுதான். சிற்றரும்பு முற்றி வருமுகையாதான பூங் கொடி போன்றவள். ஷிலிங்கில், தந்தை இறந்துபோகு முன்னர், காம்யூனிஸ்ட்டுக்கள் நாட்டைப் பற்றுவதற்கு முன்பு, விசனம் அறியாமல் உற்சாகமாகத் திரிந்த குழந்தை அவள். ஆனால் இப்போது, அகதிமுகாம்களின் நிச்சயமற்ற

சூழ்நிலையில் அவளுக்கு இருந்த தென்பெல்லாம் எங்கோ பறந்தோடிவிட்டது.

சிங் - சி மீண்டும் ஸியு - மின்னை நோக்கினான். அவள் முகத்தில் வேதனை எழுதியிருந்தது.

மென்மை உணர்ச்சி திடுமென மேலிட அவன் தன் தங்கையைத் தழுவிக்கொண்டான். சிறுமி லஜ்ஜைக் குள்ளானாள். ஸியு - மின் பக்கம் திரும்பினான். தன் அன்பை அவளுக்கு எப்படிக் காட்டுவதெனத் தவித்தான். ஆனால் அவள் அவனைக் கட்டிற்குள் நிறுத்தினாள். நெஞ்சமாற அவனைத் தழுவி இன்புற ஏங்கினாள் பேதை. ஆனால் பெரியவர்கள் முன்பு அவள் அறத்தோடு நிற்கவேண்டிய தாயிற்று.

வெளியே பல்வேறு குரல்கள் கேட்டன. ஸூ அஹ்-சென் தொடர சிங்-சியின் தாயும் வந்தாள். பின்னால் வந்த லூ சியு-சுவும் இப்போது எவ்வளவோ துயர் தணிந்து தென்பட்டாள். நேரே தன் படுக்கை இருக்குமிடத்திற்குச் சென்றாள் அவள். சிங் - சியின் தாயும் ஆறுதல் பெரு மூச்சுடன் அமர்ந்தாள்.

பிற்பகல், சிங் - சி பிரியும் நேரம் வந்துவிட்டது. அவனுக்கு எழுந்திருக்கவே பிடிக்கவில்லை. இந்தப் பிரிவினை இரண்டொரு நாட்களுக்கு மட்டுமா? மீண்டும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ள முடியுமோ, முடியாதோ என்ற வேதனை அவனை அரித்தது.

முகாமின் வெளியே சிறிது தூரம் ஸியு-மின் அவனுடன் வந்தாள். இருவரும் சில நிமிடங்கள் நின்றனர்; ஒன்றுமே பேசவில்லை. யாரோ வரும் காலரவம் கேட்டது. வென் பெங் - ஸியன் வெளியே வந்தாள். தலைவாரிக்கொண்டு நல்ல உடுப்பு அணிந்திருந்தாள். முகத்தில் துயரின் நிழல் விலகியிருந்தது.

ஸியு-மின் சட்டென நிமிர்ந்து சிங் - சியின் உள்ளங் கையை மெல்லக் கசக்கினாள்.

''ஸியு-மின், என்ன சொல்லேன் ?'' என்றான் சிங்-சி.



அவள் வாய் திறப்பதற்குள் வென் பெங் - ஸியன் அவர்கள் அருகில் வந்துவிட்டாள்.

''ஸியு-மின், போய் வருகிறேன்'' என்றாள் அவள் நிச்சலனமாக.

''பெங்-ஸியன்'' என்று ஸியு-மின் கூப்பிட வாயெடுத் தாள். ஆனால் பெங்-ஸியன் சிரித்து, சிங்-சியைப் பார்த்துத் தலையசைத்துவிட்டு, தன் வழியே விரைவாகச் சென்றாள்.

''இப்போது சற்றுத் தென்பாக இருக்கிறாளே, இந்த முகாமைவிட்டு விலகுவதேபோல்; எங்கே போகிறாள் ?'' என்றான் சிங் - சி. ஸியு - மின் ஒன்றுமே பேசவில்லை. அதற்கு மேல் கிளறிக் கேட்க அவன் விரும்பவில்லை. அணைக்கரையை நோக்கி அவன் மெல்ல நடந்தான், மனத்துள் மூண்ட சில சந்தேகங்களை விலக்கிவிட்டு. தன் தொல்லையே நிரம்ப் இருக்கும்போது பிறர் விஷயத்தில் தலையிடுவானேன் என்று அவனுக்குத் தோன்றியது.

இதற்குள் நன்றாக இருட்டி விட்டது. பெங்–ஸியன், தன்னைச் சுற்றிலும் நிகழ்ந்த குழப்பம் கூச்சலையெல்லாம் காதில் போட்டுக்கொள்ளாமல் வெள்ளம் பாய்ந்த தெரு வழியே நடந்தாள். சாக்கடை நாற்றத்தையும், வழியில் போவோர் முறைத்துப் பார்ப்பதையும் பொருட்படுத்த வில்லை அவள். தன்னுடைய ஏகாந்த மனநிலையிலேயே அவள் திளைத்திருந்தாள். தான் வகுத்த சுலபமான திட்டத் திலேயே நாட்டமாக இருந்தாள். துயரே அற்றுவிட்டது போல இருந்தது அவளுக்கு. தன் குறிக்கோளை நோக்கி இலேசான மனத்துடனும், தென்புடனும் நடக்கலானாள்.

நகரின் புறப்பகுதியை அவள் அடைவதற்குள் நன்றாக இருள் கவிந்துவிட்டது. இங்குமங்கும் சிதறினாற் போன்ற கட்டடங்களுக்கிடையே ஊதைக் காற்று வீசிக்கொண் டிருந்தது. பேரொலி எழுப்பி அது கரைப்பக்கம் சென்றது. தேங்கியிருக்கும் சகதிக்குட்டைகளை அலப்பியது; கும்பலாகச் சுருட்டிப்படுத்து உறங்கும் கூலியாட்களின் பொத்தல் குடிசைகளை உலுப்பி ஆட்டியது. வானம்

மந்தாரமாக இருப்பினும், எப்போதாவது ஒரு சமயம் மழை மேகங்கள் விலகும். வான் வெளியிலிருந்து இரண்டொரு தாரகைகள் கண் சிமிட்டின. வானத்தின் சித்திரம், அணைக் கரைக்குக் கீழே உள்ள ஆற்று நீரிலும் விழுந்தது.

பெங் - ஸியனுக்கு உடல் நடுக்குற்றது. வெலவெலத்து நாற்புறமும் பார்த்தாள். அங்கே யாராவது பார்த்து விட்டால் என்ன பண்ணுவது? ஆனால் அன்றிரவுக்குப்பின் அது பொருட்டேயில்லை. ஆம் அன்றிரவுக்குப் பின்...? சற்று நேரம் அவள் அசையாமல் நின்றாள். மெதுவாக சுற்றிலும் நோக்கினாள். வானத்தைப் பார்த்தாள். சதுரமான ஒரு செங்கல் கட்டடத்தை அணுகினாள். அதன் வாசல் கதவுமுன் சில நிமிடங்கள் நகராமல் நின்றாள். கண்ணை மூடிக்கொண்டாள், ஆழ்ந்து தியானம் செய்வது போல். ஒரு வேளை பயத்தினால் அவ்வாறு மூடினாளோ? கையை நீட்டி விரைவாகக் கதவைத் தட்டினாள்.

மாடியறைகளில் ஒன்றிலிருந்து குரலொலிகள் வந்தன. அவற்றில் சில உரத்து ஒலித்தன. மற்றும் சில தாழ்ந்து குழைந்தன. நாற்காலியொன்று பின்னுக்குத் தள்ளப்படும் ஒலியையடுத்துப் பேச்சு நின்றதைச் செவி மடுத்தாள். அடுக்குச் சிரிப்பு வெடித்தது. கதவொன்று திறந்தது. மரப் படியில் அடிச்சுவடுகள் ஒலிப்பது கேட்டது. பெங் - ஸியன் சுவரோடு ஒட்டிக்கொண்டாள். அவள் உள்ளங்கைகள் வியர்த்தன. இனி மனம் மாற இடமில்லையெனத் தேர்ந்தாள்.

கதவு படீரெனத் திறந்தது. சு பெய் ஹூங் இருளூடு கண்ணைச் செலுத்தினான். அவள் நிற்பது தெரிந்தது.

''ஆஹா! வந்துவிட்டாயா? உனக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான் அவன்.

''இரவு வந்ததும் வரச் சொன்னாயே?'' என்றாள் அவள் தாழ்ந்த குரலில்.

''ஆமாம்...இருட்டிய பிறகுதான்''-அவளையே அவன் விழுங்கிவிடுவதுபோல் பார்த்தான். சுவர் ஓரமாக அவள் முதுகுப்புறம் ஊன்றச் சாய்ந்தாள். உருண்டு திரண்ட



அவளுடைய கொங்கைகள் அவள் அணிந்திருந்த மெல்லிய சட்டைக்குள் விம்மிப் புடைத்திருந்தன. அவன் அவள் பக்கமாக நகர்ந்தான். அவளுடைய கோட்டினுள் தன் கையைவிட்டு, அவள் உடலுடன் தன் தொடையை உரசினான்; முரட்டுத்தனமாக அவளுக்கு முத்தம் ஈந்தான். அவன் செய்வதற்கெல்லாம் அவள் இடம் தந்து இணங்கி நின்றாள்.

பெய் - ஹூங் அவளை விடுவித்து இளித்தான்.

''இங்கே எத்தனை நாழிகை காலம் போக்குவது? உள்ளே வா; பயப்படவேண்டாம். இங்கே இருப்பவர் களுக்கு இன்றிரவு ஒரு பெண்ணை நான் சந்திக்கப் போகும் விஷயம் தெரியும்'' என்றான்.

பெங் - ஸியன் அவனைப் பின்தொடர்ந்து உட்புறம் சென்றாள். மங்கல் வெளிச்சம் பாயும் மாடிப்படி வந்தது. உள்ளூர் காம்யூனிஸ்ட்டு அதிகாரிகள் இருக்கும் அறைகளை யொட்டிய நடையை அடைந்தனர். அங்கே ஓர் அறையின் கதவைத் திறந்து அவன் பெங் - ஸியனை உள்ளே தள்ளினான். பின்னர் கதவை மூடித் தாழிட்டான். அச்சிறு அறையினுள் மருண்டுபோய் அவள் நாற்புறமும் நோக்கி நின்றாள். தன் அண்ணனுக்காக அநுகூலம் கோர, பயனற்ற உறுதி மொழியைத் தக்க ஈடுகொடுத்துப் பெற ஒரு சமயம் அந்த இடத்திற்கு தான் வந்ததை அவள் மறக்க முயன்றாள்.

பெய்-ஹூங் அவள் தோளைக் குலுக்கும்போதுதான் அவள் மயக்கம் தெளிந்தது.

''பெண்ணே, ஏதோ பேயைக்கண்டு மருண்ட மாதிரி இருக்கிறாயே?'' என்றான் அவன்.

அவளுக்குத் தூக்கிப்போட்டது. அவனைப் பார்த்து முறுவல் செய்தாள்.

''ஓ, பெய்-ஹூங்! எனக்கு மிகப் பசியாகவும், களைப்பாக வும் இருக்கிறது. முகாமிலிருந்து எவ்வளவு தூரம் இந்த இடம்?'' என்றாள் அவள்.

''ஐயோ பாவம், ஒத்துழைக்கும் தோழியல்லவா நீ! இப்படிக் களைத்துச் சலித்திருக்கலாமா?'' என்று பெய்-ஹூங் தமாஷாகப் பேசினான். இரையை விழுங்குமுன் வளைய வந்து இன்பம் காண விழைந்தான். அவள் துடைப்பக்கம் சட்டெனக் கையை விட்டு, ''வேணது தருவேன்; உணவுக்கும் சாராயத்துக்கும் என்ன குறைவு? சற்று இளைப்பாறு - நான் கொண்டு வந்து சமர்ப்பிக்கிறேன். அதோ சோப்பு, தண்ணீரெல்லாம் வைத்திருக்கிறேன். உடம்பை வேணுமானால் கழுவிக்கொள்'' என்றதும் அவளுக்கு வேடிக்கையாக வணக்கம் செலுத்திவிட்டு அவள் காதுச் சதையைக் கவ்வினான். ''நன்றாகச் சாப்பிட்டு இளைப்பாறியதும் கண்ணுக்குட்டிக்கு மறுபடியும் கஷ்டம் கொடுப்பேன்'' என்று வார்த்தைகளை ஒழுக விட்டபின் உரக்கச் சிரித்துவிட்டு அறையைவிட்டுச் சென்றான்.

பெங்-ஸியன் அச்சிறு அறையினுள் சுற்றிச் சுற்றி நடந்தாள், தன் சிந்தனையில் வேகத்தை அடக்க முயன்றபடி. அவள் நடக்கும்போது, அறையில் தொங்கும் அந்த ஒற்றை மின்சார 'பல்பு' அவளைப் பின்பற்றும் சாத்தானின் கண் போல ஊசலாடியது. சுவர்களும் சுற்றுவதுபோல் இருந்தது; அவள் தலை கிறுகிறுத்தது. நாற்காலியொன்றில் அமர்ந்து தலையைப் பிடித்துக் கொண்டாள். அவ்வறையில் ஒரே சிறு சாளரம். உள்ளே காற்றிராமல் இறுக்கம்; அவள் நெற்றிக் கட்டில் பொட்டுப் பொட்டாக வியர்வைத் துளி. அவள் சற்று நல்ல காற்றுக்காக சாளரத்துக்கு வெளியே தலையை நீட்டினாள்.

பூரணசந்திரன் பூமி விளிம்புக்குமேல் எழும்பியிருந்தது. மேகத்தின் இடுக்கு வழியே அது பசலை ஒளியை விகாரமான கட்டடங்கள் மீதும், நகர்ப்புறம்பிலுள்ள விடுதிகள்மீதும் பாய்ச்சியது. தெருக்களில் பெரும்பாலான விளக்குகள் அணைந்து கிடந்தன. தொலைவில் லாந்தர்கள் வரிசையாக ஒளிரும் அணைக்கரையின் வளைவு தெரிந்தது. அதற்கப்பால் ஆற்று நீரின் மங்கலான உருவம். அது பல மைல்கள் இருளிடையே விரிந்து சென்றது; பயங்கர மரணம் கூவி



யழைப்பது போலிருந்தது. அவள் கெட்டியாகக் கண்களை மூடிக்கொண்டாள். அணைக்கரைமீது தன் அண்ணனின் துவண்ட தேகம் மங்கல் நிலவொளியில் தென்படுவது போன்ற ஒரு மருள் தோன்றியது.

திடுக்குற்றாள், நடுங்கினாள்; பெய்-ஹூங்கின் கரம் அவள் மீது உரசியபோது. சிறிது நேரத்திற்கெல்லாம் சமாளித்துக் கொண்டு அவனது வன்மையான அணைப்பிற்குள் அடங்கிப் போய்த் தலையை நிமிர்த்தினாள். ஓர் அதிசயச் சிரிப்பு அவள் இதழ்க்கடையில் உலவியது.

சில மணிநேரம் கழிந்தது. படுக்கையின் ஓரமாக ஒரு வெற்றுச் சாராய சீசாவும், இரு கண்ணாடிக் குவளைகளும், குப்பியில் செருகிய மெழுகுவத்தியின் அரையும் ஒளியில் தெரிந்தன. சுவரில் விகாரமான நிழல்கள் ஆடின. அறையில் சந்தடியே இல்லை. படுக்கையிலிருந்து சொட்டுச் சொட்டெனப் பெருகித் தரையில் வழியும் இரத்தத் துளிகளின் மெல்லொலியும், கையில் கத்தி ஏந்திய அந்தப் பெண் மூச்செறியும் ஓசையுமே கேட்டன.

வெளியே மேகம் கவிந்து பெருமழை கொட்டத் தொடங்கியது. பெங்-ஸியின் மெல்லிய உருவம் துரிதமாக வெளியே ஓடுவதையும், சேற்றில் சறுக்கிச் சமாளிப்பதையும், மீண்டும் மானெனக் கரையை நோக்கி விரைவதையும், பார்க்க யாருமே இல்லை அச்சமயம். ஒரு பெண் ஒரு 'புலி'யின் குரல்வளையை அறுத்துவிட்டுத் தன் பழியைத் தீர்த்துக்கொண்டு ஆற்றினுள் அலறிக் குதித்து மாண்டு போன கதையை அணைக்கரையருகில் உறக்கமும் விழிப்புமாக இருந்த ஒரு காவல்காரனையன்றி வேறெவரும் அறியார்.

## 5

''வாங் சிங்-சி!'' என்று வெளியே ஒரு குரல் கூப்பிட்டது.

''இதோ!'' என்று சிங்-சி உடனே பதில் தந்தான். கண்காணிப்பாளரின் அலுவலகத்திற்கு வெளியே அவன் அரை மணி நேரமாக நின்றுகொண்டிருந்தான்.

சீருடையணிந்த ஓர் ஆள் சமிக்ஞைசெய்து சிங்-சியை நோக்கி, ''உள்ளே வரலாம்; உன்னைப் பார்க்க விரும்புகின்றனர்'' என்றான்.

சிங்-சிக்குச் சற்றுத் திகிலாகத்தான் இருந்தது. எதற்காகத் தன்னை அழைத்தனரென்பது அவனுக்கு விளங்கவில்லை. இதற்குமுன் உயர்பதவியிலிருக்கும் காம்யூனிஸ்ட்டுக்கள் அவனை அழைத்ததே இல்லை. ஏனென்றால், அரசியலுக்கும் அவனுக்கும் யாதொரு தொடர்புமில்லை. இப்போது அவனை அழைத்த ஆள் கண்காணிப்பு அலுவலகத்தைச் சேர்ந்தவன்.

''நீதானா வாங் சிங்-சி?'' என்று மேஜைப்பக்கம் அமர்ந்திருந்த ஒருவன் அவனைப் பார்த்துத் திடுமெனக் கேட்டான். அந்த மனிதன் உட்சட்டை மட்டுமே அணிந்திருந்தான்.

''ஆம், ஐயா!'' என்று சிங்-சி தாழ்மையாக வணங்கியபோது, மேஜையருகில் இருந்த மனிதனின் முகத்தில் திருப்தியைக் குறிக்கும் முறுவல் படர்ந்தது. அவனும் நட்பு தொனிக்கும் குரலில் சிங்-சியைப் பார்த்து, ''நீ தைரியமாக அணை வேலை செய்வதுபற்றி எங்களுக்குத் தகவல்கள் கிடைத்து வருகின்றன. உன் உழைப்பை நாங்கள் மிகவும் மெச்சுகிறோம்'' என்றான். சற்று வாளாவிருந்து மீண்டும் அவன் முகம் சுளித்து மேஜைமீது சாய்ந்தவாறு, ''இருந்தாலும் யாரோ சிலபேர் ஹாங்கோ அணைக்கரையில் வேலை நடப்பதைக் கெடுக்க முயலுவதாகவும் புகார்கள் வருகின்றன. எங்களுக்குத் தெரியும், நீ உன் வேலையைச் சரியாகச் செய்கிறாய் என்பது. அந்தச் சதியாட்கள் உன்மீது கண் வைத்திருப்பதும், எங்களுக்குத் தெரியும். நீ அவர்கள் விஷயத்தில் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும்; எதையும் கவனிக்க வேண்டும். வேலை செய்பவர்கள் என்ன பேசிக்கொள்கின்றனர் என்பதையும் நீ கவனித்து வரவேண்டும். எங்களுக்கு இதுபற்றி அவ்வப்போது சமாசாரம் எட்ட விடவேண்டும். எங்களுக்குத் தகவல் தேவை'' என்றதும் மேஜைமீது தன் முட்டியால் ஓங்கித் தட்டினான்.



சிங்-சி எதுவும் பேசவில்லை. தான் அப்படித் தைரியமிகுந்த வேலையாள் அன்றென்பது அவனுக்குத் தெரியும். சதிகாரர்களைப் பற்றியும் அவனுக்கு தெரியாது. அந்தக் காம்யூனிஸ்ட்டு அதிகாரியின்முன் மரமென நின்றான்.

''உனக்குப் புரிந்தா நான் சொன்னது?'' என்று அந்த ஆள் உரக்கச் சொன்னான்.

''சதிகாரர்களா? எனக்கு ஒன்றுமே தெரியாது—'' என்றான் சிங்-சி.

''விரோதிகளின் ஆட்கள் இந்த வெள்ளத் தடுப்பு வேலையைச் சீர்குலைக்கச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். வேலையாட்களின் மனத்தைக் கலக்க என்னவெல்லாமோ பிரசாரம் செய்கின்றனர்; இல்லாததையெல்லாம் புரளிவிடுகின்றனர்.''—இவ்வாறு கூறி நிறுத்தித் தணிந்த குரலில் மீண்டும், ''உன் காதிலும் விழுந்திருக்குமே, இந்த மாதிரிப் பேச்சு: 'அணைக்கரை இடியாது இருந்தால் காம்யூனிஸ்ட்டுக்களுக்கு நல்லதாகும்; ஆனால் மக்களுக்குக் கெட்டதாகும்; கரையிடிந்தால் மக்களும் சரி, காம்யூனிஸ்ட்டுக்களும் சரி, சேர்ந்தே ஒழிந்து போவார்கள்.'—இப்படியெல்லாம் பேசுகின்றனராமே; உனக்குத் தெரியாதா?'' என்றான்.

இப்படி வேலையாட்களின் மனப்போக்கு உள்ளது உள்ளபடி அவர்களுக்கு எட்டியிருந்தது கண்டு சிங்-சி திடுக்கிட்டுப் போனான். எதிர்பாராமல் மாட்டிக்கொண்டதனால் மழுப்ப வழி புரியாதவனாய்த் திருதிருவென்று விழித்துத் தலையை அசைத்தான்.

''இப்படிச் சொன்னது யார்?'' என்று கேட்டான் அதிகாரி. ''துணை அணைக்கரையில் வேலை செய்வோர் அப்படி யாரோ பேசித் திரிந்தது என் காதில் விழுந்ததுண்டு'' என்றான்.

''யாரோ சொன்னானா? அவன் பெயர்தான் என்ன?'' என்றான் அவ்வதிகாரி.

''எனக்குச் சரியாக ஞாபகமில்லை. அங்கே எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்கள் யார் என்பதெல்லாம் நான் எப்படி அறிவேன்?'' என்று கூறும்போது சிங்-சியின் நெற்றியிலிருந்து வியர்வைத்துளி தரையில் சொட்டியது. பொறிக்குள் தன்னைச் சிக்கவைத்து விட்டனரென உணர்ந்தான். ''எத்தனையோபேர்தான் அவ்வாறு பேசிக்கொண்டனர்'' என்றான்.

அந்த அதிகாரி சட்டென எழுந்து, உட்புற அறை யொன்றினுள் சென்றான். சிங்-சிக்கு நடுக்கம் ஏற்பட்டது. என்ன நேருமோ என்று. விரைவில் இரண்டு சிப்பாய்கள் கயிற்றால் பிணைக்கப்பட்ட ஓர் இளைஞனை இழுத்து வந்தனர். அவ்விளைஞன் சாங்தான் என்பதை சிங்-சி கண்டு கொண்டான். அப்படியே இடிவிழுந்து போனான்.

''இவனைத் தெரியுமா உனக்கு? இவன் பெயர் என்ன? உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?''-அதிகாரி கேட்டான்.

''இவன்...இவன்தானே?...சாங் - சாங் - தா - ஸாங்'' - வாய் குழறினான் சிங்-சி.

''ஆம், சாங் தா - ஸாங்தான். எதிரிகளின் வேவுகாரன். தெய்வான் ஒற்றர்களின் ஒருவன் இவன்.''

எதுப் பேச சிங்-சி அஞ்சியவனாய் சாங் - ஸாங் பக்கமே திரும்பிப் பார்க்கவில்லை.

''நீ போகலாம் இப்போது; கூப்பிடும்போது ஆஜராக வேண்டும்'' என்றதும் அந்த அதிகாரி, அச்சமயம் அறையில் நுழைந்த ஒரு கட்டுமஸ்தான புலவனைச் சுட்டி, ''இவர் தான் தோழர் சயாங்-குவாங் ஸாவா; உன் காதில் எது விழுந்தாலும் இந்தத் தோழரிடம் அறிவித்துவிடு. நீங்கள் இருவருமே இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும்...இனம் கிடைக்கும்'' என்றான்.

சிங்-சி தலையசைத்துவிட்டு, அறையை விட்டு மெல்ல நடந்து சென்றான். தோழர் குவாங் ஸாவாவும் அவனுடன் சென்றான். வெளியே வந்ததும் நடுக்கத்துடன் சிங்-சி



அவனைப் பார்த்து, ''இப்போது பேசினாரே அந்த அதிகாரி யார்?'' என்றான். ''அவர்தான் தோழர் வீ தின் - மின் — நாலாவது உட்பிரிவின் தலைவர்'' என்றதும் குவாங் - ஹுவா பெருமையுடன் ''அவர் சொன்னதை மறக்காதே'' என்றான்.

''மறப்பேனா?'' என்று சிங்-சி, தன் நடுக்கத்தை மறைத்துக் கொள்ளப் பார்த்தான்.

''நீ பள்ளிக்கூடத்தில் படித்திருக்கிறாயா?'' என்றான் குவாங் ஹுவா.

''நான்தானே?'' என்று சிங்-சி சற்றுத் தடுமாறினான். தன்னைப் போல் நடுத்தரப் பள்ளிவரை படித்தவர்கள்மீது இதுபோன்ற நிலைமையில் சந்தேகம் ஏற்படுவது வழக்கம் என்பது அவனுக்குத் தெரியும். அதனாலேயே நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவன் என்பதைப் அவன் விளம்பரப் படுத்திக் கொள்ள விரும்பவில்லை. பதில் சொல்லவேண்டுமே என்பதற்கு, ''ஏதோ கொஞ்சம் படித்திருக்கிறேன்'' என்றான்.

''ஓ, நீ பள்ளிக்கூடம் போயிருக்கிறாயா? நல்லதாயிற்று. மக்களுக்கு இந்த அணைக்கரை எவ்வளவு நன்மையானது என்பது உனக்குப் புரியும். எந்தப் பள்ளியில் படித்தாய் நீ? நடுத்தரப் பள்ளியா?'' என்றான் குவாங் ஹுவா.

இதற்குமேல் மறைத்துக் கூறுவதில் பயனில்லையென அறிந்து, ''நான் உயர்தரப் பள்ளியில் படித்த பிறகு கல்லூரியிலும் படித்தேன்'' என்றான் சிங்-சி.

''பேஷ்!'' என்றான் குவாங் ஹுவா, வியப்பு மேலிட. பல்கலைக் கல்லூரியில் படித்த மாணவன் அணைக்கரையில் சாதாரணக் கூலிவேலை செய்கிறான்! அவனும் கல்லூரியில் படித்தவனே. இப்போது இந்த வெள்ளத் தடுப்பு வேலையில் தன்னைப்போன்ற சில மாணவத் தொண்டர்களுடன் ஈடுபட்டிருக்கிறான். குவாங் ஹுவா, சற்றுப் பொறுத்துத் தொடர்ந்தான்: ''நீ கல்லூரியில் படித்தவன் - நல்லதாயிற்று. இந்த மக்களை நீ சரிப்படுத்தி, வழிகாட்ட வேண்டும். மனம்

விட்டுச் சொல்லப் போனால், இந்த அணைக்கரையில் வேலை செய்பவர்கள் நம்முடன் ஒத்து உழைக்கவில்லை. இதில் உபத்திரவமாக இருக்கும் போர்வழிகளை ஒழித்துக்கட்ட எங்களுக்கு உதவி புரிவதே உமது வேலை.''

''அதற்கென்ன ?'' என்று பதில் கூறினும் சிங் - சிக்கு இலேசாகவே இருந்தது. சுயாங் குவாங் - ஹுவா திரும்பிச் சென்ற பிறகே அவனுக்கு நிம்மதி பிறந்தது; இனிமேல் அவன் அணைக்கரைப் பக்கம் தாராளமாகப் போகலாம்.

பாதை நெடுக வெள்ளநீர் பெருகியிருந்தது. வீடுகள் முன்னர் தட்டுமுட்டுச் சாமான்கள் கூளம்போல் குவிக்கப் பட்டிருந்தன. நகரின் அரண், சங்குங் அணைக்கரை இவற்றின் கீழ்ப்பகுதியிலுள்ள இடங்கள் அடிக்கடி மழை நீரினாலும் சாக்கடைக் கழிவு நீரினாலும் நிரம்பிவிடும். நீரை இறைப்பதற்குப் பம்புகளை உபயோகித்தும் தெருக்களிலும், படுகைகளிலும், வீட்டினுள்ளும் தேங்கிய நீரை அப்புறப் படுத்த முடியவில்லை. பயிர்நிலங்களையும் அது அமிழ்த்தி விட்டது.

சிங் - சியின் மனம் எங்கோ சுழன்றதால் அணைக் கரைக்குச் செல்லும் வழியில் நகரின் இந்த அலங்கோலக் காட்சியில் அவன் நாட்டம் செல்லவில்லை. ஏதோ ஒரு அச்சம் அவனை உலுப்பியது. 'அணைக்கரையில் அக்கம் பக்கம் பாராமல் எதையோ உளறிக்கொட்டியதால்தான் சாங்கிற்கு இந்தக் கதி நேர்ந்தது. ஆனால் அவன் எதிரியின் வேவு காரன் என்று கூறுவது பெருத்த அநியாயமே. வாழ்க்கையில் வெறுப்புற்று, அங்கே நடக்கும் அநீதங்கள், கஷ்டங்களைப் பற்றிக் காரசாரமாக பேசியிருக்கலாம். அவன் இருந்த அணைக்கரையில் நல்லவர்கள்போல், நண்பர்கள்போல் நடிக்கும் ஒற்றர்கள் நிறையப்பேர் இருக்கவேண்டும். தம் முடன் உணவு கொண்டவர்களைக்கூட இவர்கள் சமயம் வாய்க்கும்போது முதுகில் குத்துவார்களே. அசாக்கிரதை யாக இருந்ததன் விளைவை சாங் அனுபவித்துதானே ஆக வேண்டும்? எங்கேயாவது இவனை நீண்ட நேரம் உடல் உடைய வேலை வாங்குவார்களோ என்னவோ?'



இந்த அணைக்கரையை உயர்த்தும் வேலை மிகவும் அவசியம் என்றே இன்னமும் சிங் - சி எண்ணினான். பெரிய நகரத்தை, வீடுவாசலையெல்லாம் இயற்கையின் வெறி யாட்டம் அடியோடு துடைத்துச் செல்வதைப் பார்த்துக் கொண்டு இருப்பதா ? எந்தக் கட்சி ஆட்சி நடத்தினால்தான் என்ன, சும்மாவிருக்க முடியுமா ? இருந்தாலும் ஆத்திரத் தாலோ அனுதாபத்தாலோ ஓரிரண்டு வார்த்தை உதிர்த்து விட்டதற்காக ஆண்டுக் கணக்கில் பாடுபட வேண்டும், அல்லது உயிரையே பறிகொடுக்கவேண்டும் என்றால் இந்த வெள்ளத்துடன் போராடி வெற்றி பெறுவதில் எவர்தான் அதிகாரிகளுடன் ஒத்துழைப்பர் ? வேலையாட்களிடையே அலையெனப் பரவிய அந்தப் பேச்சு அவன் நினைவிற்கு வந்தது : 'அணைக்கரை தகர்ந்தால் மக்களுடன் காம் யூனிஸ்ட்டுகளும் மடிந்தொழிவர் அல்லவா ?'

கடந்த சில ஆண்டுகளாகத் தம்மீது சுமத்தப்பட்டுவந்த வாழ்க்கை முறையை உடைத்தெறிய மக்கள் எவ்வளவோ முனைந்தும் முடியவில்லை. நழுவி விடும் பனிமலையை வெறுங் கையால் ஒதுக்கப் பார்ப்பது போலாகும் இது. அழுகிய முட்டைகளைக் காலின்கீழ் இட்டு நசுக்குவதுபோல் மக்களை ஒடுக்கிவிட்டனர். எதிர்ப்பினால் ஏற்பட்ட பலன் என்ன வென்றால் வெறும் இரத்தக்களறியே.

அன்று நீரின் மட்டம் உயர்ந்துவிட்டது. அணையின் மேற்பரப்புமீதும் அலைகள் மோதின. வானிலை அறிக்கை குறித்துப் பரபரப்படைந்து பேசிக்கொண்டிருந்த ஒரு கூட்டத்தினரை நோக்கி நடந்தான் சிங் - சி. இரவில் காற்று பலமாக வீசக்கூடுமென வானிலை அறிவிப்பு நிலையத்தி லிருந்து வந்த தகவல் கூறியது. எனவே, எல்லாவித எச்சரிக்கை நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வந்தன. உதவி அணைக்கரையோரம் ஆயுதபாணியான ஆட்களும் மேற் பார்வையாளரும் போய்வந்தபடியே இருந்தனர். ஒரு மணி நேரம் தேடித் திரிந்த பிறகு ஸு கெங் - ஸெங் இருக்கு மிடத்தைக் கண்டு பிடித்தான் சிங்-சி. அடித்தளத்தை வலுப் படுத்தும் வேலையில் அவன் மும்முரமாக ஈடுபட்டிருந்தான்.

சிங் - சியைக் கண்டதுமே அவன் நகர்ந்து வந்து அவனைப் பற்றி, ''சீக்கிரம் வா, இங்கே வேலை இருக்கிறது'' என்றதும் சிங் - சியை வேறுபுறம் அழைத்துச் சென்று கழி வேலையைக் குறித்து விளக்கம் செய்யத் தாழ்ந்த குரலில், "எதற்காக உன்னை நான்காவது உட்பிரிவினர் கூப்பிட்டார்கள்? உனக்கு என்னவாவது அபாயம் நேரிடுமோ என அஞ்சினேன். இன்று காலை சாங்கை இழுத்துச் சென்றார்கள். அவன் இன்னும் திரும்பவில்லை" என்றான்.

''சாங் இனி வரமாட்டான்'' என்று சிங் - சி கழிப்பக்கம் மரத்துண்டுகளைக் குனிந்து கட்டுவதுபோல் பாசாங்கு செய்து வண்ணம் கூறினான்.

''உன்னைக் கூப்பிட்டு என்ன விசாரித்தார்கள் ?'' என்றான் ஸு.

''இன்று இரவு சொல்லுகிறேனே, அதையெல்லாம் பற்றி; இங்கே அதைப்பற்றிப் பேசுவது நமக்கு ஆபத்தாக முடியும்'' என்றான் சிங் - சி.

''மெல்ல முகாம் பக்கமாக நழுவிப் போய்விடு. நான்காவது பிரிவினர் உன்னை அழைத்துச் சென்றதே பிடித்து உன் தாயார் வெலவெலத்துப் போய்க் கிடக்கிறாள். யாராவது வழியில் கேட்டால் நான்காம் பிரிவு அதிகாரியைக் காணச் செல்வதாகச் சொல்'' என்றான் ஸு.

''அப்படியானால் இப்போதே நான் போகட்டுமா ?''

''சற்று இரு. மண்ணைத் தூக்கும் இந்தக் கோஷ்டியில் கலந்துகொள்; சமயம் வாய்க்கும்போது நழுவிவிடு'' என்றான் ஸு. சிங் - சியும் அதற்குத் தலையசைத்தான். கழியருகில் நாலைந்து மரத்துண்டுகளைப் பிணைப்பதுபோல் பாசாங்கு செய்துவிட்டு, மண்ணைத் தூக்கும் கோஷ்டியுடன் கலந்துவிட்டான். இப்படி ஒவ்வொரு கூட்டமாகத் தாண்டி அணைக்கரையின் கீழ்ப்புறம் நழுவி அங்கே வலிவிழந்த அணைச் சுவரைப் பலகைகள் நிறுத்திச் சீர்படுத்தும் குழுவினருடன் சேர்ந்து கொண்டான். அவன் நகரை நோக்கி நடந்து செல்லும்போது ஒரு காங்கித் தலைவன் அவனைக் கூப்பிட்டு,



அவன் கையைப் பற்றினான். கரைப்பக்கம் மணல் மூட்டைகளைச் சுமந்து செல்லுமாறு கட்டளையுமிட்டான்.

''நான் நான்காம் பிரிவு அதிகாரியிடம் முக்கிய வேலையாகப் போகவேண்டுமே'' என்றான் சிங் - சி.

''நாசமாப் போக! என்ன சால் ஜாப்பு சொல்லுகிறே, சோம்பேறிப் பயலே !'' என்றதும் அந்தக் காங்கித் தலைவன் முட்டியால் ஓங்கி அடித்தான் சிங் - சியை. அதன் அதிர்ச்சி தாளாமல் சிங் - சி சேற்று மண்ணில் சாய்ந்தான். அவன் பக்கத்தில் வந்து அந்தக் காங்கித் தலைவன் கடும் கோபமாக, ''அடே உதவாக்கறை! சமர்த்தியாகக் கிடைத்ததா ? சோம்பேறிகளுக்கு இது இடமல்லடா !'' என்றான். சிங் - சி அவன் இப்படித் தாக்கவே சினம் பொங்க எழுந்து தன் முட்டியை ஓங்கியபடி அவன்மீது பாய்ந்தான்.

''உன் கைவரிசைக்கு நான் பயந்தவனல்ல. எதற்கடா என்னைக் குத்தினாய் ? நான் எந்த காங்கியைச் சேர்ந்தவன் என்று தெரியாதா ? என் வேலை இருக்கும்போது, உனக்கு வேலை செய்யவா நான் இங்கே வந்தது ?...உன் எண்ணந் தான் என்ன ?'' என்றான், சிங் - சி.

''அப்படி அடிக்கத்தான் அடிப்பேன், என்ன பண்ணிவிடுவாய்?'' என்று அந்தக் காங்கித் தலைவன் ஏளனமாக கூறினான். ''என்னமோ முறைக்கிறாயே'' என்று சிங் - சி அருகில் வந்து, முட்டியை மீண்டும் நீட்டினான். சிங் - சி ஒதுங்கி நின்று அவன் தலையைப் பார்த்து ஒரு குத்துவிட்டான். இது பின்னும் அந்த ஆளின் கோபத்தைக் கிண்டியது. சிங் - சி மீது அவன் திருப்பிய குத்து விழாதுபோகவே, அவனை உதைத்தபடி, ''யாரடா, இங்கே வாங்கடா இந்தப் பயலைக் கட்டுங்கடா'' என்று கூவினான்.

அந்தக் காங்கித் தலைவன் கொடுமைக்கும், அநீதச் செயலுக்கும் பெயர்போனவன். ஆகவே, அவன் கீழ் வேலை செய்த நாற்பது ஆட்களில் ஒருவனாவது அவன் பக்கம் திரும்பவேயில்லை. கடைசியில் நாலைந்து பேர் மட்டும் இந்தச் சண்டையை நிறுத்த ஓடி வந்தனர். ஆனால் மேலும் காங்கித்

தலைவன்மீது நாலைந்து குத்து விழுவதற்கு அவர்கள் வாங் சிங் - சிக்கு அநுசரணையாகவே வாய்ப்பளித்தனர்.

''பாழாய்ப் போனவன்களே, விடுங்களடா என்னை'' என்று அவன் கூச்சலிட்டான். கோபம் தலைக்கேறத் தன் ஆட்களையே உதைக்க முற்பட்டான். தன்மீது அடி விழாமல் சிங் - சி உடலை நெளித்து ஒதுங்கி நின்றான். இதற்குள் அந்தக் காங்கித் தலைவனுக்கு வேண்டியவர்களுக்கும் அவனுடைய விரோதிகளுக்குமிடையே பெரிய கைகலப்பு மூண்டுவிட்டது. சிங் - சிக்கு ஆத்திரம் தணிந்து விட்டது. இந்தச் சண்டை பின்னால் தன்னைத் தொல்லையில் மாட்டிவிடும் என்பதை உணர்ந்தவனாய் மெல்ல நழுவிவிட முயன்றான். அவன் அப்படி நகர்ந்தானோ இல்லையோ, அவன்மீது பளீரெனப் பிரம்படி விழுந்தது. திரும்பிப் பார்த்தான். மூன்று ஆயுத பாணிகளாவ சிப்பாய்கள் நின்றிருந்தனர்.

''தோழரே, நானில்லை - எனக்கும் இதற்கும் ஒரு சம்பந்த முமில்லை'' என்று சிங் - சி மடமடவென்று கூறினான்.

''அடே உதவாக்கறை! இங்கே நடக்கும் வேலையைக் கெடுக்க வந்தாயா!'' என்று சிப்பாய்களில் ஒருத்தன் அவன் கையை அழுத்தி முதுக்குப்புறம் இழுத்து முறிக்கினான். இதற்குள் சண்டையை நிறுத்திவிட்டனர். மூக்கில் இரத்தம் வழியும் காங்கித் தலைவனைக் காவலில் வைத்தனர். சிறு துப்பாக்கி ஏந்தியிருந்த சிப்பாய், சிங் - சியைத் தன் விரலால் சுட்டி, ''இந்த ஆளை ஏன் குத்தினாய்?'' என்றான்.

''யார், நானா? நான் ஒரு பாவத்தையும் அறியேன்'' என்று சிங் - சி வடிகட்டின பொய் சொல்லத் தொடங்கினான்.

'' நான் என் பாட்டிற்கு நாலாவது பிரிவு அதிகாரியைப் பார்க்கப் போய்க் கொண்டிருந்தேன். இவன்தான் என்னை மடக்கிக் குத்து விட்டான். அப்போது இந்த அநியாயத்தைப் பார்த்து அங்கே இருந்தவர்கள் ஓடிவந்து என்னைக் காப்பாற்றினார்கள்'' என்றான்.



''பாவிப் பயல், என்ன புளுவுறான்!'' என்று அந்தக் காங்கித் தலைவன் மூக்கில் வழியும் இரத்தத்தைத் துடைத்துக் கொண்டே சொன்னான்: ''இல்லே, மணல் மூட்டையைக் கரைக்கு எடுத்துப்போவச் சொன்னேன்; இந்த ஆள் 'முடியாது' என்றான்.''

சிப்பாய்களின் தலைவன் அவனைச் சும்மா இருக்கச் சொல்லிவிட்டுச் சிங் - சியை நோக்கி, ''உன் பெயர் என்ன? எந்தக் காங்கி?'' என்றான்.

சிங் - சி தன் குறிச்சீட்டைக் காட்டினான்.

''எதற்காக நான்காம் பிரிவு அதிகாரியைப் பார்க்கப் போகிறாய்?''

''முக்கிய சமாசாரம் சொல்லத்தான்''—சிங் - சி இப்போது சமயத்துக்கு ஏற்றாற்போல் பேசக் கற்றுக்கொண்டு விட்டான். அவன் அந்தச் சிப்பாயின் காதோடு, ''அந்த நான்காவது பிரிவைச் சேர்ந்த தோழர் சுயாங் - குவாங் ஹுவாவுடன் இரகசிய ஜோலி எனக்கு இருக்கிறது'' என்றான்.

''ஓ, அப்படியா?'' என்றதும் அந்தச் சிப்பாய் அவனைத் தள்ளிவிட்டு முன்னால் நடந்தான். காங்கித் தலைவன் மார்புக்கு நேராகத் துப்பாக்கியின் பிடியை அழுத்தி, ஏற்கெனவே இரத்தம் வடியும் அவன் மூக்கைத் தன் இடது கையால் தட்டினான். காங்கித் தலைவன் வலி தாளாமல் துள்ளித் தரையில் சாய்ந்தான்.

சண்டையில் கலந்த ஆட்களைக் காவலில் வைக்கவே அவர்களுக்குக் கோபம் வந்துவிட்டது. தங்களைச் சேர்ந்த ஒருவனை அந்தக் காம்யூனிஸ்ட்டுக்கள் அவ்வாறு வருத்திய தைப் பார்த்து அவர்களுக்கு ஆக்கிரோஷம் தலைக்கேறி விட்டது. ஏதோ காரணத்தால் தாங்கள் அந்த ஆள்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வது என்றால் அது சரிதான். ஆனால் காம்யூனிஸ்ட்டுக்கள் அவனைத் திட்டி அவ்வாறு நடத்துவ தைப் பார்த்ததும் அவனிடம் அவர்களுக்கு அனுதாபம் பிறந்துவிட்டது. என்ன இருந்தாலும் அந்தக் காங்கித்

தலைவன் அவர்களைப் போல அகதியாக வந்து வயிற்றுக்காக உழைப்பவன்தானே.

''உன் வேலையைப் போய் பார்'' என்று சிப்பாய்த் தலைவன் சிங்-சியைப் பார்த்துக் கூறினான். பின்பு தன் சிப்பாய்களில் ஒருவனைத் தன்னைப் பின்தொடருமாறு ஏவினான். நான்காம் பிரிவு அதிகாரியிடம் அவன் கூறுவதற்கு என்ன இருக்கிறதென வியந்தான்.

அவ்வளவு சீக்கிரம் சிங்-சி திரும்பி வருவதைப் பார்த்து சுவாங்-குவாங் ஹுவாவுக்குச் சற்று ஆச்சரியமாகத்தான் இருந்தது. அதற்குக் காரணத்தை வினவினான்.

''சில சந்தேகங்களைத் தெரிந்து கொள்வதற்கே இங்கு மீண்டும் வந்தேன். உங்களைச் சேர்ந்த ஒற்றர்கள் யாரென்று தெரியவில்லை. அவர்களை நான் எவ்வாறு தெரிந்து கொள்வது? அவர்கள் பேசும் விதத்திலிருந்தா, செயலிலிருந்தா, எப்படி?'' என்றான் சிங்-சி.

''சோம்பேறியாய் வேலை செய்யாமல் திரியும் ஆட்களை நீ கவனிக்கவேண்டும். அவர்களை வேலை செய்யாமல் இருக்கத் தூண்டிவிடும் ஆட்கள்மீதும் நிகா வைக்கவேண்டும். அத்துடன் நீயும் உண்மையாக மக்களுக்கு உழைப்பவன் என்பதை அவர்களுக்குக் காட்டி வேலை செய்ய வேண்டும்'' என்றான் குவாங் - ஹுவா.

''உம் அப்படியா? ஒவ்வொரு நாளும் நான் இங்கே ஆஜராக வேண்டுமா?'' என்றான் சிங்-சி.

''அப்படியொன்றுமில்லை. நானும் அணைக்கரைப் பக்கம் மேல் பார்வையிட வருகிறேன்—என்னை அங்கே காண்பாய். எங்களுக்கும் கடமை என்று ஒன்று இருக்கிறது அல்லவா? இந்த வெள்ளத்தைத் தடுக்க வேண்டாமா?'' என்றான் மிகவும் அக்கறை யுள்ளவன்போல்.

பேட்டியை முடித்துக் கொள்ள சிங்-சி, ''நான் போகலாமா?'' என்று உத்தரவுக்கு எதிர்பார்த்தான். குவாங்-ஹுவா தலையசைத்தான். சிங்-சி மெல்ல நகர்ந்தான். அவனுடன் வந்த சிப்பாயும் போய்விட்டான். நிம்மதியா



யிற்று அவனுக்கு. அணைக்கரைப் பக்கம் சிறிது தூரம் நடந்ததும் சட்டென ஒரு குறுக்கு வழியாக நுழைந்து ஒரு சந்தில் மறைந்து முகாம் இருக்குமிடத்தை அடைந்தான்.

கடந்த மூன்று நாட்களில் இந்த அணைக்கரையில் வேலை செய்வதிலுள்ள ஆபத்துக்களைப் பற்றி அவன் நன்கு அறிந்து கொண்டு விட்டான். லு ஹெய்-பிங்கும், இன்னும் பலரும் இந்த வேலைக்குப் பலியாயினர். அவர்களது முடிவு மிகவும் பயங்கரமானது; திடுமென ஏற்பட்டது. யாருமே அதைக் குறித்துப் பேசவுமில்லை. இந்த வேலைக்குத் தம் மறுப்பைத் தெரிவிப்பவர்மீது புகார் கூறக் 'கழுகுகள்' இருந்தனர். தான் வேண்டாத புகழ் தன்னை வந்தடைந்து விட்டதே என்றும் அவன் மனம்கசந்துகொண்டான். ஆனால் இப்போது காம்யூனிஸ்ட்டுகளுக்கு ஒற்றனாக அவன் வேலை பார்ப்பதாகவும் ஏற்பாடு. ஆனால் அவனுக்கு அந்த வேலையில் துளியேனும் விருப்பமில்லை. அவர்களுடன் உறவாடுவதுபோல் நடிக்கின்றான்; அவ்வளவே. இந்நிலை பின்னும் மோசமாக மாறுவதற்கு வெள்ளத்தின் நீர் மட்டம் 1931-இல் கண்டது போல் ஏறுகிறது. அக்கறையாகப் பணி செய்பவரோ இல்லை. எந்த நிமிடம் அணைச் சுவரிலும், கரையிலும் உடைப்பு ஏற்படுமோ சொல்லமுடியாது. அந்த நிலை வந்தால் எல்லாம் முடிந்தாற் போலத்தான்.

மாலைப் பொழுதில் ஹாங்கோ நகரினைக் கப்பிக்கொண்டு இருண்ட மேகங்கள் இறங்கின. இது வேறு அவனது மனச் சஞ்சலத்தை அதிகப்படுத்தியது. முகாமிற்கு முன் வந்து நின்று உடற் சட்டைமீதுள்ள தூசைத் தட்டி முகத்தைத் துடைத்துக் கொண்டான். அந்த வேஷத்துடன் அவனைப் பார்த்தால், தாய் இடிந்து போவாள் என்று அவனுக்குத் தெரியும்.

''சிங்-சி! என்னால் கவலையைத் தாங்க முடியவில்லையடா! உனக்கு ஒன்றும் கெடுதி நேரிடவில்லையே?'' என்றாள் தாய் மகனைக் கண்டவுடன்.

''சிங்-சி! ஏன் இவ்வளவு அழுக்கு உன் சட்டையிலே? என்னடா நடந்தது? எங்கேயாவது பள்ளத்தில் விழுந்து

''இனிமேல், அண்ணா வராது இருந்தால் நான் கரைவரைக்கும் போய்ப் பார்த்துவிட்டுத்தான் வருவேன்'' என்று தங்கை சந்தோஷமாகச் சொன்னாள்.

''அஹ்-சுயென், அப்படியெல்லாம் செய்யாதேம்மா. லு-மாமா என்னை அனுப்புவார்; நானே இங்கே வருவேன். உங்களைப் பார்க்க, சமயம் கிடைத்தபோது நான் வந்து போவேன்'' என்று சிங்-சி எழுந்தான். அவனுக்கு அங்கு இருப்புக்கொள்ளவில்லை. லியு-மின்னைத் தேடப் புறப்பட்டான்.

''நீ போகிறாயா என்ன?'' என்றாள் தாய்.

''ஆமாம், கரைவரைக்கும் போகிறேன்; லியு-மின் திரும்பியதும் இனிமேல் அவளைத் தனியாகப் போக வேண்டாமெனச் சொல் அம்மா!'' என்றான் சிங்-சி.

பலத்த காற்று எழுந்தது. தெருவூடே பயங்கர விசையுடன் புகுந்து கதவுகளையும் சாளரங்களையும் உலுக்கியது; தெருவில் செல்வோர் உடைகளையும் பிய்த்து எறிந்தது. எதிரே வரும் ஆட்கள் ஒவ்வொருவரையும் இருட்டில் கூர்ந்து நோக்கியவண்ணம் நடந்தான் சிங்-சி. அவர்களில் யாராவது லியு-மின்னாக இருக்கமாட்டார்களாவென அவனுக்கு ஆர்வம்.

திடுமென என்னவோ முறியும் ஓசை கேட்டது. அவன் காலின்கீழ் தரையே கிடுகிடுத்தது. ஒரே கூக்குரல். நீர் விசையாகப் புரண்டுவரும் ஓசை எங்கும் பரவியது. அவன் சுழன்று நோக்கினான். அவனுக்கு முப்பதுகஜ தூரத்தில் பாட்டையில் பெரிய துவாரம் தெரிந்தது. அதன் வழியாக குபுகுபுவென்று வெள்ளநீர் பொங்கி வந்தது. 1931 வெள்ளத்திலும் இதுபோல் நிகழ்ந்துள்ளது. பேரழுத்தத்தால் பாதையின்கீழ் ஏற்படும் வெடிப்புக்கள் வழியாக நீர் மேல்நோக்கி விரைந்து தன் மட்டத்திற்கு வந்து நிற்பதுண்டு.

நீர் துள்ளி வரும் இடத்தை நோக்கிப் பேரிரைச்சலுடன் ஆட்கள் விரைந்தனர். நீர்த்திரள் எழும்பி, வீடுகளினுள்



புகுந்து பொருள்களையெல்லாம் நாசமாக்கத் தொடங்கியது. மணல் மூட்டைகளையும், தடுப்புச் சாதனங்களையும் கொண்டு குவித்தனர். தன்னையும் மீறி சிங்-சியும் இந்த வேலையில் சிறிது நேரம் ஈடுபட்டான். ஆனால் அவனுடைய எண்ணம் லியு-மின்னை நோக்கியே தாவியது. யாருக்கும் தெரியாமல் மெல்ல நழுவிச் சென்றான்.

பசியோ அவன் வயிற்றைக் குடைந்தது; எச்சிலை விழுங்கி நடந்தான். அவனுடைய கால்சட்டை துடை வரைக்கும் நனைந்து கிடந்தது. தசையில் தினவு வாட்டியது. அதை மடித்துவிட்டுக் கொண்டான். பசியின் உக்கிரம் அதிகரிக்கவே அவன் சோர்ந்து நடைபாதையில் உட்கார்ந்து விட்டான்.

இருள் கவிந்த தெருவூடே ஒரு பெண் வேகமாகத் தான் இருக்கும் பக்கமாக வருவதைக் கவனித்தான். ஒருவேளை லியு-மின்னோ என்று நினைத்து, 'லியு-மின்' என்று குரல் கொடுத்தான்.

சட்டென அந்தப் பெண் நின்றாள். இப்படித் தன்னைக் கூப்பிட்டது சிங்-சிதான் என்று புரிந்து கொண்டாள். உடனேயே அழுகை வெடித்துவர அவனைத் தழுவிக் கொண்டாள்.

''சிங்-சி! இதென்ன? இப்படி என்னைச் சாகடிக்க வேண்டுமென்பது உன் எண்ணமா?'' என்று விம்மினாள். சிங்-சி அவளை அழுத்தமாக அணைத்துக் கொண்டான்.

''என்ன நடந்தது? உனக்கு என்ன?'' என்றான் படபடவென்று.

''நான் உன்னைத் தேடிக்கொண்டு கோடிக்கரை வரைக்கும் சென்றேன்'' என்று கூறியபோது, விம்மல் வந்து அவளைத் தடுத்தது. தொடர்ந்தாள்: ''அணைச்சுவர் ஓரமாக மூன்று ஆட்களை ஆற்றுள் இறக்குவதைப் பார்த்தேன். சில நிமிட நேரம் கழித்து அவர்களைத் தூக்கியபோது இருவர் பிணமாகத் தொங்கினர்'' என்று கதறிவிட்டாள்.

''அதற்குள் என்ன நடக்குமோ, எனக்குத் தெரியாது... ஸியு-மின்; நமக்கு வருங்காலமோ, சுகமோ கிடையா தென்றே என் மனத்துள் என்னவோ ஒன்று கூறுகிறது'' என்றான்.

''அது எப்படி? வெள்ளம் வடிந்ததுதானே ஆகவேண் டும்? நாமும் ஊருக்குத் திரும்புவோம்'' என்றாள் ஸியு-மின்.

''அணைக்கரையில் உள்ளவர்களெல்லாம் என்ன சொல்லு கிறார்கள், தெரியுமா...?'' என்றதும் சிங்-சி தயங்கினான்.

''அணைச்சுவர் இடிந்ததும் காம்யூனிஸ்ட்டுக்களுடன் மக்களும் மடிந்து போவார்களாம்.''

ஸியு-மின் பயந்துவிட்டாள். அவள் வென் பெங்-ஸிய னைப்பற்றிச் சிந்தித்தாள். வேறொன்றும் பேசவில்லை.

''கரையில் வேலை செய்யும்போது...'' என்று ஆரம்பித் தான். அவளுக்கு அங்கு ஒவ்வொருநாளும் ஏற்படும் ஆபத் துக்களைப்பற்றிச் சொல்ல நினைத்தான். ஆனால் அடக்கி விட்டான்.

''சிங்-சி'' என்றதும் அவன் அணைப்பினுள் ஸியு-மின் மெல்ல அசைந்தாள். ''அந்த அதிகாரிகளுடன் நடந்த விஷயத்தைத்தானே நீ சொல்ல நினைத்தாய்? என்ன நடந் தது? அதை நீ என்னிடம் மறைக்கிறாய்'' என்றாள் அவள்.

அவன் சற்றுத் தயங்கியே, ''அங்கே வேலை செய்யும் ஆட்கள் வேணுமென்றே வெள்ளத் தடுப்பு வேலையை மட்டுப் படுத்திக்கொண்டே வருவது அவர்களுக்குத் தெரிந்துவிட் டது. நம்முடன் ஸிலிங்கிலிருந்து ஓடி வந்த சாங்கை அவர்கள் பாதுகாவலில் வைத்திருக்கின்றனர். அவன் பலபேரிடம் கன்னாபின்னாவென்று காம்யூனிஸ்ட்டுக்களுக்கு எதிராகப் பிதற்றித் திரிந்தான். கடைசியில் அகப்பட்டுக்கொண்டான். பாவம், உயிரை இழக்க நேர்ந்தாலும் நேரலாம். என் அதிர்ஷ்டம், நான் தப்பித்துக்கொண்டேன். யார் யார் வேலைக்கு இடையூறு செய்கிறார்களோ, அவர்களைப்பற்றித்



தகவல் தரவேண்டியதுதான் எனக்கு அவர்கள் இட்ட வேலை'' என்றான்.

ஸியு-மின் விதிர்த்திட்டாள். ''சிங்-சி, இந்தக் காரியம் நீ செய்யலாமா?'' என்றாள்.

''எனக்குத் தெரிகிறது தப்புத்தானென்று; கஷ்டமாகத் தான் இருக்கும். எப்படியோ தப்பிக்க வழி கண்டு பிடித்து விடுவேன், கவலைப்படாதே'' என்றான் சிங்-சி.

லுங்வாங் கோயில் அருகில் சண்டை நடந்ததாயும், அதனால் பத்துப் பேர் ஆற்றில் தள்ளப் பட்டதாயும் முகாமில் இரண்டு நாளுக்கு முன்பு யாரோ சொன்னார்கள்; காம் யூனிஸ்ட்டு ஒற்றர்கள் செய்த வினையால்தான் அவ்வாறு நடந்ததாம்'' என்றாள் ஸியு-மின்.

''நான் ஏன் அந்த ஈனவேலை செய்வேன்? இந்தச் சிக்கலி லிருந்து வெளியேற வழிதான் எனக்குப் புலப்படவில்லை. ஸூ மாமாவிடம் இதைப்பற்றி பேசவேண்டும்'' என்றான் சிங்-சி.

''சிங்-சி! அந்த மாமா ஸூவை ரொம்பவும் நம்பாதே— அவர் மாவட்ட அதிகாரியாக இருக்கையில் எத்தனையோ ஆட்களைச் சாகடித்திருக்கிறார்'' என்றாள் ஸியு-மின்.

''அதுவும் எனக்குத் தெரியும். ஆனால் அப்போது வேறு வழியில்லை அவருக்கு. எனக்கு அவர் தீங்கு நினைக்க மாட்டார். கவலைப்படாதே, ஸியு-மின், இதெல்லாம் சீக்கிரமே முடிந்து போகும்'' என்றான் சிங்-சி. முன்னைவிடத் தன்னிடத்தில் நம்பிக்கையும் உறுதியும் கூடிவிட்டதுபோல் அவன் காட்டிக்கொள்ள முற்பட்டான். ஸியு-மின்னைத் தன் புயத்திற்குள்ளேயே அடக்கிக் கொண்டான்; அவளுடைய உடல் தந்த வெம்மை அவனுக்கு இதமாக இருந்தது. தனிமை யில் இருவரும் இழைவதற்கு ஒரு சூழ்நிலை ஏற்பட்டதைக் குறித்த உள்ளுக்குள் சிங்-சி புளகமே கொண்டான். சற்று நேரத்திற்கெல்லாம் அவன் கரைப்பக்கம் போகவேண்டும். ஆனால் தன் அணைப்பில் சிக்கிய மென்பறவையை விட்டுப்பிரிய அவனுக்கு மனம் வரவில்லை. அந்தப் பாறைமீதே வெகு

நேரம் இருவரும் தோள் தோய அமர்ந்திருந்தனர். மனிதர் நடமாட்டமிராத தெருவூடே காற்று ஊளையிட்டது. அந்த நிமிடமே அணைக்கரை இடிந்து பெருவெள்ளம் பெருகி, இருவருமே ஒருவரையொருவர் தழுவியவாறு குளிர்ந்த மரணத்திற்கு ஆளாகி இன்பத்தில் ஆழ்ந்து மறைந்துவிடக் கூடாதா என எண்ணினர். ஸியு-மின்னின் நெற்றிமீது முத்தம் தந்து அவள் மோவாயைத் தூக்கி அவளையே உற்று நோக்கி மெய்மறந்தான் சிங்-சி.

அவளை முதன் முதல் சந்தித்தபோது அவளுடைய வதனம் வட்டமாகவும், இளமையினால் ரோஜா வண்ணம் கூடியதாயும் விளங்கியது. இப்போதோ அவளுடைய முகம் பசலையார்ந்து இருந்தது. அவள் உதடுகளில் இரத்தச் சிவப்பே இல்லை. அவள் கண்களில் கருவளையம் யிட்டிருந்தது; கன்னம் குழிந்துவிட்டது.

''ஸியு-மின்''—கனவிடையே முனகுவதுபோல் சிங்-சி, ''இப்போது வெள்ளம் நம்மைச் சூழ்ந்துகொள்ளவேண்டும். இந்தமாதிரி நமக்கு மரணம் சம்பவித்தால் அதைவிடச் சொர்க்கசுகம் எம்மாத்திரம்?'' என்றான்.

''சிங்-சி இப்படியெல்லாம் பேசாதே'' என்றதும் ஸியு-மின் இன்னும் அவன் உடலுடன் ஒட்டினாள். அவள் மார்பு அவன் ஆகத்துள் பதிந்தது. திடுமென ஒரு நசையின் வேகம் அவள் உடலைத் துடிக்கச் செய்தது. ஒரு வேளை இதுவே அவர்களுடைய கடைசி முயக்கமோ?

சிங்-சியின் கைகள் அவள் முதுகுப்புறத்தை மெல்ல அழுத்திக் கொண்டன; அந்தப் புணர்ச்சியில்தான் என்ன வீரியம், என்ன ஆத்திரம்!

''என்ன இப்படி?...'' — மெல்ல முனகினாள் ஸியு-மின்.

சிங்-சிக்குப் பேசமுடியவில்லை; வாரி அணைத்து அவளைத் தன்னுள் கரந்திட அவன் துடிதுடித்தான். அவன் உடலின் உறுப்பெங்கும் ஆர்வம் அலையோடி நடுங்கியது. அவளுடைய முகமே அவன் கண்ணுக்கு மழுங்கி மறைவதுபோல் தோன்றியது.







ஸியு-மின் சட்டெனத் தன்னை விடுவித்துக்கொண்டு அவனையே ஒன்றும் புரிபடாமல் நோக்கினாள்.

''சிங்-சி, என்ன உனக்கு?'' என்றாள் அவள்.

''ஓ! ஸியு-மின்!'' என்று அவன் நாக்கு தழுதழுத்தது.

மெல்ல மலர்ந்த அவள் வாயிதழ்களைப் பருகியதும் எழுந்து நின்றான் சிங்-சி. ''நேரமாகிறது முகாமுக்கு ஜாக்கிரதையாகத் திரும்பிப் போ...அம்மா கவலைப்படுவாள்'' என்றான்.

''ஆமாம்!'' என்றாளே ஒழிய அவளுக்கு மனம் இல்லை, அவனை விட்டுப் பிரிய. இருவரும் சற்றுநேரம் அப்பாறைமீது நின்றனர், கைகோத்தவண்ணம்.

''ஞாபகமிருக்கட்டும்; அணைக்கரைப்பக்கம் வரவே கூடாது.''

''சரி, நீயும் ஜாக்கிரதையாக இரு.''

அவன் தலையசைத்தான். கொடிபோல் அவள் படர்ந்து செல்வதைப் -பார்த்துக்கொண்டே நின்றான். அவளும் அவனைத் திரும்பித் திரும்பி நோக்கியபடி கைகளை விசிறிக் கொண்டே வழிநடந்தாள். அவள் உருவம் இருளிடையே கலந்து மறையும்வரை சிங்-சி அசையாமல் வெகுநேரம் பார்த்துக் கொண்டே இருந்தான்.

## 6

அமைதி நிலவும் பிற்பகல் வேளை. வீடுகளிலிருந்து வருவோர், வீட்டை நோக்கித் திரும்புவோர் சிலரைத் தவிர ஸன்லிமின் தெருவில் சந்தடியே இல்லை. திடுமென இடிமுழக்கம் போல் ஓர் ஓசை; உடனேயே முறிந்து விழுந்தது போன்ற சப்தம் கேட்டது. தெருவின் பகுதி ஒன்று மண்ணுக்குள் இறங்கிவிடவே பழைய கட்டடமொன்று சரிந்து விழுந்தது. திடுமென இந்தச் சப்தம் வந்து வெள்ள நீர் உட்புகவே பீதியடைந்த மக்கள் பல திசைகளிலிருந்தும்

ஓடி வந்தனர். சங்குங் அணைக்கரை சரிந்து வெள்ளம் உட்புகுந்து விட்டது என்ற செய்தி மட மடவென்று பரவியது. 'சங்குங் அணை இடிந்து போயிற்று; வெள்ளம் நகருள் புகுந்துவிட்டு' என்ற ஆரவாரமே எங்கும்.

பீதியுற்ற மக்கள்திரளைப் பார்த்து எவனோ, ''வெறும் புரளி! சங்குங் அணையாவது சரிகிறதாவது? நடக்காத கதை! சுத்தப் பொய்யான வதந்தி!'' என்று கத்தினான்.

எனினும் வல்லமை மிக்க இயாங்ட்ஸியால் ஹாங்கோ நகரம் அழிந்துபோனால் சில அப்பாவி ஜன்மங்களுக்குத் திருப்தியாயிருந்திருக்கும். காம்யூனிஸ்ட்டுக்களின் அட்டூழியத்துடன் அவர்களுடைய துன்பங்களும் ஒழியுமல்லவா?

* * * *

ஆனால் சங்குங் அணைக்கரை சரியவே இல்லை. திடுமென மக்களிடையே ஒரு பரபரப்பு தோன்றியது. மேகத்துக்கு மேலே யந்திரங்களின் ஒலி வரவே பனிப்படலம் போர்த்த வானையே அண்ணாந்து பார்த்தனர்.

''தைவான் விமானங்கள், அணைக்கரையைக் குண்டு போட்டுத் தகர்த்த வருகின்றன'' என்று கும்பலில் ஒருவன் கூவினான். அந்தச் செய்தி காட்டுத் தீபோல் பரவியது.

கணப்பொழுதில் சங்குங் அணைக்கரையில் குழப்பம் மூண்டது. மக்கள் திசைக்கு ஒருவராய்ச் சிதறி ஓடத் தலைப்பட்டனர்.

மேல் பார்வையாளருக்கும் கங்காணித் தலைவர்களுக்கும் அடங்காமல் வேலை செய்வோர் முறைத்துக் கொண்டனர். ஆயுதபாணிகளான காவல் சிப்பாய்களுக்கு உத்தரவிடுவோர் இல்லாததால், அவர்கள் நிலைமையைச் சமாளிக்க முடியாமல் திண்டாடினர். அவர்களையும் பீதி பற்றியது. சிதறியோடும் கும்பலுடன் கலந்துவிட்டனர்.



இப்பேரிரைச்சலுக் கிடையே வானைப் பிளப்பது போல் ஒரு வெடி திடுமெனக் கேட்டது. மூன்று நாட்களாக இது போன்ற ஓசையைக் கேட்டு மக்கள் பழகிப் போயினும், விமானங்கள் எய்யும் குண்டுதான் அதுவென அவர்கள் நம்பி விட்டனர். இன்ன இன்ன இடங்களில் குண்டுகள் வீசப் பட்டன என்றும் புரளிச்செய்தி பரவிவிட்டது.

சிங்-சி, உதவி அணைக்கரைமீது ஏறியிருந்தான். அங்கே பெருவாரியாக மக்கள் நெருக்கி யடித்துக்கொண்டிருக்கும் காட்சி அவனுக்குப் பழைய ஞாபகத்தை மூட்டிவிட்டது. ஜப்பானியச் சண்டையின்போது பெரிய ஜனக்கூட்டங்கள் பேரிலேயே பெரும்பாலும் குண்டுகள் பொழியப்பட்டதை நினைத்தான். அவனுக்குக் கைகால் ஆடவில்லை. எனவே கொட்டகைக்குத் திரும்பினான். அந்த இடத்தில் எவரும் இல்லை. எனவே, திரும்பி வெளியே வந்தான்.. ஒரு குரல் கேட்டுத் திடுக்கிட்டு நின்றான்.

''யார் நீயா, சிங்-சி?''—சுவாங் குவாங் ஹுவாவின் குரல்தான். கொட்டகை யோரமாக அவன் நின்றுகொண்டிருந்தான்.

''தோழர் சுவாங்கா?'' என்றான் சிங்-சி. ''நாம் என்ன செய்வது இப்போது?'' என்றான்.

சுவாங்கின் முகம் சவக்களையிட்டிருந்தது. சிங்-சியின் கரத்தைப்பற்றி நாக்குழற, ''அணைக்கரையைக் குண்டுபோட்டுத் தகர்த்து விடுவார்கள்—தைவானிருந்து விமானங்கள் வரக்கூடுமெனச் சில நாட்களுக்கு முன்பு எங்கள் அலுவலகத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள். அதுபோலவே ஆகிவிட்டது. இதோ இப்போதுதான் சொன்னார்கள், ஹான்யாங்கைத் தாண்டி தெங்லூங் அணைக்கரையைக் குண்டுபோட்டு நசாமாக்கி விட்டார்களாம்'' என்றான்.

வெடியோசை கேட்டது. சுவாங் குவாங் பொத்தெனத் தரையில் கவிழ்ந்து படுத்துக்கொண்டான். சிங்-சியும் அவ்வாறே செய்தான். மறுபடியும் ஒரு வெடி. அப்புறம் தொடர்ந்தாற்போல் வெடியொலிகள்.

''அதோ பார், நம்மை யந்திர பீரங்கியினால் சுடுகின்றனர்'' என்றதும் கரையின் ஒரு சரிவில் உருண்டான் சுவாங்.

''இந்த இடத்திலேயே நாம் இருக்கக்கூடாது ; வேறு எங்கேயாவது போய்விடுவோம்'' என்றான் சிங்-சி.

''உம் நகராதே. சற்று அசைந்தாலும் குண்டுக்கு நாம் இலக்காகிவிடுவோம்'' என்றான் சுவாங்.

அச்சமயம் ஆற்றின்மீது ஒரு விமானம் தாழ்வாகப் பறந்து சென்றது.

''இதோ வருகிறது !'' என்று சுவாங் கூவி விழவிருக்கும் குண்டின் வெடியைச் சமாளிக்கக் கண்ணை இறுகப் பொத்திக் கொண்டான்.

ஆனால் அந்த விமானம் குண்டு எதையும் வீசவில்லை. சிப்பாய்கள் 'கரைமீது ஒவ்வொருவராக ஏறுவதைச் சிங்-சி பார்த்தான். சுவாங்கை அசைத்தான்.

''அதோ பாருங்கள்...சிப்பாய்கள் திரும்புகின்றனர் கரைக்கு. வந்தது தைவான் விமானமாகத்தான் இருக்க வேண்டும்'' என்றான் சிங்-சி.

ஒலிப் பெருக்கிகள் முழங்கின : 'மக்கள் விமானப் படையைச் சேர்ந்த விமானம் ஒன்று அணைக்கரை வேலையைப் பார்வையிடச் சற்றுமுன் பறந்து வந்தது. அவரவர் தம் வேலையைச் செய்ய உரிய இடத்திற்குத் திரும்பலாம். வெறும் புரளியை நம்பித் திகிலடையாதீர். வேலைக்குத் திரும்பிச் செல்லுங்கள்.'

சிங்-சி எழுந்து நின்றான். அவனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அந்த விமானம் மக்கள்விமானப் படையைச் சேர்ந்தது என்றால் சற்றுமுன் எழுந்த துப்பாக்கி வெடிகளுக்குக் காரணம் என்ன ? சிதறியோடும் மக்கள்மீது பிரயோகம் செய்யப்பட்டதா ? அவன் மூளை சுழன்றது. கும்பலில் ஒருவனாக அவன் கரைப்பக்கம் ஏறினான்.

மரங்கள், முறிந்த கிளைகள், மரத்துண்டுகள், சாமான்கள், மனிதச் சடலங்கள் யாவும் ஆற்றின் நீர்ப்பரப்பில் சுழன்று



சென்றன. அந்தச் சவங்களுக்கு ஆற்றும் கடைசிப் பிண்டமெனப் புற்குவியலும், பாசிக் குவியலும் அந்த நீரோட்டத்துடன் மிதந்தன. அவலத்தின் காட்சியே எங்கும் திகழ்ந்தது. வேலையாட்கள் மனம் முறிந்தவராய்த் தம் பணிகளை நோக்கிச் செல்லலாயினர்.

இரண்டு மணி நேரம் கழித்து, ஸு கெங்-ஸெங்குடன் தனக்குப் பழக்கமான குரல் ஒன்று பேசுவதைச் சிங்-சி செவியுற்றான். சுவாங்கின் குரல்தான். தன் வேலையை நிறுத்திவிட்டு ஊன்றிக் கவனித்தான்.

சுவாங் இவ்வாறு பேசுவதை அவன் ஒற்றுக் கேட்டான் ; ''சற்றுமுன் நடந்த குழப்பத்தில் பதினொரு ஆட்கள் கொல்லப்பட்டனர். பலருக்குக் காயம் ; சிலர் ஆற்றில் மூழ்கி இறந்தனர். நல்லகாலம், நான் அந்தச் சமயம் கரையோரம் போகவில்லை. நான்காவது பிரிவினர் சீக்கிரத்திலேயே இது பற்றிக் கூடிப் பேசி யார் மீதாவது குற்றம் சாட்டக்கூடும். அப்போதுதான் சங்கடம் ஏற்படும்'' மிகுதியையும் பேசாமல் அவன் நிறுத்திவிட்டான். சிங்-சி தன் வேலைமீது மனத்தைச் செலுத்தினான். 'ஒரு குண்டுமட்டும் ஆற்றில் விழுந்திருந்தால், அதன் விசையாலும் வெடியின் அழுத்தத்தாலும் என்ன நேர்ந்திருக்கும் ? இந்தக் கரை போன இடம் தெரியாமல் போயிருக்கும்' இவ்வாறெல்லாம் அவன் சிந்தனை ஓடியது.

* * * *

'ஆகஸ்ட்டு 14. தைவானின் விமானப்படை தினம்' என்று யாரோ நான்காவது உட்பிரிவினர் கூடிய கூட்டத்தில் நினைவுறுத்தினர்.

'' தோழரே - அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ?'' —மற்றொருவர் அவரை மடக்கிப் பேசினார். '' நம்முடைய மக்கள் விமானப்படை மிகவும் வலிவுள்ளது; பெரிதுங்கூட. அப்படி இருக்கையில் அந்தத் தைவான் விமானங்கள் ஹாங்கோவை நெருங்கத் துணியுமா ?''

"ஒரு வேளை தைவான் விமானம் ஏதாவது திடுமெனத் தாக்கினால் முன்னெச்சரிக்கையுடன் இருக்க நமக்குத்தான் உத்தர விடப்பட்டிருக்கிறதே!" என்றார் இன்னொரு தோழர்.

நான்காவது உட்பிரிவின் தளகர்த்தர் சற்று ரோஷமாகவே, "தைவான் விமானம் எங்கே ஐயா வந்தது? நம்முடைய கண்காணிப்பு விமானம்தான் அன்று வந்தது. மடப்பயல்களே! இதற்கும் தைவான் விமானப்படை தினத்திற்கும் என்ன சம்பந்தமோ? எல்லாம் அந்தக் கரையில் அக்கப்போர் சொல்லிக்கொண்டு திரியும் சில ஆட்கள் செய்யும் ஆபாசவேலைகள். தோழர் சு பெய்-ஹுங்கின் கொலை ஒன்றே இதுபோன்ற ஆட்கள் நம்மிடையே உள்ளனர் என்பதற்குத் தக்க அத்தாட்சி!" என்றான்.

அப்போது அவ்வறையில் ஒரு பரபரப்பு மூண்டது.

"இனிமேல், ஒரு நிமிடமேனும் உறங்கக்கூடாது; முழு விழிப்புடன் இருக்க வேண்டும். வெள்ளத் தடுப்பு வேலையைப்போல் எதிரிகளின் ஆட்கள் புரளி பண்ணுவதை நிறுத்துவதும் முக்கியமான வேலையே"—இதைக் கூறி தளகர்த்தன் மேஜைமீது ஓங்கித் தன் உறுதியைக் காட்டக் குத்தினான். "இனி சோம்பித் திரிவோரையும், வேலைக்குச் சிணுங்குவோரையும் சும்மா விடக்கூடாது; தகுந்த தண்டனை அளிக்க வேண்டும். வேலைக்குச் சிணுங்குவோர் மக்கள் நலனுக்கே இடையூறு செய்பவராவர். அவசியமானால் அவர்களை ஆற்றில் தள்ளிவிட வேண்டும்" என்றான்.

அறையில் நிச்சப்தம் நிலவியது. தளகர்த்தன் சட்டென அவ்விடத்தை விட்டகன்றான். அங்கே கூடியிருந்த அதிகாரிகள் தரையையே வெறித்து நோக்கினர். சுவாங் தன் சிந்தனையிலேயே மூழ்கி இருந்தான். கலவரம் நிகழ்ந்த போதுகூட அவன் கரைப்பக்கம் சென்றிருந்தான். அதற்காக அவன் ஒருவனே பாராட்டுதலையும் பெற்றான். ஆனால் அச்சத்தால் தம்பித்துவிடவேதான் அவனால் பதுங்கியிருந்த இடத்திலிருந்து ஓட முடியவில்லை; இராவிட்டால் அவனும்



ஓடக்கூடியவனே. ஆகவே அவனுக்குக் கிடைத்த இந்தப் புகழுரை 'தற்செயலாகக் கிடைத்ததாகும். இருப்பினும் தன் பெயர் பத்திரிகைகளில் புகழேற்று வரும் என்ற குதூகலம் அவனுக்கு.

'சைக்ளோஸ்டைல்' செய்த அறிக்கை ஒன்றை அவன் கையில் வைத்துக்கொண்டு அறையைவிட்டு வெளியே வந்தான். அதன் முதல் தாளில் இருந்த சில வரிகள்மீது கண்ணோட்டம் செலுத்தினான்.

'ஆகஸ்ட்டு 14 - சியாங்கான் நீர்மட்டம் 29.23 மீட்டர்கள், 1931-இல் அதன் அதிகபட்ச நீர்மட்டம் 28.28 மீட்டர்கள்.'

இந்த விஷயமெல்லாம் அவனைக் கவரவில்லை. மறுபக்கம் திரும்பினான். அதில், 'ஹாங்கோ நகரின் தீரமக்கள் நான்காவது முறையாக வெள்ள நெருக்கடியைச் சமாளித்து விட்டனர்' என்று இருந்தது.

மூன்றாவது பக்கம் திருப்பினான். அதில் பின் வருமாறு இருந்தது:

'மக்கள் பாதுகாப்புப் படையைச் சார்ந்த இருநூறு துணிவுமிக்க ஆட்களும், பத்தாயிரம் உழவினரும் தம் முதுகில் பாயைக் கட்டிக்கொண்டு ஒரு கிலோமீட்டர் நீளம் சுவர் போல் நின்று, கரையின் ஒரு பகுதி சரிந்து போகாமல் காத்தனர். இந்த நிலையில் அவர்கள் ஜூலை 11-ஆம் தேதி இரவு மூன்றரை மணி நேரம் நின்றனர். பின்னர் உதவிக்கு மேலும் ஆட்கள் வரவே கரை வலுவாக்கப்பட்டது. மத்தியத் தென் வெள்ளத் தடுப்புத் தலைமை அலுவலகம்...'

"ஓ, மனிதச் சுவர் எழுப்பி மீண்டும் வெற்றி கண்டார்களா?"—இவ்வாறு சுவாங் தனக்குத்தானே கூறிச் சிரித்துக் கொண்டான்.

* * * *

இரவு வந்ததும் வெள்ளத்தின் மட்டம் புதிய உயர் அளவை எட்டியது. பெரிய கரைக்குப் பின்னால் இருந்த பாய்

வேய்ந்த குடிசைகளில், வேலை செய்வோர் இடுப்புடையப் பகலெல்லாம் உழைத்து அலுத்துப்போய்ப் படுத்திருந்தனர். ஆனால் அகதிகளின் முகாமில் வெள்ளத்தினால் புது அபாயம் ஏற்படக்கூடிய நிலையை உணர்ந்திருந்தனர். இந்தத் திகில் நிமிடத்திற்கு நிமிடம் பரவிச் செய்தி வரும்போதெல்லாம் அதிகரித்தது.

இரவு வருகிறவரை லு சிவு-சு காத்திருந்தாள். ஸியு-மின்னைக் காண மெல்ல நகர்ந்தாள். ஸியு-மின்னிடம் தன் மூன்று மாதப் பச்சிளங் குழந்தையைத் தந்தாள்.

“உன் அம்மாவுக்கு மறுபடி தொந்தரை கொடுக்க வந்தேன். இந்த ஓர் இரவுமட்டும் இவனைப் பார்த்துக் கொள்ள வேண்டும்” என்றாள், மெதுவான குரலில். கிழவியும் இவர்கள் பேசியதைக் கேட்டுத் திரும்பினாள். சியுசுவையே வேதனையுடன் நோக்கினாள். சியு-சு அவளை நேராகப் பார்க்கக் கூசிக்கொண்டாள். மந்தணமாகவே, “அம்மா, உங்களுக்கு மறுபடியும் கஷ்டம் கொடுக்க வந்தேன். குழந்தைக்கு உடம்பு நிலை சரியாக இல்லை. இதோ நாலு சவுக்கங்களையும் தந்துவிட்டுப் போகிறேன்” என்றாள்.

சிங்-சியின் தாய் சம்மதம் தெரிவிக்கத் தலையசைத்தாள். அவள் சொல்வதற்கு என்ன இருந்தது? இரவில் இப்படிச் சியு-சு நழுவிப் போவதன் காரணம் அவளுக்குத் தெரியாதா? இழிவான வழியில் அவள் தன் மானத்தையும் விற்றுக் குழந்தையைக் காப்பாற்றவேண்டி யிருந்தது.

முகாமிற்கு வெளியே சியு-சு மெதுவாக யாரையோ அழைத்தாள். வேறொரு மாது இருளிலிருந்து அவளருகில் வந்தாள்.

“சியு-சு, நீ கால்மணி காலம் தாமதமாக ஏன் வந்தாய்?” என்றாள் அந்த மாது, சற்று எரிச்சலுடன்.

“என் குழந்தைக்கு உடம்பே சரியாக இல்லை. என்ன பண்ணுவேன்? அவனுக்குப் பால் கொடுத்துவிட்டு வரச் சற்று நேரமாகிவிட்டது” என்றாள் சியு-சு.



“சரி, வா சீக்கிரம்” என்றதும் அந்த மாது சியு-சுவிடம் தலைமயிர் அலங்காரப் பொருள் ஒன்றைத் தந்தாள். லு சியு-சு தன் கூந்தலைச் சீவிக் கொண்டை போட்டுக்கொண்டாள். ஒரு சிவப்புக் காகிதத்தை எச்சலில் குழைத்து அந்தச் சாயத்தை உதட்டிலும், கன்னத்திலும் பூசிக்கொண்டாள். பெருமூச்செறிந்து அவள், “ஆஹ்-சென், அலங்காரமெல்லாம் சரியாக இருக்கிறதா?” என்றாள்.

“அந்தக் காரியத்துக்கு இது போதும். உண்மையில் நம்முடைய முகம் பேயாடினாற்போல் அல்லவோ இருக்கும், இந்தச் சிங்காரிப்பும் இராதுபோனால்” என்றதும் பக்கத்திலிருந்த ஏழெட்டு வயசான ஒரு சிறுமியிடம் அந்த அலங்காரப் பொருள்களைத் தந்தாள்.

“செல்லம், இதையெல்லாம் எடுத்துக் கொண்டுபோய், சமத்தாகப் படுத்துத் தூங்கு. நாளைக் காலை உனக்குச் சூடான தோசை வாங்கித் தருவேனாக்கும்” என்றாள் கொஞ்சலாக.

இரு மடந்தையரும் வழியில் ஓர் உரையுமாடாமல் இருளில் ஒரு பக்கத்துச் சந்தில் திரும்பினர். அங்கே அவர்களை விட மூத்த பெண்கள் மங்கலான ஒளியில் குறுக்கும் நெடுக்குமாக அலைவது தெரிந்தது. பகலெல்லாம் உழைத்து அலுத்துப்போன ஆடவர்கள் சிற்றின்பத்திற்கு ஏங்கி நிழல்போல் நடமாடினர். தம் உடல் அலுப்பைச் சிறிது நேரமாவது பெண்களின் இணக்கத்தில் மறக்க எண்ணினர். இருட்டும் மங்கிய ஒளியும் பின்னிய ஒரு பயங்கரச் சூழ்நிலையில் பெண்களின் மெல்லொலிச் சிரிப்பும், காமக் கேளிக்கையும் சேர்ந்து ஆடவர்களை மறதியில் ஆழ்த்தின. ஆற்று வெள்ளம், கடினமான உழைப்பு, வியர்வைக் கசிவு, வசவு திட்டு, சாவின் அண்மை இவற்றின் நினைவைச் சிறிது நேரமாவது ஒதுக்க உதவின அவை.

லு சியு-சு தன்னைக் காமுகர்களின் இச்சைக்குப் பலியாக்கிக்கொண்டு, அந்தத் துயரைச் சகித்து வந்தாள். அவள் நினைவெல்லாம் அவளது கனவுலகிலேயே நிலைத்துவிட்டது.

இது இரண்டாவது முறை, அவள் மானத்தை விற்றுக் காசு சம்பாதிப்பது. முதல் அனுபவத்தில் அவளுக்கு 3500 ஜென்மிங்பி கிடைத்தன. இந்தத் தடவை இன்னொரு 3500 ஆக மொத்தம் 7000. நோய்வாய்ப்பட்ட குழந்தையை இனி வைத்தியனிடம் காட்டி மருந்து வாங்கித் தரமுடியும். நாளைக்கே அவள் மேலும் பணம் சம்பாதிக்க முடியலாம். அந்தத் தொகையிலிருந்து சிங்-சியின் அம்மாவுக்கு ஏதாவது வாய்க்குணவாக வாங்கியும் தரலாம்.

அவள் தன் ஈனப்பிழைப்பை முடித்துக்கொண்டு வெளியே வந்தாள். அப்போது ஒரு முதியவள் அவளைப் பிடித்து இழுத்தாள்.

''நேரமாகிறது, நான் போகவேண்டும்; குழந்தை அழுவானோ என்னவோ?'' என்றாள் சியு-சி. வந்தவளின் நோக்கம் அவளுக்குத் தெரியும். இன்னொருவன் பசியைத் தீர்க்கத்தான்!

''அடி ஜடமே! இன்றுபோல் வியாபாரம் வேறு எந்த நாளிலாவது கண்டாயா? கொஞ்சம் பொறுத்துத்தான் போனால் என்ன முழுகிப் போகுமோ? பொழுது விடியும் வரை முடிந்தமட்டும் சம்பாதிக்கலாமே!'' என்று நயப் பூட்டினாள்.

சியி-சு பதிலே பேசவில்லை. சரியென்று வேறொரு ஆத்மாவின் காம நசைக்குள் சிக்கினாள்.

* * * *

வெள்ளித் தகடுபோல் முழுமதி 16-ஆம் தேதி இரவு ஒளிர்ந்தது. ஆனால் அதைச் சுற்றிலும் ஒரு மஞ்சள் வட்டம்; வரப்போகும் ஒரு பெரும் புயல் காற்றை அறிவித்தது.

அணைக்கரைமீது சீறி மோதும் ஆற்றின் அலைகள்மீது மின்சார விளக்கின் ஒளிக்கதிர் ஒன்று அடிக்கடி விழுந்து கொண்டே இருந்தது.

திடுமென ஒலிபெருக்கியின் குரல் உரைத்தது—



'ஒன்பதாவது பிரிவு — எச்சரிக்கை. ஒன்பதாவது பிரிவு — எச்சரிக்கை — ஓர் உடைப்பு.'

சிங் - சி திடுக்கிட்டான். ஒன்பதாவது பிரிவில் அவன் எந்த உடைப்பையும் காணவில்லையே.

'ஒன்பதாவது பிரிவை அழைக்கிறோம்' என்று முன்னிலும் விரைவாக ஒலிபெருக்கி அறைகூவிற்று.

சுமார் பத்து ஆயுதபாணிகளான தோழர்கள் ஓடி வந்தனர்.

''நாம் இப்போது என்ன செய்வது? மூழ்க்காளி உடுப்பு எதுவும் இல்லையே'' என்று ஒருவன் சொன்னான்.

''மூழ்க்காளி உடுப்பா? ஐந்தாம் பிரிவினரிடம் இருக் கிறது. அதைப் போய் எடுத்து வா'' என்று உரக்கவே கட்டளையிட்டான் ஸு கெங் - ஸெங்.

''இப்போது அதற்கு நேரம் இல்லை. யாரையாவது சீக்கிரம் கீழே இறக்க வேண்டியதுதான்.''

யாரோ ஒருவன் திடுமெனச் சிங் - சியின் தோளை அழுத்தி, ''இதோ இவனைவிடவா தைரியசாலி இருக்கப் போகிறான்! போ அப்பேன். கீழே இறங்கு. கரையைக் காப்பாற்று'' என்றான்.

சிங் - சி, இப்படிப் பேசியவன் யாரென்று திரும்பிப் பார்த் தான். ஆயுத பாணியான சிப்பாய்தான். அவன் உள்ளம் நடுங்கியது. எதற்காக அவன் அதிகம் அஞ்சினானோ அதுவே அவன் தலையில் விடிந்தது. லு ஹெய் - பிங்கிற்கு நேர்ந்ததை அவனால் மறக்க முடியவில்லை. இப்போது அவனுடைய முறை. இதிலிருந்து தப்புவதற்கு வழியில்லை. ஆழ்ந்த மூச்சு இழுத்தான். அவன் அஞ்சிய பேராபத்து எதிரே வந்த பிறகு அவனுக்கு அமைதியே தோன்றியது. தன் இடுப்பைச் சுற்றி கெங் - ஸெங் லாகவமாகக் கயிற்றால் பிணைப்பதைக் கலக்க மின்றிக் கவனித்தான். குனிந்து ஒரு மணல் மூட்டையைத் தூக்கினான். நீருள் மூழ்குவோரின் ஒருவனாக நின்றான், தன் வேலையைச் செய்ய.

ஒரு சிப்பாயின் கையிலிருந்து இரண்டு தும்புகளை வாங்கிக் கொண்டு கெங்-ஸெங், ''நான் இரண்டு பேரை ஜாக்கிரதையாக இறக்குவேன். இந்த வேலையில் எனக்குப் பழக்கம் உண்டு'' என்றான்.

தான் வைத்திருந்த தும்புகளில் ஒன்றைச் சிங்-சியின் இடுப்பில் வளைத்துக் கட்டினான் அவன். மணல் மூட்டையைத் தோள்மீது ஏற்றும் பொழுது சிங்-சியின் அருகில் வந்து, ''நீ நீருள் மூழ்கியதுமே, இந்த மூட்டையைத் துவாரம் உள்ள இடத்தில் போட்டுவிடு. அப்படி முடியவில்லை என்றால் நீருள் ஆழ்த்திவிடு. பத்திரம், ஆற்றுச் சுழலில் எங்கேயாவது சிக்கிக் கொள்ளப் போகிறாய்; உடைப்பின் இடுக்கில் மாட்டிக் கொள்ளாமலும் கவனமாக இரு'' என்றதும் தும்பின் முடிச்சு சரியாக இருக்கிறதா என்று பார்த்தான். மீண்டும் சிங்-சியைப் பார்த்து, ''மணல் மூட்டையை அழுத்தமாகப் பற்றிக்கொள்; வாயை மூடிக்கொள்; தம் பிடி — அவ்வளவுதான் — உன்னை நான் வெளியே பத்திரமாகத் தூக்கி விடுவேன்'' என்று எச்சரிக்கை செய்தான்.

ஐவர் நீருள் மூழ்கினர். பத்தடி ஆழம் கயிறு நீண்டது. இரண்டாவது கோஷ்டியில் ஐவர் இறங்கினர். அப்புறம் மூன்றாவது.

மணல் மூட்டையின் கனம் சிங்-சியைச் சரேலென ஆழத்துள் இழுத்துச் சென்றது. மூச்சைச் சற்றுச் சிரமத்துடன் அடக்கிக் கொண்டான். ஒரே நினைவு அவனுக்கு. மணல் மூட்டையைத் தள்ளி விடும்படி கெங்-ஸெங் சொன்னதை அவன் மறக்கவில்லை. ஆயினும் அந்த நிலையில் தன்னால் இயன்றதைச் செய்வது தன் கடமையெனக் கருதினான். உடைப்பை மூடாவிட்டால் அணைக்கரை சரிந்து போகும்; அதனால் பல்லாயிர மக்கள் இறந்து போவர்; பலர் துன்பத்திற்காளாவர் - இந்தக் கடமை யுணர்வு இருந்தது அவனுக்கு. சட்டென ஒரு துவாரத்தை நோக்கி நீரின் விசை தன்னை இழுத்துச் செல்வதை உணர்ந்தான். அதைச் சமாளிக்காவிட்டால் தனக்கு இறுதி நேரிடும் என்பதை உணர்ந்த அவன்



தன் பலத்தை யெல்லாம் கூட்டி மணல் மூட்டையை விசையோடு தள்ளிவிட்டான், கயிற்றை இன்னொரு கையால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டபடி. ஆனால் விசையான நீரோட்டமொன்று அவனைச் சறுக்கலான இடத்தில் உருட்டித்தள்ளிவிட்டது. அந்த மோதல் அவனை நிலைகுலைக்கவே தன்னையும் அறியாமல் வாயைத் திறந்து விட்டான். எனவே நீர் வாய்க்குள் புகுந்து விட்டது. அவன் காதுக்குள்ளும் மண்டைக்குள்ளும் ஒரே இரைச்சல்; மார்பிலே ஒரே வலி - அப்புறம் எல்லாம் இருண்டு விட்டது.

நினைவு மீண்டபோது கரைமீது தான் கிடப்பதை உணர்ந்தான். கண்களை மெல்லத் திறந்து பார்த்தான். மண்டையைப் பிளப்பதுபோன்ற வலி. கண்ணை மீண்டும் மூடிக்கொண்டான். சிதறிய நினைவுகளை மனத்துள் கோத்துப் பார்க்க முயன்றான். இறுதியில், தான் நனவிழந்தது இலேசாக ஞாபகம் வந்தது. மீண்டும் கண்ணைத் திறந்தான். தன் பக்கலில் தரைமீது சிலர் கிடப்பதைக் கண்டான்.

''கொஞ்சம் கொஞ்சமாக ஸ்மரணை வருகிறது இந்த ஆளுக்கு.''

இப்படிச் சொன்னவன் லி என்று புரிந்து கொண்டான். அவனைக் கூப்பிட வாயைத் திறந்தான். ஆனால் பேசக்கூட அவனுக்குச் சக்தி இல்லை.

''அசையாதே; அப்படியே படுத்திரு!'' என்று லி அவனைத் தடுத்தான். ''பதினேழு பேர் இறங்கினார்கள். அவர்களில் மூன்று பேர் தான் உயிருடன் மீண்டனர். நீ நாலாவது ஆள், பிழைத்தாய்'' என்றான்.

''பிழைத்திருக்கிறேனா!'' — சிங்-சிக்கு அழுகை வந்து விட்டது. அழக்கூடப் பலம் இல்லை.

''இந்தா, இந்த இஞ்சி சுரசத்தைக் குடி'' என்றான் லி.

''சிங் - சி'' — கெங் - ஸெங்கின் குரல்தான்.

கெங்-ஸெங், ஆறுதல் மூச்செறிந்து, ''நல்ல காலம் உன்னை மேலே இழுத்தபோது, நீ பிணந்தான் என்றே

நினைத்தோம். சிங் - சி, உன்னை முகாமுக்கு அழைத்துச் செல்ல உத்தரவு பெற்றிருக்கிறேன் நீ உடம்பைத் தேற்றிக் கொள்ள வேண்டுமே. சில தினங்கள் படுத்த படுக்கையாகவே கிடப்பதாகப் பாசாங்கு செய். அப்போதுதான் உனக்கு உடம்பு நிலை ஏதோ மோசமாகி விட்டதென நினைப்பார்கள். இராது போனால் நாளைக்கே உன்னை அந்த வேலைக்குத் தூக்கு வார்கள்'' என்றான்.

சிங் - சி தலையசைத்தான். அவனுடைய நா வரண்டு விட்டது. மென்று விழுங்கியவாறு அவன், ''லூ மாமா, என் உயிரைக் காப்பாற்றியதற்காக நன்றி'' என்றான்.

''உம்'' என்று லூ புருவம் சுளித்து, ''என்னைப் பற்றித் தான் இப்போது எனக்குக் கவலை. மேல் அதிகாரிகளுக்கு என்விடத்தில் திருப்தி ஏற்படவில்லை, வேலை துரிதமாக நடக்காததற்கு......'' என்று இழுத்தான்.

''மூழ்க்காளிகள் வந்தார்களா ?''

''அவர்கள் இப்போது இங்கேதான் இருக்கின்றனர். இரண்டு மூன்று பேரின் உயிரை வாங்கியதும், வந்த ஆபத்து ஒருவாறு விலகியது'' என்றான் லூ.

* * * *

ஒரு தாங்கியில் சிங் - சியைக் கிடத்தி முகாமிற்கு எடுத்துச் சென்றனர். அப்போது புலரும் நேரம். இருட்டு நன்றாகப் பிரியவில்லை.

சிங் - சியின் தாய் அவனுக்கு வேறு உடையைப் போட்டாள். அவன் படுக்கையில் சற்றுப் புரண்டு படுத்தான். சிறிது சிறிதாக உடலில் பலம் வரத்தொடங்கியது. ஸியு - மின் அவன் பக்கத்தை விட்டுப் போகவே இல்லை. நீர் மல்கிய அவளுடைய கண்கள் பளபளத்தன. மூன்று பெண்களின் முகத்திலும் ஈயாடாமல் இருப்பதை நோக்கினான் சிங் - சி. தனக்கு மரணம் நேர்ந்திருந்தால் இவர்கள் எக்கதியாகி இருப்பார்களோ என நினைத்தான்.



''வயிற்றுக்கு ஏதாவது தரட்டுமா ?'' என்று அன்னை கேட்டாள். வேண்டாம் என்பதைக் குறிக்கத் தலையை ஆட்டினான் சிங் - சி. அவனுக்குப் பசியே இல்லை. அவர்களிடம் பணமும் இல்லை என்பதும் அவனுக்குத் தெரியும்.

''சியு - சு இப்போதுதான் சோற்றுருண்டை ஒன்று கொடுத்தாள். மூன்று பேருமாக அதைப் பங்கிட்டுக் கொள்வோம்.''

அச்சமயம் சியு - சி அங்கு வரவே, ஹெய் - பிங்கை நினைத்தவனாய் அவன் முகத்தை ஏறிட்டுப் பாராமல் இருந்தான்.

''அஹ் - சுயென்! தங்கச்சி, இப்படி வந்து குழந்தையைப் பார்த்துக் கொள். நான் போய் உன் அண்ணனுக்கு ஒரு கிண்ணத்தில் சூடான ஸோயாபருப்புக் கஞ்சி வாங்கி வருகிறேன். சீக்கிரமே திரும்பி விடுவேன்'' என்றாள் அவள்.

''சியு - சு, நீ போகாதே'' என்று சிங் - சியின் தங்கை அவளைத் தடுத்தாள்.

''இப்படித்தான் ஹெய் - பிங்கும் ஒரு நாள் தொலைந்து போய்விட்டான்'' என்று அவள் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு புறப்பட்டாள். ஒரு கிண்ணத்தில். ஆவி வரும் ஸோயாப் பருப்புக் கஞ்சியுடன் அவள் திரும்பி வந்தாள். சிங் - சி வெகு நாள் உருசிக்காத அமுது அது. இரண்டு வாய் பருகியதும் மிகுதியைத் தன் தாயிடம் தந்து, ''அம்மா, நீயும் குடி'' என்றான்.

'' எனக்குப் பசி யில்லையடா, சிங்-சி. சூடாக இருக்கும் போதே அதைக் குடித்துவிடு '' என்றாள் தாய். திரும்பக் கொஞ்சம் பருகினான். ஆனால் முழுவதையும் குடிக்க அவனுக்குத் திணறியது. ஸியு-மின்னுக்கும் அஹ்-சுயனுக்கும் மிகுதியைத் தந்துவிட்டான்.

''அவன் நன்றாகத் தூங்கட்டும்'' என்றாள் அன்னை, மெதுவாக.

ஸியு-மின் மெல்ல எழுந்து வெளிப்பக்கம் சென்ருள். பொன்னவிர் ஒளியுடன் கதிரவன் தோன்றினுன். துயில் கலைந்த பறவைகள் பாடத் தொடங்கின. அவள் வெளியே குறட்டில் அமர்ந்து மெல்லப் புலம்பலானுள்.

## 7

ஒலி யடங்கியிருந்த உதய வேளையில், ஒரு பெண்ணின் துயர் ஓலம் முகாமிலிருந்தவர்களை விழிக்கச் செய்தது.

குலைப்புடன் ஸியு-மின் எழுந்து, "என்னம்மா... யாருக்கு என்ன?" என்று பரபரப்புடன் கேட்டாள்.

சிங்-சியின் தாய் அவளை அடக்கி, சிங்-சி நன்ருக உறங்குவதைச் சுட்டிக் காட்டினுள். ஸியு-மின் புரிந்துகொண்டவளாய், "ஒரு வேளை சியு-சியின் குழந்தைக்கு என்னமாவதா?" என்ருள், மெதுவான குரலில்.

"அப்படித்தான் தோன்றுகிறது; நான் பார்த்துவிட்டு வருகிறேன். சிங்-சியைக் கவனித்துக்கொள்; அவனை எழுப்பாதே" என்ருள் அவள் மாமி. குறுக்கே நின்ற பாய்ப் படலை விலக்கிச் சியு-சுவின் படுக்கையின் அருகில் சென்ருள்.

உதய வேளையின் மழுங்கிய ஒளியில் லு சியு-சுவின் முகம் பேயாடியது போல் வெளுத்துக் கிடந்தது. உயிரற்றுச் சில்லிட்டுப்போன தன் குழந்தையின் பக்கத்தில் அவள் மடிந்து விழுந்தவண்ணம் பாயைக் கைகளால் ஓங்கி அறைந்து, சோகம் தாளாமல் கதறிக் கொண்டிருந்தாள். அவளுக்கு ஆறுதல் கூற சிங்-சியின் தாய் நெருங்கினுள். அதனுல் அவளுடைய கதறல் அதிகமாகியதே தவிரக் குறையவில்லை. மரித்த தன் குழந்தையையும், கணவனையும் கூவியழைத்து அலறினுள். பக்கத்தில் இருப்பவர்களைக்கூட அவள் கவனிக்கவில்லை.

"அடியம்மா, சியு-சு. கேளடீ... அழாதேயம்மா" என்று சிங்-சியின் தாய் சமாதானப்படுத்தினுள்.



லு சியு-சு எதையும் செவியில் போட்டுக் கொள்ளாமல், மரித்த தன் சிசுவைக் கையில் எடுத்துக்கொண்டு அவனை ஆட்டினுள். பைத்தியம் பிடித்தவள் போல் சிரித்தாள்... உடனேயே அழுதாள். இதற்குள் அநுதாபத்தால் துடிக்கும் சில பெண்கள் அங்கே கூடிவிட்டனர். அவர்கள் எவ்வளவோ ஆறுதல் கூறியும் அந்தப் பேதை வெறி பிடித்தவள் போல் கதறினுள்.

"என் கண்ணே! நீயும் என்னை ஏமாற்றிவிட்டுப் போய் விட்டாயே? உனக்காகத்தானே என் மானத்தையும் விற்றுப் பிழைத்தேன்?..." என்று ஓலமிட்டுத் தலையை நிமிர்த்தி வெறிச்சோடிக்கிடந்த ஆகாயத்தையே வெறிக்கப் பார்த்தாள். ஆகாயத்தில் அவள் கண்ணுக்கு என்ன புலனுகியதோ? பிதற்றினுள் பேதை—"ஹெய்-பிங், நான் உனக்குத் துரோகம் செய்தேன். எல்லாம் உன் குழந்தைக்காகத்தான். அவனை நினைத்து அதையெல்லாம் மறந்து என்னை மன்னித்து விடுவாய் என்று எண்ணினேனே - ஐயோ, ஹெய்-பிங்! அவனையும் நீ அழைத்துக் கொண்டாயே! இப்படியும் ஆவேனு நான்?" — பக்கத்திலிருந்த பெண்கள் இவளைக் கண்டு மருண்டு போயினர்.

இப் பேரிரைச்சலால் சிங்-சி விழித்துக்கொண்டான். "ஐயோ கடவுளே, அந்தப் பெண்ணுக்கு பைத்தியமே பிடித்துவிடும் போலிருக்கிறதே" என்ருன் கவலையுடன். "அவள் குழந்தை இறந்துவிட்டதா, என்ன?" என்று கேட்டான்.

ஸியு-மின் 'ஆம்' என்பதற்குத் தலையை அசைத்தாள். ஊன்றிச் சமாளித்துக்கொண்டு எழுந்து அவன், "அந்தக் குழந்தைக்கு என்ன உடம்பு?" என்ருன்.

"சீதக் கழிச்சல்" என்ருள் ஸியு-மின். "இந்த இடத்தில் எத்தனையோ பேர் இந்தக் கழிச்சலில் அவதிப்படுகின்றனர். வைத்திய வசதி எதுவுமே இல்லை. அப்படி ஏதாவது அகப்பட்டாலும் பயன் அளிப்பதில்லை" என்ருள்.

முகாம் மேற்பார்வையாளன் உள்ளே நுழைந்து அங்குக் கூடியிருந்தவர்களை அவரவர்கள் இடத்திற்குப் போகச் சொன்னான். ஆனால் யாருமே அவனைப் பொருட்படுத்த வில்லை.

"நீங்கள் இப்படி என் கட்டளைக்கு அடங்கிப் போகாது போனால், உங்களுக்குத் தரப்படும் சோற்றுப் படியை நிறுத்தி விடுவேன்" என்று மிரட்டினான் அவன்.

இதைக் கேட்ட மாத்திரம் அங்கே இருந்தவர்கள் அடங்கி விட்டனர். சோற்றுப் படி நிற்பது என்றால் அது பயங்கர விஷயமாயிற்றே! மெல்லத் தம் இடங்களை நோக்கி அவர்கள் நடந்தனர்.

சில நிமிடங்களுக்கெல்லாம் அந்த முகாமே திடுக்கிடும் படி, முதுகைச் சிலிர்க்க வைத்த கதறலொன்று கேட்டது. ஸியு-க மரித்துப்போன சிசுவைத் தன் கைக்குள் ஏந்தியவாறு ஆவேசத்துடன் பாய்ந்தான். முகாம் மேற்பார்வையாளனை இடித்துத் தள்ளி, வழியில் இருந்த சாமான்களை உதைத்து உருட்டியவாறு மங்கிய தெருவூடே தலைதெறிக்க ஓடினான். மருண்டு போன ஒரு மிருகம் கல் மண் தெரியாமல் ஓடுவதை ஒத்து இருந்தது அக்காட்சி.

"அவனுக்கு மூளைக் கோளாறுதான்!" என்று மேற்பார்வையாளன் முணுமுணுத்தான். "என்ன பண்ணலாம்? இப்படித்தான் அவன் வாழ்வு முடியும்" என்றான்.

முகாமில் இருந்தவர்கள் எதுவும் செய்ய முடியாமல் சும்மாக் கிடந்தனர். அவன் இனி இந்த உலகம் வரைக்கும் தொலைந்து போனவனே; மறுபடி இந்த முகாமுக்கே வர மாட்டான் என்று தெரிந்து கொண்டனர்.

மணி அடித்தது. காலை உணவை அறிவிக்கும் மணி. துயரால் உதடுகளைக் கடித்துக் கொண்டிருந்த அந்த மாந்தர் யந்திரம்போல் தம் கிண்ணங்களையும், சோற்றுக் குச்சிகளையும் எடுத்துக்கொண்டு, அரிசிக் கஞ்சியைப் பெற வரிசையாக வந்து நின்றனர்.



"கவனமாகக் கேளுங்கள் யாவரும்!" என்று முகாம் மேற்பார்வையாளன் கைகளைத் தட்டிப் பேச்சைத் தொடங்கினான். "இந்த வெள்ளத்துடன் நடத்தும் போராட்டத்தில் வெற்றி பெறுவதற்காக இன்று முதல் பெண்களும் வேலை செய்தாக வேண்டும்" என்றான் அவன்.

"அம்மா! நீ போகவே கூடாது வேலைக்கு" என்றான் சிங்-சி வேதனையுடன்.

அவனுடைய தாய் அவன் கையை அழுத்தினாள். "என்னால் இன்னும் வேலை செய்ய முடியுமடா; எனக்காக நீ கவலைப்படாதே; இவர்கள் இரண்டு பேருக்கும் இந்தத் தொல்லை வருமே என்றுதான் கவலைப்படுகிறேன்" என்றாள்.

"எனக்கென்ன? தங்கச்சியால்தான் முடியாது. அம்மாவினால் முடியாது இந்தத் தள்ளாத வயதில்" என்று ஸியு-மின் தன் உறுதியை வெளிப்படுத்தினாள். "சிங்-சி, நீ படுத்துக்கொண்டு இரு; நோயுற்றிருப்பதுபோல் நடிப்பாய்...நகரவே சக்தியற்றவன்போல் இரு...அப்படி ஆள் தேவையென்றால் நான் போகிறேன்" என்றாள்.

இருபத்து நான்கு மணிநேரம் கழித்து, பெண்கள் செய்ய வேண்டிய பணியைப் பற்றி அறிவித்தனர். இரு சாராராக அவர்களைப் பிரித்தனர். ஒரு சாரார் நகர வீதிகளைச் சுற்றிலும் மிதந்து தேங்கியிருந்த குப்பையை வாரவேண்டுமென்றும், மறு சாரார் மனைக் குழிகளில் வேலைசெய்ய வேண்டுமென்றும் ஏற்பாடாகியது. சிங்-சியின் குடும்பத்தவரில் அவன் தாய்க்கே வேலை செய்வதற்கான தாக்கீது வந்தது. கூலி வேலை செய்ய இப்படி அந்தக் கிழவியைத் தேர்ந்ததைக் குறித்து ஸியு-மின் மிகவும் கலங்கிப் போனாள். அந்தக் கிழவிக்குத் தெரியாமல், அவளுடைய அடையாள வில்லையை எடுத்துக் கொண்டு நேராக முகாம் மேற்பார்வையாளனைக் காணச் சென்றாள்.

"தோழரே! இது என்னுடைய தாயின் அடையாள வில்லை. அவளோ தள்ளாத கிழவி; —இந்தக் கஷ்டமான

வேலையை அவளால் எப்படிச் செய்ய முடியும்? அவளுக்குப் பதிலாக நான் செய்தால் என்ன?'' என்றாள் ஸியு-மின்.

''நீதானே?'' என்று அவளைப் பார்த்துக் கண் சிமிட்டி, ''சற்றுப் பொறு இரண்டே நாளில் உன்னையும் அழைப்பார்கள் வேலைக்கு'' என்றான்.

''நீங்கள் உத்தரவு தந்தால் அம்மாவுக்காக நான் வந்து வேலை செய்கிறேன்'' என்றாள் ஸியு-மின்.

''அதை எப்படி மாற்ற முடியும்?'' என்றான் மேற்பார்வையாளன்.

''அவள் கிழவி; அவளால் முடியாது'' என்று ஸியு-மின் மீண்டும் உறுத்திச் சொன்னாள்.

''அவளால் முடியாதென்கிறாயா? ஆனால் அவளால் சாப்பிட முடியுமல்லவா?'' என்று அவன் ஏளனமாகச் சொல்லி, ''இது மக்களுக்கு ஆற்றும் தொண்டு — யாராயிருப்பினும் அவர்கள் வேலை செய்தே ஆகவேண்டும்'' என்றான்.

''அவளுக்குப் பதிலாக நான் வேலை செய்கிறேனே...''

''பேசாதே, பெண்ணே'' என்று அந்த அதிகாரி அவளை அடக்கினான். ''உன்னுடைய வேண்டுகோளை நான் கேட்கத் தயாராக இல்லை. பழங்காலக் குருட்டுப் பக்திப் போக்குதான் இது'' என்றான் கொடூரமாக.

''தோழரே! தயை கூருங்கள்'' என்று அவள் கெஞ்சினாள்.

''எதற்காகப் பெண்ணே அவசரப்படுகிறாய்? நீயும் வேலை செய்யத்தான் போகிறாய். அதற்குச் சமயமும் வரப்போகிறது.''—அந்த அதிகாரி மெல்லச் சிரித்து, ''உன் முறை வரும், கவலைப்படாதே'' என்றதும் அவளுடைய கன்னத்தை மெல்லக் கிள்ளினான்.

அவள் நடுங்கிப் போய்விட்டாள். அதற்குமேல் அவள் அவனை வற்புறுத்தவில்லை. அந்த இடத்தை விட்டு அகன்றாள்.



''இதோ உன்னைத்தான்...இதைக் கேட்டுவிட்டுப்போ'' என்று அவன் அவளை அழைத்து, ''நீ என்ன கேட்டாய்?'' என்றான்.

''என் அம்மாவுக்குப் பதிலாக நான் வேலை செய்யலாமா என்றுதான் கேட்டேன்'' என்றாள் தயக்கத்துடன்.

''இங்கே வா'' என்று கூறும்போது அவன் உதட்டில் ஒரு கள்ளச் சிரிப்பு உலவியது.

அவன் தன்னைக் கூப்பிட்ட நோக்கத்தை அவள் உணர்ந்த போதிலும், அவனுடைய கட்டளையை மீறிச் செய்ய முடியவில்லை.

அவள் அருகில் வந்ததும் அவளைத் தட்டி, அவள் கன்னத்தைத் தடவி, ''அழகிதான் நீ!'' என்றான்.

''தோழரே, இதென்ன...?'' என்றாள் ஸியு-மின் விதிர்த்து.

''பயப்பட ஒன்றுமில்லை, தங்கமே'' என்று அவளைப் பற்றப் போனான் அந்த ஆள்.

அவன் பிடிக்குள் சிக்காமல் திமிறிக் கொண்டாள் ஸியு-மின். ஆத்திரத்தில் அவள் மார்பு விம்மி விம்மி அடங்கியது. அவள் ஓடினாள். அந்த அதிகாரி அவளை நோக்கி ஏளனச் சிரிப்புடன், ''இப்போது ஓடிவிடலாம்; அப்புறம் நீயே வந்து சிக்கிக்கொள்ளப் போகிறாய், பார்'' என்றான்.

ஓர் இருண்ட மூலைக்குள் திரும்பி நின்றாள் ஸியு-மின். தன்னைச் சமாளித்துக் கொண்டாள். தனக்கு நடந்த இந்த அவகேட்டைக் குறித்துச் சிங்-சிங்கோ அவன் தாயோ அறியக் கூடாதென்பது அவளது எண்ணம்.

சிங்-சியின் தாய் தனக்கு இடப்பட்ட வேலையை விதியேயென்று ஏற்றாள். அவளுடைய கவலையெல்லாம் தன் மகனின் உயிர், உடல் நிலையைப் பற்றித்தான். தன்னைக் குறித்து அவள் விசாரப் படவே இல்லை.

அவள் வேலைக்குப் புறப்படுமுன், அவள் தன் மகனுக்கு நினைவுறுத்தினாள்: "சிங்-சி, நீ படுக்கையை விட்டு எழுந்திருக்கவே கூடாது. உண்மையாக நோயுற்றிருப்பதுபோல் நடந்துகொள். ரொம்ப இளைத்துப் போயிருப்பதுபோல் நீ காட்டிக்கொள்ள வேண்டும். ஒரு பத்து நாளாவது இப்படி இருந்தால்தான் உன் உடம்பு தேறும்." பிறகு ஸியு-மின்னைப் பார்த்து, "இவனை ஜாக்கிரதையாகப் கவனித்துக்கொள். என்னைப் பற்றிக் கவலையே படாதே" என்றாள்.

அன்னை அகன்றதும் சிங்-சி வேதனையில் ஆழ்ந்தான். தன் தந்தை எவ்வளவு ஆதரவாக அவனை வைத்திருந்தார். அவனுடைய இளமைக் காலத்தில் அவன் எப்படி ஒரு விசாரமுமின்றி இருந்தான். இதையெல்லாம் அவன் நினைத்துப் பார்த்தான்.

"அண்ணா! அம்மா இராத்திரி வந்துவிடுவாளா?" என்றான் அவன் தங்கை, பேந்தப்பேந்த விழித்தபடி. "இராத்திரிகூட வரமாட்டேன் என்று அவள் ஏன் சொன்னாள், அண்ணா?" என்று கேட்டாள்.

சிங்-சிக்கு வாழ்க்கையிலேயே திடுமென ஒரு கசப்பு மூண்டது. அவன் எதைச் சொல்வது? ஸியு-மின் அந்தச் சிறுமியை மெல்லத் தட்டி, "அம்மா கட்டாயம் திரும்பி விடுவாள், தங்கச்சி. உன் பக்கத்தில்தான் படுத்துத் தூங்குவாள்" என்றாள்.

ஆனால் அந்தக் கிழவி, சிங்-சியின் தாய் அன்று இரவு திரும்பி வரவில்லை. ஸியு-மின் அவளைத் தேடிச் செல்லத் துடித்தாள். தான் போனதும் சிங்-சி எழுந்து பார்த்து, அவனும் கிளம்பி விட்டால் என்ன செய்வதென்று எண்ணியே பேசாமலிருந்தாள். எழுந்திருக்க அவனுக்குத் திடமுண்டு என்பது அவள் அறிந்ததே. ஆயினும் அவன் தாய் தனக்கு இட்ட கட்டளையை அவளால் உதறித் தள்ள முடியவில்லை. வலி பெரிதும் குறைந்து விட்டது. இரவோடிரவாகப் போய்ப் பார்த்தாலென்ன என்று சிங்-சிக்குத் தோன்றியது. கடைசியில், பாதி ராத்திரியானதும் இந்த



விஷயத்தை ஸியு-மின்னிடம் அவன் வெளியிட்டான். இதைக் கேட்டதும் அவள் அதிர்ந்து விட்டாள்.

"அம்மா போகும்போதும் திருப்பித் திருப்பிச் சொல்லவில்லையா?" என்றாள்.

"இந்த இருட்டில் என்னை யார் கவனிக்கப் போகிறார்கள்?" என்றான் சிங்-சி.

"ஒரு காவல்காரன் இருக்கிறான், சிங்-சி. நீ வெளியே போகக்கூடாது. உன்னை யாராவது கண்டு விட்டால், நாளைக்கே உன்னை வேலைக்கு இழுத்துச் செல்வார்கள். இவ்வாறு ஸியு-மின் கூறும்போது அவள் கண்களில் நீர் நிறைந்து விட்டது.

"நான் எப்படியாவது பதுங்கிச் செல்வேன்... என்னை அவர்களால் கண்டுகொள்ள முடியாது" என்று சிங்-சி பிடிவாதம் பிடித்தான்.

"உன் அம்மா வந்து இதைக் கேட்டால், இதயம் வெடித்துச் சாவாள்" என்றாள் ஸியு-மின்.

தன்னால் முடியவில்லையே என்று அவன் பெருமூச்செறிந்தான். "சரி, நான் போகவில்லை" என்றதும், அவன் தன் கைகளை முட்டியிட்டு யாரையோ தாக்குவதுபோல் நின்றான்.

இந்த முகாமில் இருந்த நூறு பெண்களை வேலை செய்ய ஏவியதுபோல் மற்ற முகாம்களிலும் பெண்களை வேலைக்கு அழைக்கும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஏற்கனவே அணைக் கரையில் வலுக்கட்டாயப்படுத்தி ஆடவர்களையே வேலை வாங்கினர். ஆனால் குடும்பம், குழந்தை குட்டிகளை விட்டுப் பெண்டிரைப் பிரித்து வேலை வாங்குவது இதுவே முதல் தடவையாகும். தாயைப் பிரிந்த குழந்தைகள் அழும் ஓலம் முகாமெங்கும் ஒலித்தது. சிங்-சியின் மூளையில் பயங்கரமான நினைவுகள் விரைந்தன—அணைக்குக் கீழே மக்கள் மணல் மூட்டைகளுடன் நீருள் முழ்கி மாள்வது; லுஹெய்-பிங்கின் பரிதாப மரணம்; லு-சியுசு வெறி பிடித்து ஓடிப்போனது; சுடப்பட்டுப் பலர் இறந்து போனது யாவும். அணைக்

கரையில் வேலை துரிதமாக நடக்காத காரணத்தை உணரலானான்.

‘ஆம், இந்த காம்யூனிஸ்ட்டுக்கள் வெள்ளத்தைத் தடுக்க எடுத்துக்கொண்ட முயற்சி தவறான விஷயமல்லதான். ஆனால் இப்படி ஆட்கள் மௌனமாக அவர்களை எதிர்த்து வேலை செய்யாமல் இருப்பதும், ‘இந்த வெள்ளம் வந்தாலும் தேவலை; காம்யூனிஸ்ட்டுக்கள் ஒழிந்து போவதுடன், நாமும் ஒழிந்து இந்தக் கஷ்டத்திலிருந்து விடுதலை அடைவோம்’ என்று எண்ணுவதும் இயல்புதான். இப்படி அவர்கள்மீது இவர்களுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டதற்கு இந்த ஒரு காரணம் மட்டுமல்ல; 1949-லிருந்தே இவர்களைக் கொடுமைக்கும், அட்டூழியத்திற்கும் ஆளாக்கியதும் காரணங்களாகும்.’—இவ்வாறு அவனுடைய சிந்தனை சென்றது.

வாங் சிங்-சியின் விடுதியினுள் யாரோ மெல்ல நடந்து வரும் காலடிச் சப்தம் திடுமெனக் கேட்டது. ஸியு-மின் திடுக்கிட்டு விழித்துக்கொண்டாள். எழுந்து உட்கார்ந்து அவள் சிங்-சியை அசைத்தாள்.

''சிங்-சி'' என்று ஓர் ஆடவனின் குரல் அவள் பக்கமாகக் கவிந்து அழைப்பது கேட்டது.

''ஓ! நீயா, து-பாவோ வா ?'' என்று சிங்-சி கண்களைக் கசக்கிக்கொண்டு படுக்கையிலிருந்து எழுந்திருக்க முற்பட்டான். ஆனால் ஸியு-மின் அவனைப் படுக்கையிலேயே அழுத்தி விட்டாள்.

''சிங்-சி, எழுந்திருக்காதே'' என்றான் து-பாவோ. ''நான் இரவு கோஷ்டியில் வேலை செய்கிறேன். சுவைக் கேட்டுக்கொண்டு என் அம்மாவைப் பார்க்க வந்தேன். அவள் பெண்கள் கூலிப்படையில் சிக்கி வேலைக்குச் சென்றது எனக்குத் தெரியாது'' என்றான்.

''அணைக்கரைப் பக்கம் நிலைமை எப்படி இருக்கிறது? நான் அந்தப் பக்கம் போய் மூன்று நாட்களாகின்றன'' என்றான் சிங்-சி.



''அதை ஏன் கேட்கிறாய்? மோசமாகிக் கொண்டு வருகிறது. இன்று வெள்ளநீர் புதிய உச்சியைத் தொட்டதாம். எந்த நிமிடமும் ஆபத்து நேரிடலாம். நல்ல காலம், இன்று இரவு காற்று இல்லை. கடவுளே, என் உடம்பு சோர்ந்தே போய்விட்டது. மூன்று இரவாக ஒரு பொட்டு தூக்கம் ஏது எனக்கு ?'' என்றான் து-பவோ.

''ஸூ மாமா எப்படி இருக்கிறார் ?''

''காட்டுப்பூனை மாதிரி இருக்கிறார் - கொள்ளிக்கட்டை மாதிரி கண் ஜிவுஜிவுவென்று சிவந்து கிடக்கிறது. இன்னமும் அக்கறையாகவே உழைக்கிறார். நேற்று அவருக்கு நல்ல திட்டு!''

''கரைப்பக்கம் ஆட்கள் எப்படி நடக்கின்றனர் ?''

''எவனும் மதிப்பதில்லை கட்டளையை. வெள்ளம் ஏற ஏற இவர்களது மனமும் மேலும் மேலும் கலங்கிக் குன்றி வருகிறது'' என்றதும் து-பவோ ஆழ்ந்த மூச்சிழுத்தான். ''கரைப் பக்கம் போய்ப் பாரேன். எத்தனையோ புது முகங்கள். நீ ஆற்றுள் முழுக்குப் போட்ட அன்று நம் காங்கியைச் சேர்ந்த மேலும் ஐந்து ஆட்கள் பலி. இரண்டு நாட்களுக்கு முன்பு ஏழு பேர் ஏககாலத்தில் மடிந்தனர். நேற்று இரண்டு பேரைக் காணவில்லை. அந்த இரண்டு பேரும் கஷ்டம் பொறுக்கமாட்டாமல் ஆற்றுள் குதித்துத் தற்கொலை செய்து கொண்டார்களாம். ஐம்பத்தொரு பேர் இருந்த நம் காங்கியில் இந்த மூன்று நாட்களில் நாற்பது பேர் செத்தொழிந்தனர். இப்போது புதிய ஆட்கள் வந்திருக்கிறார்கள். இன்று நமக்கு அதிருஷ்டந்தான்; வெள்ளத்தின் மட்டம் உயர்ந்தாலும் யாரும் சாகவில்லை'' என்றான்.

சிங்-சி திடுக்கிட்டான். இதுபோன்ற நிலையில் உயிர் பிழைத்திருப்பதே பெரிய அதிர்ஷ்டமெனத் தோன்றியது. தன் காங்கியைச் சேர்ந்த சில நண்பர்களைப்பற்றி து-பவோவிடம் விசாரித்தறிய அவன் ஆவல் கொண்டான். ஆனால்

அதைத் தவிர்த்துக் கொண்டனர். இறந்தவர்களில் அவர் களும் இருக்கலாமென அவன் அஞ்சியதே அதற்குக் காரணம்.

''இங்கேயே சற்றுப் படுத்துத் தூங்கேன்'' என்றான் சிங்-சி.

''இல்லை, நான் வீடு நோக்கித் திரும்பிவிடுவ தாகச் சொல்லிவிட்டேன். நீர்மட்டம் ஏறுவதால் எல்லோ ரும் அங்கேயே இருந்தாக வேண்டுமென லா வற்புறுத் தினார். அம்மாவைப் பார்க்க அவர் எனக்கு அனுமதி தந்தார். வாரித்தலையைக் காப்பாற்ற வேண்டாமா? லா சற்றுக் கோபக்காரரானாலும், இனிய மனமுடையவர்'' என்றான் து-பவோ.

பொழுது புலரும் சமயம், முகாமை நோக்கிப் பெண்கள் சிலர் வேலை செய்துவிட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தனர். அதிகாலை வெளுறுமுன்கூடச் சட்டென முகாம் வீதிகளில் சலசலப்பு மூண்டது. தாய்மாரைப் பார்த்ததும் குழந் தைகள் ஓடிவந்தனர்.

''என் தாய் திரும்பி வந்துவிட்டாளா, இல்லையா என்பதைப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்றதும் து-பவோ எழுந்தான். அவன் சற்று நின்று, ''லு ஹெப்பிங் கின் சம்சாரத்துக்குச் சித்தப்பிரமை பிடித்து விட்டதாமே?'' என்றான்.

''ஆமாம், பாவம். அவளுடைய குழந்தை இறந்து விட்டது. அதிலிருந்து இப்படி ஆகிவிட்டாள். வெறிபிடித்து வெளியே ஓடிவிட்டாள். அவள் எக்கதி ஆனாளோ, யாருக் குத் தெரியும்?'' என்றான் சிங்-சி.

''வெட்கக்கேடு—சரி, நான் வருகிறேன்... ஜாக்கிரதை யாக உடம்பைப் பார்த்துக்கொள், சிங்-சி'' என்று து-பவோ புறப்பட்டான்.

''விபு-மின், அம்மா திரும்பி வந்துவிட்டாளா, போய்ப் பார்'' என்றான் சிங்-சி.



''முன்பே பார்த்துவிட்டேன். அவள் இன்னும் வர வில்லை... படுத்துறங்கு - அவள் சீக்கிரமே வந்துவிடுவாள். என நினைக்கிறேன்'' என்றாள் விபு - மின்.

''பலர் இன்னும் திரும்பவில்லை அல்லவா?''

''ஆமாம், நம் வீடுதியைச் சேர்ந்தவர் பத்து பேர்தான் திரும்பினர். இதோ, வேறு வழியாக இன்னொரு கூட்டம் வருகிறது. அதில் இருக்கிறாளோ என்னவோ, அம்மா...'' என்று விபு தன் கழுத்தை உயர்த்தி நோக்கினாள்.

சற்றுப் பொறுத்து து-பவோ மீண்டும் வந்து, ''சிங்-சி, எனக்கு ஓர் ஆபத்துமில்லை; நன்றாகத்தான் இருக்கிறேன் என்பதை என் அம்மாவைப் பார்த்தால் சொல்லு. நான் போக வேண்டும், நாழிகை ஆகிறது'' என்றான்.

''அப்படியே சொல்லுகிறேன், து-பவோ...''—சிங்-சி மெல்லப் பதிலுரைத்தான். ''நீயும் ஜாக்கிரதையாக இரு; லா மாமாவிடம் என் வணக்கத்தைச் சொல்லு'' என்றான்.

ஒரு மணி நேரம் கழித்து, அலுத்துப்போன பெண்களின் கூட்டம் ஒன்று முகாமிற்குத் திரும்பியது. அவர்களில் சிலர் அழுகையுடனும், சிலர் சிரிப்புடனும், சிலர் அந்த இரண்டில் எதையும் வெளிக்காட்ட முடியாத அளவு உடலோய்ச்சலுட னும் இருந்தனர்.

''அம்மா வந்துவிட்டாள்''—விபு-மின் சந்தோஷக் கூச்சல் போட்டாள்.

அப்பாடா என்றுகிறது, சிங்-சிக்கு. இரவெல்லாம் அவன் பட்ட வேதனை தீர்ந்தது. அவனுடைய தங்கை குதித்தெழுந்து அன்னையைத் தழுவிக் கொண்டாள்.

விபு-மின் தள்ளாடி வரும் அந்த முதியவளை மெல்லப் பிடித்து உட்கார வைத்தாள். வேலை செய்து அழுக்குப் படிந்த தன் முகத்தைத் துடைத்துக்கொண்டு மலர்ச்சியுடன், ''சிங்-சி அப்பனே, நன்றாகத் தூங்கினாயா?'' என்று அவன் விசாரித்தாள். தான் பட்ட கஷ்டத்தையோ, இரவெல்லாம்

தூங்காது கண்விழித்ததையோ தன் மக்களிடம் அவள் கூறிக்கொள்ளவில்லை.

''அம்மா, இத்தனை நேரம் அங்கே என்ன வேலை இருபத்துநாலு மணிகாலம் ?'' என்று சிறிய மகள், அவளைத் துளைத்தாள். ''நீ வரவில்லையே என்று என்ன திகில் பட்டேன் ...போ'' என்றாள்.

''என்ன செய்வது ? முடியாதென்றால் விடுகிறார்களா ? தெருவில் கிடக்கும் ஆபாசத்தை யெல்லாம் வாரி வாரிக் கரைமேல் கொட்டினேன். கொட்டினவுடனேயே ஆற்றின் அலைகள் அதைக் கரைக்கே ஒதுக்கிவிட்டன. ஆனால் நாளைக்கு இந்த வேலை இல்லை. மண் சுமக்கும் வேலை தந்திருக்கிறார்கள்'' என்றாள்.

''நாளைக்கும் போக வேண்டுமா ?'' என்று இடிவிழுந்து போய்க்கேட்டான் சிங் - சி.

''நாளை என்றால் இன்றுதான் - இதோ சற்றுக் களைப் பாறியதும் புறப்பட வேண்டியதுதான்'' என்றாள் தாய்.

''ஒரு முழுப்பகல், ஒரு முழு இரவு... சற்று ஓய்வு - மறுபடியும் வேலை !''

''ஆமாம், நம்மையெல்லாம் அவர்கள் மனிதர்களாகவா நினைக்கின்றனர் ?'' என்று கூறும்போது அவள் ஓய்ந்துபோன தன் கால்களை மெல்லப் பிடித்து விட்டுக் கொண்டாள். ஸியு-மின்னிட மிருந்து ஒரு கிண்ணம் நீரை வாங்கிப் பருகினாள். தரையில் சற்றுச் சாய்ந்தாள். ''அவர்கள் மட்டும் நம்மை மனிதர்களாக நடத்தினால், நான் எலும்பு உடைய வேலை செய்வேன் - ஆனால் அப்படி இல்லையே அவர்கள். நானே என் கண்ணால் பார்த்தாயிற்று, அந்த அநீதத்தை. இரண்டு பெண்கள் ஆற்றில் சறுக்கி விழுந்து விட்டனர். அவர்களைப் காப்பாற்ற ஒரு முயற்சியும் செய்யவில்லை. அவர்களை ஆறு அடித்துச் செல்வதை வேடிக்கை பார்த்தபடிச் சும்மா இருந்துவிட்டார்கள். நம்முடைய முகாமைச் சேர்ந்தவர்களே அந்த இரண்டு பெண்களும்.''



திடுக்கிட்டுப் போய் எல்லோரும் மௌனத்துள் ஆழ்ந்தனர். சிறிது நேரமானதும், சிங்சி, ''ஓ ஸியு-மின், து-பவோவின் அம்மையைப் பார்த்து, 'அவள் மகன் அவளைக் காண வந்து போனான் - அவனுக்கு உடம்பு ஒன்றுமில்லை' என்று சொல்லிவிட்டு வா'' என்றான்.

''ஸியு-மின், அதற்குத் தேவையே இல்லை...'' என்று சிங் - சியின் தாய் அவளைத் தடுத்து, ''அவளை இனி யாருமே பார்க்க முடியாது'' என்றாள்.

''அம்மா, ஆறு அடித்துச் சென்ற அந்த இரண்டு பேரில் து-பவோவின் தாயும் ஒருத்தியா ? ஐயோ இதென்ன கஷ்டம் ?'' என்றாள் ஸியு-மின். 'ஆம்' என்று தலையசைத்தாள் தாய்.

சிங் - சி பற்களைக் கடித்தான். காம்யூனிஸ்டுக்களின் அக்கிரமத்திற்கு இன்னொரு அத்தாட்சியாகியது அது.

இப்படியே எத்தனையோ பேர், கேட்பார் இராமல் மறைந்தொழிந்தனர்.

## 8

ஆகஸ்ட்டு 18-ஆம் நாள் காலை அகதி முகாமிலிருந்தவர்களை வெளியே ஒலித்த சோமக்கலத்தின் ஓசை திடுக்கிட வைத்தது. முகாம் மேற்பார்வையாளர் முகாமினுள் தடதடவென்று சிப்பாய்களுடன் நுழைந்தனர். சீழ்க்கையொலி கேட்டது. நவ்வாலு பேராகப் பிரிந்து அவர்கள் முகாமை வளைத்துக் கொண்டனர். பின்னாலேயே வெள்ளத் தடுப்புத் தலைமையகத்தைச் சேர்ந்த அதிகாரிகள் சிடுத்த முகத்துடன் உள்ளே வந்தனர்.

யாரோ ஒருவன் அறிவித்தான் : 'இயாங்க்ட்ஸியின் வெள்ள மட்டம் புது உச்சஅளவான 29·73 மீட்டருக்கு

உயர்ந்துவிட்டது. வெள்ளத் தடுப்பு வேலை புதிய கட்டத்திற்கு வந்துள்ளது. சிறிது நேரங்கூடத் தாமதிப்பதற்கில்லை. ஆண்களும் சரி, பெண்களும் சரி, வயதானவர்களானாலும், இளையவர்களானாலும் எல்லோரும் இப்பெரும் போரில் பங்கு எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும்.'

'' உம் எழுந்திரு.... உன்னைத்தான், எழுந்திரு '' என்று ஒரு சிப்பாய் வாங் சிங்-சியைக் கிளப்பினான்.

'' தோழரே - 14-ஆம் தேதி இரவன்று நான் அணைக் கரையில் வேலை செய்கையில் அடிபட்டுக் கிடந்தேன். உடைப்பொன்றை அடைக்க நான் நீருள் மூழ்கினேன்'' என்று சிங்-சி பாடம் ஓதுவதுபோல் கூறினான்.

'' சரி, எழுந்திரு, தடிப்பயலே !'' என்று முகாம் மேற்பார்வையாளன் கேவலமாகச் சொன்னான். அவனைப் படுக்கையிலிருந்து தரதரவென்று இழுக்கத் தொடங்கினான்.

வாங் சிங்-சி எழுந்தான் ; ஆனால் நடக்க முடியாதவன் போல் துவண்டான்.

'' நடடா !'' என்று அவன் முதுகில் அறை கொடுத்தான் மேற்பார்வையாளன்.

அப்படியும் சிங்-சி தள்ளாடினான் ; மார்பைத் தடவிக் கொண்டான்.

'' சமாளி ; நீ ரொம்ப தைரியமான பேர்வழியாச்சே!'' என்று மற்றொரு அதிகாரி அவனைத் தட்டிக் கொடுத்தான். '' எந்தக் காங்கிலே வேலை செய்தாய் நீ ?'' என்றான்.

'' பதினேழாம் காங்கி - ஒன்பதாவது பிரிவிலே'' என்றான் சிங்-சி.

'' தோழரே, ஏறக்குறைய அவர் செத்துப் பிழைத்தார் - மூன்று நாளாக அன்ன ஆகாரமில்லை'' என்று பரிந்து பேசினாள் ஸியு-மின்.

'' அதெல்லாம் இல்லை - மனசு வைத்தால் தானே உடம்பு ஆடும் '' என்று சற்று ஏளனமாக அதிகாரி சிரித்தான்.



வாங் சிங்-சியை நெட்டித் தள்ளிக்கொண்டே, ''போடா நேரமாகிறது '' என்றான்.

'' தோழரே...'' என்று ஸியு-மின் கெஞ்சினாள்.

'' நீகூடத்தான் வேலை செய்யவேண்டும், பெண்ணே !'' என்று முகாம் பார்வையாளன் அவளைப் பார்த்து உரக்கச் சொன்னான். அஹ்-சுயென்னைப் பார்த்து, '' ஏ பெண்ணே, உனக்கு என்ன வயசு ?'' என்றான். பயந்து போய் அஹ்-சுயென், '' பதினாலுங்கோ '' என்றாள்.

இவர்களிடையே நடந்த பேச்சைக் கேட்க சிங்-சியால் முடியவில்லை. இரண்டு கட்டைத் தடியர்கள் அவனை அச்சமயம் முகாமைவிட்டுத் தள்ளிச் சென்றனர் ; வெளியே முன்பே வரிசையாகத் தள்ளாடி நின்ற இருபது பேருடன் அவனையும் சேர்த்தனர். எதிர்ப்புறமாக சுமார் நாற்பது மாதரை நிறுத்தினர். ஓர் அதிகாரி கட்டளை யிட்டதும் வாங் சிங்-சியும் அவனைச் சேர்ந்த குழுவினரும் அந்தப் பழைய சங்குங் அணைக்கரைக்கே இட்டுச் செல்லப்பட்டனர்.

முதன் முதல் அங்கு வேலை செய்யச் சென்றபொழுது வெள்ளமோ அது சம்பந்தமான வேலையோ இப்படிப் பயங்கரமானதென்று சிங்-சி நினைக்கவே இல்லை. வெள்ளத்தால் நேரிடும் ஆபத்தும், அந்த அணைக்கரையை இருட்பனிபோலக் கவிந்திருந்த மரண அபாயமும் அவனை வரவர அச்சுறுத்தின. நான்குநாள் ஓய்வுக்குப்பின் மீண்டும் தன் இடத்திற்கே திரும்பி யிருந்த அவன் கண்களில் ஒரு திடுக்கிடும் காட்சி பட்டது.

தொடுவான்வரைப் பிரவாகம் பொங்கிக் கட்டுக்கடங்காமல் சென்று கொண்டிருந்தது. அதன் கலங்கிய அலைகள் சீறிக் கரைமீது மோதி, திவலை துணைக்கரை மீதெங்கும் வழிந்தோடியது. வெலவெலுத்துப்போய் ஆண்களும் பெண்களும் சாரி சாரியாக, குறுக்கும் நெடுக்கும் மண்ணைத் தலையில் சுமந்து துணைக்கரையை பலப்படுத்த முயன்றனர். எங்கே நோக்கினும் ஒரே மண்குவியல், கற்குவியல். சிங்-சி தன்னிடத்திலிருந்து பார்த்தபோது கந்தையால் முகம் மூடப்பட்டு

நான்கு பிணங்கள் கிடப்பது தெரிந்தது. சற்றைக்கொரு தரம் அலைகள் அச்சடலங்களை உருட்டித் தள்ளின. அப்போது அவற்றின் விகாரமடைந்த உறுப்புக்கள் உயிர்த் துடிப்புள்ளனபோல் அசைந்தாடின. சிங்-சிக்கு உடல் சிலிர்த்தது. வேறுபக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

உடல் மெலிந்து நோயுற்றவரான நாலைந்து ஆட்களைத் தன் ஒன்பதாவது பிரிவில் வேலை செய்ய அவன் இட்டுச் சென்றான்.

ஒரு வேலைக் குழுவினருக்கு கண்காணியாக லீயிக்கு உத்தியோக உயர்வு கிடைத்திருந்தது. அணைக்கரையில் வாங் சிங்-சியைக் காண நேரிட்டதும், ''மறுபடியும் நீ இங்கு ஏன் வந்தாய்?'' என்றான் அவன்.

''என்னை வலிய இழுத்து வந்தார்கள். நம் காங்கில் மேலும் நாலு ஆட்களைச் சேர்த்துள்ளனர்'' என்று தன்னுடன் வந்திருந்தவர்களைச் சுட்டிச் சொன்னான் சிங்-சி. அங்கு முன்பே வேலை செய்து கொண்டிருந்தவர்களில் பலர் புதிய முகங்களாக இருந்ததைக் கண்டான்.

''இவர்களும் தேவைதான். இன்று காலை மேலும் மூன்று பேரை இழந்தோம்'' என்று லீ கனைத்தான். ''ஆனால் இப்போது பதிலுக்கு ஐந்து பேர் கிடைத்துவிட்டனர், உன்னையும் சேர்த்து'' என்றான்.

புதிதாக வந்த நால்வரும் திகிலினால் முகம் வெளுத்துப் போய், உருட்டியோடும் ஆற்று வெள்ளத்தையே மருண்டு நோக்கியபடி ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக் கொண்டனர். ''வாருங்கள், போகலாம்!'' என்று லீ அவர்களை வேலை நடக்கும் இடத்திற்கு இட்டுச் சென்றான். அங்கே ஸு கெங்-ஸெங் தலைப்பாகையைப் போல் தலையில் துணி சுற்றிக் கொண்டு கையை ஆட்டிச் சமிக்ஞை செய்தபடி இங்குமங்கும் பாய்ந்து வேலையாட்களை அதட்டி, கரையில் மணற் மூட்டைகளை சேர்த்துக் கொண்டிருந்தான். சிங்-சியை அங்கே பார்த்தபோது அவன் வியப்படைந்தான்.



''கடைசியில் உன்னால் தப்பித்துக்கொள்ள முடியவில்லை போலிருக்கிறதே'' என்றான் அவன்.

''அதுமட்டுமல்ல. என் அம்மாவையும் வேலை செய்ய வைத்துவிட்டார்களே'' என்றான் சிங்-சி, மனம் உடைந்தவனாய். ''நாசமாகப் போக! ஹாங்கோவைக் காப்பதற்கு அகதிகளை அடிமைகளைப்போல வேலை வாங்கிச், சாகடிக்க வேண்டுமா?'' என்று கசத்துப்போய் சொன்னான்.

''உன்னை அகதியாக இருக்கச் சொன்னது யார்? நீ ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறாய். ஏதோ முடிந்த மட்டும் உயிரையும், உன் உதவியையுந்தான் கேட்கிறார்கள்'' என்று கெங்-ஸெங் ஏளனமாகச் சிரித்தான். தன் இடது புறமாக உள்ள ஆட்களை விளித்து, ''நாலு மூட்டைகளை இறக்குங்கள். சமமாக வைத்து அவற்றைக் கயிற்றால் கட்டுங்கள்'' என உத்தரவிட்டான். பெருமூச்சு இழுத்து, ''சிங்-சி இந்த இடத்தைப் பார். சுத்த மோசம். புதிதாக வந்திருக்கும் ஆட்களுக்கோ இந்த வேலையை எப்படிச் செய்வதென்றே தெரியவில்லை. அவர்களால் துளிக்கூட நகர முடியவில்லையே!'' என்றதும் சபித்துக்கொண்டே நகர்ந்தான்.

வாங் சிங்-சி சுற்றுப்புறத்தை நோக்கினான். முதலில் வந்த பதினைந்துபேர் அடங்கிய குழுவில் ஒருவனாக வேலை செய்த வாங்கைக் காணவில்லை. ஆனால் அவன் அணைக்கரையில் செத்திருக்க முடியாது. அப்புறம் லியாங் பாங்-மிங், சு அஹ்-ஸான், லி தா-மின், மோ லாவோ-வு இவர்கள் ஒவ்வொருவராக மறைந்து போயினர்.

திடுமெனச் சோமக்கலங்கள் கரைப்பக்கம் ஒலித்தன. அவற்றைத் தொடர்ந்து வீளைகள் காது புளிக்கக் கேட்டன.

''இன்னுமொரு நெருக்கடி போலும்'' என்று லீ தன் வேலையை நிறுத்திச் சுற்றுமுற்றும் கவனித்தான்.

ஒலிபெருக்கி அறிவித்தது: 'ஆறாவது பிரிவு கவனிக்கவும். உதவிக்கு எழுப்பியிருந்த கரை சரிந்துவிட்டது.'

எல்லோரும் பரபரப்புற்றுத் தம் வேலையை நிறுத்தினர். சுற்றுமுற்றும் பார்த்து விழித்தனர்.

"ஏய், வேலையை ஏன் நிறுத்துகிறீர்கள்?" என்று ஸூ கெங்-ஸெங் அவர்களை அதட்டினான். "இந்தப் பக்கம் ஏதாவது உடைப்பு இருக்கிறதா கவனியுங்கள். உடைப்பு கண்டால் நாம் எல்லாம் சுவாஹாதான்!" என்றான்.

"அப்புறம் என்ன? இப்பொழுதோ, இன்னும் சற்று நேரத்திலோ நாமெல்லாம் பலியாக வேண்டியதுதான்" என்று வேலை செய்வோரில் ஒருவன் கடுஞ்சினத்துடன் முணுமுணுத்தான். "இதைவிட நாம் எல்லோருமே ஒன்றாக மூழ்கி இறந்து போகலாம்" என்றான்.

ஒலிபெருக்கி மீண்டும் ஊளையிட்டது: 'ஐந்தாவது பிரிவு - ஏழாவது பிரிவு- எச்சரிக்கை — ஆறாவது பிரிவு ஆட்கள் வேலை செய்யும் இடத்திற்கு மடமடவென்று மணல் மூட்டைகளை எடுத்துச் செல்லுங்கள். ஆறாம் பிரிவில் வேலை செய்யும் வீரர்கள் வெள்ள நீர் எதுக்கி வருவதைத் தடுக்கக் கைகோத்து மனித அரண்களென நிற்கின்றனர் — நாலாவது பிரிவு, எட்டாவது பிரிவு — தயாராக இருங்கள். ஐந்து ஏழு பிரிவுகளுக்கு மணல் மூட்டைகளை எடுத்துப் போங்கள், சடுதியில்—ஆறாவது பிரிவு வேலை செய்யுமிடத்தில் கரை அடித்துக் கொண்டு போய்விட்டது.'

"அவர்கள் கண்கள்தாம் அழியாவோ? இந்தத் தடவை எத்தனைப் பேர் பலியோ?" என்று லீ, மரக்கட்டையை முட்டுக்கொடுத்துக் கட்டியபடிக் காறித் துப்பினான்.

உடனடி அபாயத்துக்கான அறிகுறியேதுமின்றி ஒன்பதாவது பிரிவில் அமரிக்கையாக வேலை நடந்து கொண்டிருந்தது. து - பவோ அங்கே வந்து சிங் - சியின் முதுகில் தட்டினான்.

"எப்படி உடம்பெல்லாம்! ஏன் இன்னும் இரண்டுநாள் ஓய்வாக இருக்கிறதுதானே?" என்று கேட்டான்.

"என்னைத்தான் இங்கே தள்ளி வந்து விட்டார்களே."

"நீ வேலைக்கு வரும்போதெல்லாம் ஏதாவது கஷ்டத்தில் மாட்டிக் கொள்கிறாய். தம்பி, இன்று நிலைமை சற்று



ஆபத்துதான். என்ன நடக்குமென்று சொல்ல முடியாது. பிரதான அணைக்கரை இன்றிரவே சரியலாம்" என்றதும் தன் பேச்சைத் திடுமென மாற்றிவிட்டான் து - பாவோ. "என்ன சிங் - சி, என் அம்மாவைப் பார்த்து, நான் நலமாக இருக்கிறேன் என்பதைத் தெரிவித்தாயா?" என்று கேட்டான்.

என்ன பேசுவதென்று சிங் - சிக்குப் புரியவில்லை. ஆனால் அச்சமயம் ஸூ கெங் - ஸெங் அங்கு வந்து து- பவோவை மணல் மூட்டைகளைத் தூக்கச் சொன்னான்.

"அப்புறம் பார்க்கிறேன்!" என்று து- பவோ கையை ஆட்டிவிட்டுக் கிளம்பினான்.

ஏழாவது பிரிவினர் வேலை செய்யும் இடத்தில் கரை வலி விழுந்து வரும் செய்தி பரவவே, அணைக்கரையில் மறுபடி ஒரு பரபரப்பு மூண்டது. இரைப்பு வாங்க ஆட்கள் மணல் மூட்டைகளைச் சுமந்து ஓடினர். அவர்கள் உடலிலிருந்து வியர்வை ஆறாகப் பெருகியது; மரணபயம் முகத்தில் எழுதி ஒட்டப் பட்டிருந்தது. மேலும் சிப்பாய்கள் வந்து மிரட்டினர் வேலை வாங்க. ஆற்று வெள்ளம் அதன் இலயத்திலேயே விசையாக ஓடியது. கரைமீது மோதி அழுக்கையும், சில சமயம் மனித உடல்களையும் வீசி எறிந்து நுரைத்துப் பொங்கியது.

திடுமென வெடியோசை கேட்டது. தொலைவில் ஒரே குழப்பமான கூச்சல். மறுபடியும் ஒரு வெடி. ஒன்பதாவது பிரிவில் இருந்த ஆயுதபாணிகளான சிப்பாய்களும் தங்கள் துப்பாக்கிகளைச் சரிப்படுத்தித் தயாராக நின்றனர். சற்றைக்கெல்லாம் எட்டாம் பிரிவிலிருந்து ஏழெட்டுப் பேர் பயத்தால் கண்கள் பிதுங்கிட, மூச்சு வாங்க, தலை தெறிக்க ஓடிவந்தனர். அவர்களைச் சிப்பாய்கள் சூழ்ந்துகொண்டு கைது செய்து அப்பால் இட்டுச் சென்றனர். தோன்றியது போலவே சட்டெனக் கலவரம் அடங்கிவிட்டது.

உடனேயே ஸூ கெங் - ஸெங் முகம் வாடி அந்தப் பக்கம் வந்தான். சிங் - சியை விளித்து, "ஏழாம் பிரிவில் உடைப்புக் கண்டிருக்கிறது. ஆட்கள் நீருள் மூழ்க மறுத்தனர். சிப்

பாய்கள் இரண்டு ஆட்களை ஓடும் ஆற்றில் தள்ளிவிட்டனர். இதைப் பார்த்ததும் மற்றவர்களுக்கு ஆத்திரம் மூண்டு விட்டது. சிப்பாய்களில் ஒருத்தனைப் பதிலுக்கு ஆற்றில் தள்ளினர். சண்டையாக மாறிவிட்டது. காவல் சிப்பாய்கள் சுடத் தொடங்கினர். இரண்டு ஆட்கள் சுட்டுக் கொல்லப் பட்டனர். ஐந்து பேருக்குப் படுகாயம். இப்போதைக்கு இந்தக் கலவரத்தை ஒடுக்கி விட்டனர் —'' என்றான்.

''ஆறாம் பிரிவில் எந்த மாதிரி இருக்கிறது நிலைமை?'' என்றான் சிங் - சி.

''அது எனக்குத் தெரியாது. அங்கே யாருமே வரக் கூடாதென உத்தரவிட்டிருக்கிறார்கள். இன்று நிலைமை எந்தப் பகுதியிலும் சற்று மோசமாகத்தான் இருக்கிறது. இன்னும் காற்று விசையாக வீசினாலோ, வெள்ளத்தின் மட்டம் உயர்ந்தாலோ சங்குங் அணைக்கரைக்கு ஆபத்து தான். அது தாக்குப் பிடிக்காது. ஆட்கள் போதவில்லை. இன்றே பிடித்து ஹாங்கோ அரசாங்கம் நகரமக்களையும் இந்த வேலைக்கு அழைத்துள்ளனர். பெண்களை இங்கு நேராக அனுப்புவார்கள்'' என்றான் ஸூ.

''ஸூ மாமா, து- பவோவின் அம்மா ஆற்றில் விழுந்து விட்டாள்; அவளுடைய சடலம் அகப்படவில்லை. அந்தச் செய்தியை அவனிடம் எப்படி நான் வெளியிடுவது?'' என்றான் சிங் - சி.

''எனக்கும் தெரியவில்லை. நீயே எப்படியோ உடைத்துச் சொல்லிவிட வேண்டியதுதான். மிகவும் பயங்கரமான செய்திதான். எப்படி யிருந்தாலும் அவனுக்குத் தெரிந்து போகும். அன்றாடம் இப்படி ஏதாவது துக்கச் செய்தி வந்து கொண்டுதானிருக்கிறது'' என்றான் ஸூ.

அணைக்கரைக்குச் சற்றுத் தொலைவில், ஒரு மணல் குழி யருகில் ஸியு - மின், சாரிசாரியாக மணல் மூட்டைகளைத் தலையில் சுமக்கும் மனித எறும்புகளிடையே ஒருத்தியாக இருந்தாள். தன் பக்கத்தில் யார் வேலை செய்கின்றனர் என்பதைக்கூட அவள் கவனிக்கவில்லை.



''ஸியு - மின், இங்கேயா இருக்கிறாய்?'' என்று ஒரு மெல்லிய குரல் வினவியது.

அவள் நிமிர்ந்து பார்த்தாள். ஸூ அஹ் - சென் தான் இவ்வாறு பேசியவள். ஸியு - மின் 'ஆம்' என்று தலையை அசைத்தாள்.

''உன் அம்மா பாவம், அங்கே மணல் மூட்டை சுமக் கிறாளே; அவளுக்குத் தூக்கவே சக்தி இல்லை. எப்படியாவது அவளை அந்த வேலையிலிருந்து நழுவிடச் செய்ய வேண்டும்'' என்றாள் அஹ் - சென்.

''நம்மால் எப்படி முடியும்?'' என்றாள் ஸியு - மின். அம்மா எங்கு வேலை செய்கிறாள் என்பதை நோக்கக் கழுத்தை எக்கினாள்.

''எனக்குந்தான் வழி தெரியவில்லை'' என்றதும் அஹ் - சென் சாக்குப் பைக்குள் மணலை நிரப்பலானாள். "நானும் சியு - சுவும் கொஞ்சம் காசு சம்பாதித்துக் கொண்டு இந்த முகாமை விட்டுத் தப்பியோட வேண்டுமென முதலில் திட்டம் போட்டோம்'' என்றாள்.

''ஆனால் நம்மைச் சுற்றிலும் தண்ணீர் இருக்கிறதே! எந்த இடத்துக்குப் போவது? மேலும், அகதிகள் வெளியே செல்வதையும்தான் தடுத்துவிட்டனரே'' என்றாள் ஸியு - மின், அழமாட்டாத குறையாய். ''இப்படி எத்தனை நாள் கஷ்டப் படவேண்டியிருக்குமோ?'' என்றாள்.

''அதிகாரியிடம் கேளேன், உன் அம்மா செய்யும் இடத் திலேயே உனக்கும் வேலை தரச் சொல்லி. ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களை ஒரே இடத்தில் சேர்ந்து வேலை செய்ய அனுமதிக்கிறார்களாமே?'' என்றாள் அஹ் - சென்.

ஸியு - மின் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

''அந்த மேற்பார்வை பார்க்கும் அதிகாரி நல்ல மனுஷ்ய னல்ல'' என்றாள்.

'' எவன்தான் நல்லவன்? பெண்கள் என்றதுமே அவர்களுடைய மனம் மாசடைகிறது'' — இதை அஹ்-சென் துளியேனும் கலக்கமின்றிக் கூறினுள். '' இளமையான பெண்களைப் பார்த்துவிட்டால் அவர்கள் பின்னுலேயே திரிகின்றனர். அந்த அதிகாரி எப்பேர்ப்பட்டவன் என்பது எனக்குத் தெரியும். சியு-சுவும் நானும் அவனுக்கு எங்களை அர்ப்பணம் செய்துகொண்ட பிறகுதான் எங்கள் இஷ்டம் போல் வெளியே போக அனுமதித்தான்'' என்ருள். ஸியு மின் திடுக்கிட்டாள்; ஆனுல் ஒன்றும் பேசவில்லை. அஹ்-சென் பேச்சை வேறுவிதமாகத் திருப்பினுள். ''சிங்-சி என்ன செய்கிருன்?'' என்ருள்.

'' அணைக்கரையில் வேலை செய்கிருர்'' என்று சொல்லும்போது ஸியு-மின்னின் கண்களிலிருந்து நீர் தாடைமீது வழிந்து கீழே மணலில் விழுந்தது. அஹ்-சென்னுடன் பேச்சு வைத்துக் கொள்ளவே அவளுக்கு வெறுப்பாக இருந்தது.

*　　　*　　　*　　　*

அகதிகளின் முகாமில் அஹ்-சுயென் தனியாகச் சாமான் படுக்கைகளுக்குக் காவலாகத் தங்கியிருந்தாள். சிங்-சியையும் ஸியு-மின்னையும் கட்டாயப்படுத்தி வேலைக்கு இட்டுச் சென்றபோது அவள் அழுதுவிட்டாள். அதை அடக்கிக்கொண்டு இப்போது அவள் பாய்மீது தனியே உட்கார்ந்திருந்தாள். தங்களுடைய நிலையைக் குறித்து அவள் எதுவும் சிந்திக்க விரும்பவில்லை. ஏனெனில் பலவிதமான பயங்கரச் செய்திகள் அந்த முகாமில் உலவின. அவற்றின் விளைவாக அம்மா, அண்ணன், ஸியு-மின் இவர்கள் செத்துப் போய் விடுவார்கள் என்ற திகில் அவளை அலைக்கத் தொடங்கியது. எனவே, ஸி லிங்கில் தான் ஒரு சமயம் நன்ருக வாழ்ந்தது, பள்ளிக்குச் சென்றது, வெள்ளம் வருவதற்கு முன் சந்தோஷமாக இருந்தது, இதையெல்லாம் நினைத்துப் பார்த்துக் கொண்டாள்.

அஹ்-சுயென் அப்படி நினைவில் ஆழ்ந்திருந்தபோது சீருடை அணிந்த ஒருவன், அவள் எதிரே வந்து நின்ருன். அவனைக் கண்டதும் அவள் பயத்தினுல் துள்ளினுள். அந்த



மனிதன் அவளைப் பார்த்து முறுவலித்து மெதுவாகவே, '' என்னுடன் வா...'' என்ருன்.

அவள் அவனை ஒன்றுமே கேட்கவில்லை. ராணுவ உடுப்பு அணிந்த ஆட்களுக்கு அடங்கிச் செல்ல வேண்டுமென்ற பேதைமை பெண்கள் இரத்தத்தில் ஊறியிருந்ததால் அவள் இயந்திரத்தால் இயங்குவது போல் அறையைவிட்டு அவன் பின்னுலேயே சென்ருள். இடிந்த சுவரைத் தாண்டி முகாம் அலுவலகத்தை நோக்கி இருவரும் நடந்தனர். கடைசியில் நான்கு கட்டில்கள் போடப்பட்ட ஓர் அறைக்குள் நுழைந்தனர். எதற்காக அவன் தன்னை அங்கு அழைத்துச் செல்கிருன் என்பது அவளுக்கு விளங்கவில்லை.

அங்கு வேறு யாருமே இல்லை. அந்த ஆள் அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்தான். அவளுக்கு ஒரே திகில் மூண்டது. அவள் வாயைத் திறப்பதற்குள் அவன் அவளைத் தன் இருப்பு அணைப்பிற்குள் அழுத்திக்கொண்டு அவள் மென்மையான உடலைப் படுக்கையில் கிடத்திப் பாழ் பண்ணினுன். அச்சிறுமிக்குத் திராணியே போய்விட்டது.

பாய்மீது உணர்வற்றுக் கிடந்தாள் அஹ்-சுயென். எப்படித்தான் அந்த இடத்திலிருந்து அவள் திரும்பி வந்தாளோ! உதவிக்கு ஒருவரை அழைக்கவும் அவளுக்குத் துணிவில்லை. முகாமில் அப்போது இராச் சாப்பாட்டு வேளை. அவள் எழுந்திருக்கவே இல்லை. பக்கத்திலிருந்த ஒரு மாது அவளை மெல்ல அழைத்துச் சென்று ஒரு குவளையில் அரிசிக் கஞ்சியை வாங்கித் தந்தாள். தன் இடத்திற்கே அவள் மௌனமாகத் திரும்பி வந்தாள். அவள் கண்களில் வெறிச்சிட்ட பார்வை. பலமணி கடந்தும் அவள் குடும்பத்தில் யாரும் திரும்பிவரவில்லை. இரவு நெருங்கநெருங்க அவளுக்கு பீதி அதிகரித்தது. முகாமை விட்டு வெளியே வந்து தம்மவர் திரும்புகின்றனரா என்று காத்துக் கிடந்தாள்.

வானத்தில் ஒரே மப்பு மூட்டம். மழையும் விடாது பெய்து கொண்டிருந்தது. ஆற்றில் வெள்ளம் புதிய அளவை முன்பே எட்டியிருந்தது. நகரெங்கிலும், தெருக்களில்,

சந்துகளில் மக்கள் திரளாகக் கூடி வானம் சினந்து வருவதைக் கண்டு அதனைச் சபித்தனர்.

தெப்பம்போல் நனைந்தும் அஹ்-சுயென், தன் அன்னை, ஸியு - மின் இவர்கள் வருகையை எதிர்நோக்கி நின்ருள். இருளூடே கண்ணைச் செலுத்திப் போவோர் வருவோர் முகத்தைக் கூர்ந்து கவனித்தாள். பெரும் பாரலாக மழை கொட்டியது. உடைகளை நன்ருகப் போர்த்துக்கொண்டு மக்கள் தம் இடம் நோக்கி விரைந்து கொண்டிருந்தனர். தெருக்கோடியில் ஒரு சிறுமி நிற்பதை அவர்கள் ஏன் கவனிக்கப் போகின்றனர்! நடுநிசி வேளை. மழை சற்று ஓய்ந்தது. நடைபாதையிலேயே அஹ்-சுயென் சுருட்டிப் படுத்துக்கொண்டாள். தன் உடையும் கூந்தலும் ஒரே ஈரம் என்பதைக்கூட அவள் உணரவில்லை. மயக்கமுற்ற அவள் மனத்துள் சிதறுண்ட பயங்கரமான நினைவுகள் வந்து போயின. அவள் தலையைத் தூக்கி மழைத்திரையுள் துருவிப் பார்த்தாள். முகாமிற்குத் திரும்பவேண்டுமென்ற எண்ணந்தான். ஆனல் தனியாகத் திரும்புவதற்குப் பயமாக இருந்தது. உடலெங்கும் ஒரே வலி; அவளால் நகரக்கூட முடியவில்லை. விலவிலத்துப் போயிருந்தன, கையும் காலும். முழந்தாளைப் பிடித்துக்கொண்டு அதன் இடையே தன் முகத்தைப் புதைத்து உட்கார்ந்து விட்டாள்.

அப்போது அவள் கால்மீது யாரோ இடறியது தெரிந்தது. நிமிர்ந்து யார் என்று பார்ப்பதற்குக்கூட அவளுக்குத் திராணி இல்லை.

''யார், அஹ்-சுயென்ஞ ?'' என்றது ஒரு குரல். யாரோ தன் பெயரைச் சொல்லவே அவள் கஷ்டப்பட்டுத் தலையை நிமிர்த்தினுள்; தன்னைக் கவிந்து பார்த்தது யாரென்று புரிந்து கொண்டதும் திரும்பவும் முழங்கால்களிடையே தலையைப் புதைத்துக்கொண்டாள்.

''அஹ்-சென், என் அம்மா எங்கே ?'' என்று தீனக் குரலுடன் கேட்டாள்.

''இங்கே என்ன செய்துகொண்டிருக்கிருய் ?'' என்றதும் அஹ்-சென் அப்பேதையை மெல்லத் தொட்டாள்.



''ஏன் இப்படித் தெப்பக்கட்டையாக ஈரித்து இருக்கிறது உன் உடலும் சட்டையும்?'' என்றாள்.

''அம்மா எங்கே, ஏன் இன்னும் அவள் வரவில்லை?'' என்றாள் அஹ்-சுயென்.

''இன்று ஏராள வேலை நடக்கிறது; அவள் பொழுது விடியும்போதுதான் திரும்புவாள். ஒரு வேளை இன்னும் நேரமாகலாம். இங்கே உட்கார்ந்திருப்பானேன்? ஏன் இப்படி உன் உடலெல்லாம் குலைக்கிறது?'' என்றாள் அஹ்-சென்.

''என் அம்மாவை நான் முன்னால் பார்க்கவேண்டும்'' என்றதும் ஓவென்று அழுதாள். அஹ்-சென் அவளைச் சமாதானப்படுத்த முயன்றாள்.

''எழுந்து வா என்னோடு'' என்றாள் அஹ்-சென். அப்பெண் இப்படி அழுவதன் காரணம் அவளுக்கு விளங்கவில்லை. முகாமுக்குள் அவளை அழைத்து வந்தாள். ''குழந்தாய், இப்படி மழையில் நனைந்தால் உடம்பு எதற்காகும்?'' என்றாள்.

அப்பேதை பேசவே இல்லை. கனவில் நடப்பதுபோல், அஹ்-சென் சொன்னபிரகாரம் செய்தாள். தன் படுக்கையில் படுத்ததும் அவள் அசையாமலே சிறிது நேரம் இருந்தாள்.

''அஹ்-சுயென், வேறு உடை மாற்றிக்கொள். உலர்ந்தது ஏதாவது இருக்கிறதா?'' என்றாள் அஹ்-சென். தேடிப் பார்த்தபோது உலர்ந்த ஆடை ஒன்று கிடைத்தது. சிறுமியின் ஈர உட்சட்டையைக் களைந்தபோது அவள் பயத்தால் கத்திவிட்டாள். அப்போதுதான் அச்சிறுமிக்கு நேர்ந்த விபரீதத்தைக் கண்டாள். விம்மிய அஹ்-சுயெனை விரைந்து அணைத்துக்கொண்டாள். கட்டில் போட்டிருந்த அவ்வறையில் தனக்கு ஏற்பட்ட கேட்டை, குழறிக் குழறிக் கண்ணீரும் கம்பலையுமாக அஹ்-சுயென் சொல்ல முயன்றாள்.

அஹ்-சென் அவள் மீது ஆதுரவாகக் கவிந்து, '' அஹ்-சுயென், நான் சொல்வதைக் கேள். இந்த விஷ யத்தை உன் அம்மாவிடம் ஒருபோதும் வெளியிடவே கூடாது '' என்முள்.

'' ஏன் ? ''

'' இதைக் கேட்டால் அவள் நெஞ்சு உடைந்து இறந்து போனாலும் போவாள். இதை உள்ளுக்குள் சகித்துக் கொள் ளத்தான் வேண்டும்'' என்முள் அஹ்-சென்.

சிலகணம் அஹ்-சுயென் வாளாயிருந்தாள். பிறகு மெல்லவே, '' எனக்குப் புரிகிறது; நான் சொல்ல மாட் டேன் '' என்முள்.

'' நன்ருகத் தூங்கு, குழந்தே ! நாளைக்கு வந்து பார்க்கிறேன் '' என்றதும் அஹ்-சுயென்மீது மெல்லிய போர்வையைப் பிரித்துப் போட்டாள். கொதிகொதி யென்று அச்சிறுமியின் உடம்பு காய்ந்தது. நெற்றிக்கட்டும் கொதிப்படைந்திருந்தது.

* * * *

அணைக்கரையில் எரிந்த விளக்குகளில் பல பெரு மழை யினுல் அணைந்தே போயின. ஆற்று நீர் நுரைத்துப் பொங்கிக் கீழ்த்திசை நோக்கிப் பெருகியோடியது. மேற் பார்வையாளரின் கொடுமையாலும், கடினமான உத்தரவுக ளாலும் வேலை செய்யும் ஆட்கள் திடம் குன்றலாயினர். களைப்பாறச் சற்றுநேரம்கூட உட்காரவிடாமல் அதட்டிக் கிளப்பி வேலை வாங்கினர் அவர்களை.

இதனுல் வேலையாட்கள் ஒரு யுக்தி செய்தனர். ஒருவன் தூங்கச் செல்லும்போது, வேறு இருவர், மேற்பார்வை அதிகாரிகள் வருகின்றனரா என வேவு பார்க்கத் தொடங் கினர். இதனுல் சிலர் சற்று நிம்மதியுடன் தலையைச் சாய்க்க முடிந்தது. மணல் மூட்டைகள் ஓரமாகவும், மரத்துண்டு கள் இடுக்கிலும் கண்ணயர்ந்தனர், பாவம். ஆனுல் அந்த ஓய்வு எந்த மூலைக்கு ?



லி, இப்போது பதினேழாவது காங்கியின் ஒரு பிரிவின் குழுத்தலைவனுக உயர்த்தப்பட்டிருந்தபோதிலும், தனக்கே இயல்பான வேலைக் குறைப்பு வழிகளைக் கையாண்டான். அவன் தொடக்கத்திலேயே இந்த வெள்ளக் கட்டுப்பாட்டு வேலைக்கு வந்து, பழகிப்போய் விட்டதால், மிகச் சாமர்த்திய மாக நடந்து கொண்டதாலேயே இதுவரைத் தப்பித்துக் கொண்டு வந்தான். அநாவசியமாக எந்தச் சிக்கலிலும் மாட்டிக் கொள்ளாமல் தந்திரமாக வேலை செய்துவந்தான். மேற்பார்வை அதிகாரிகள் திரும்பியதுமே பழையபடி வேலையை ஆறப்போட்டு விடுவான். தன் கீழ் வேலைசெய்ப வர்கள்பால் அவனுக்கு அநுதாபம் உண்டு. அவர்களது முணுமுணுப்பை அடக்க அவன் ஏதும் செய்யவில்லை. மாருக அதை அவன் அநுபவித்து ரசித்தான். அப்படி ஒரு சம யம் இருந்தபோது காம்யூனிஸ்ட்டு அதிகாரியிடம் தற்செய லாக மாட்டிக் கொண்டான்; துப்பாக்கியின் பிடியால் அவன் தோளைத் தாக்கி இடித்ததால் எலும்புகூட முறிந்து விட்டது. அவன் வலிதாளாமல் கூவியதைக் கேட்டு ஸு கெங்-ஸெங் ஓடிவந்தான். கோபம் கொண்ட அந்த அதிகாரியைத் தணிவிக்க அவன் லியை அடித்து, அவ னைச் சேர்ந்தவர்களை உதைத்து, விஷயம் அதிகத்திற்கு முற்றவிடாமல் நிறுத்திவிட்டான். ஆனுல் வேலையாட்கள் மட்டும் பொருமிக்கொண்டே இருந்தனர். பாழும் அணைக் கரை சரிந்தால், இந்தக் காம்யூனிஸ்ட்டுக்களுடன் தாமும் செத்தொழியலாமே என்று விதியை நொந்து சபித்தனர்.

சோனைமாரி நள்ளிரவுக்குமேல் நின்றது. ஆனுல் அந்த மழையினுல் வெள்ள மட்டம் உயர்ந்துவிடவில்லை. மாருக, நான்கு சென்டி மீட்டர் இறங்கியிருப்பதாகவும், ஆற்றின் விசையும் குறைந்திருப்பதாகவும் தெரிந்தது.

''இதென்ன அதிசயம்!'' என்று ஸு சற்று மூச்சுவிட ஓய்வு கொண்டபோது கூறினுன். இடைவிடாமல் நாற்பத் தெட்டு மணி காலம் வேலை செய்திருந்தான் அவன். நான்கு மணி காலமே தூங்கியிருப்பான். ''தண்ணீர் மட்டம் ஒரு எழெட்டு சென்டிமீட்டர் ஏறும் என்றல்லவா எதிர்பார்த் தேன்'' என்ருன்.

''ஆற்றில் மேல்பகுதிகளில் மழையே பெய்யவில்லை போலும். இங்கே மழை பெய்தலால், கீழ்ப்புறமே சற்று மட்டம் உயர்ந்திருக்கும்'' என்றான் லி.

ஸு கெங்-ஸெங் தன் ஆட்களைப் பார்த்து, தான் சற்று கண்ணயரப் போவதாகக் கூறினான். உடனே லியும் மற்றும் சிலரும் அவனைப் பின்பற்றினர். பிரிவுத் தலைவர்களான சுவும் சென்னும் பதினேழாம், ஒன்பதாம் காங்கிகளுக்கான காவல் வேலையை மேற்கொண்டனர். வாங்-சிங்-சியையும் தூ-பவோவையும் நள்ளிரவு தொடங்கி விடிகாலைவரை பாராக் கொடுக்கும் வேலையில் நிறுத்தினர். எனவே, அவர்கள் தூங்குவதற்கான முறை வருவதற்குப் பல மணி காலம் பாக்கி யிருந்தது.

''சிங்-சியின்மீது உராய்ந்தபடி தூ-பவோ மெதுவாகவே, ''ஆகாயமே, நாளைக்கு இன்னும் மோசமாக்கி விடாதே நிலைமையை; நீ இப்படிச் செய்தால் எங்கள் தூக்கத்தில் மண்தான்'' என்றான்.

''மேற்பார்வை பார்க்கும் சிப்பாய்கள் யாவரும் போய் விட்டனர். இதுதான் சமயம், ஒரு தூக்கம் போட'' என்றான் சென், தரையில் அமர்ந்து.

''நீ தூங்கு; நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று தூ-பவோ கூறிக் கொட்டாவி விட்டான்.

செங் குவாங் செங்கும் கொட்டாவி விட்டாலும், ''அந்த அளவுக்கு நான் களைத்து விடவில்லை. தூக்கமே வரவில்லை எனக்கு. ஒரு பெண்பிள்ளை பக்கத்தில் இருந்தால் போதும்'' என்றான்.

''வேலைக்கு டிமிக்கி தரவா பார்க்கிறாய்? நெருப்புடன் சகவாசம், அப்பனே—'' என்று ஒரு குரல் குறுக்கிட்டுப் பேசியது.

சென் குவாங்-செங் எச்சில் துப்பிவிட்டு, சோம்பலுடன் எழுந்து நின்றான். சிங்-சி ஏதும் பேசவில்லை. அவன் தாய் இறந்துவிட்ட செய்தியை தூ-பவோவுக்கு எப்படித் தெரிவிப்பது என்ற சிந்தனையிலேயே அவன் மனம் லயித்திருந்தது.



தூ-பவோவை அப்புறமாக அழைத்துச் சென்று, ''தூ-பவோ ...உன் தாய்...'' என்று எடுத்தான்.

''அவள் எப்படி இருக்கிறாள்? நீ ஒன்றும் சொல்லவே இல்லையே'' என்றான் தூ-பவோ.

''தூ-பவோ...உன் தாய் இறந்து விட்டாளடா'' என்றான் சிங்-சி மெதுவாக.

''என்ன! ஐயோ கடவுளே. என்ன, என் தாய் போய் விட்டாளா?'' என்று அலறினான் தூ-பவோ.

''இந்தச் செய்தியை எப்படி உன்னிடம் எட்ட விடுவது என்பது தெரியவில்லை எனக்கு'' என்றான் சிங்-சி. ''எத்தனை நாள் இதை உன்னிடம் கூறாமல் மறைப்பது? கூறிவிட்டேன்'' என்றான்.

''இல்லையடா, என்னால் நம்ப முடியவில்லை—'' என்று தூ-பவோ கோவெனக் கதறித் தன் முகத்தைக் கைக்குள் பொத்திக் கொண்டான்.

''தூ-பவோ, நீ முகாமிற்கு வந்து போனாயே, நீ சென்றவுடன் என் தாய் வந்தாள். அவள்தான் இந்தச் செய்தியை எனக்குச் சொன்னாள். உன்னைப் பார்த்து இதை—'' என்று இழுத்தான் சிங்-சி, வேதனையுடன்.

தூ-பவோ கல்லெனச் சமைந்தான். முகத்தை அவன் திரும்பத் தூக்கியபோது அதில் தீவிரம் தென்பட்டது. அவன் ஆற்றையே வெறித்து நோக்கினான். கைகளை முஷ்டியிட்டு, ''நல்லது, அவளுடைய கஷ்டத்தையெல்லாம் அகற்றி விட்டான் ஆண்டவன். அவள் இந்த வாழ்வில் கஷ்டப்பட்டது போதும்; இனிமேல் அவளுக்கு துன்பமே இல்லையடா'' என்றான்.

தூ-பவோவுக்கு என்ன ஆறுதல் மொழி கூறுவதென்று சிங்-சிக்குத் தெரியவில்லை. தரைமீதே அவனுடைய கண்கள் பதிந்து விட்டன.

கீழ்த்திசையில் இருண்ட மேகங்களுக்கிடையே மங்கலாக வைகறையொளி மெல்லப் பரவுவது தெரிந்தது. வங்கியங்கள் இயம்பின.

''தூ-பவோ, நாம் சற்று இளைப்பாறுவதற்கு நேரம் வந்து விட்டது. எங்கேயாவது சற்றுப் படுத்துக் கண்ணயர்வோம்'' என்றான் பிங்-சி.

வாங் தூ-பவோ மெதுவாக எழுந்தான். இருவரும் தள்ளாடிக்கொண்டே குடிசைப் பக்கம் சென்றனர்.

ஸு கெங்-ஸெங், மூன்று மணி காலம் உறங்கியதும் விழித்துக் கோண்டான். அவனுக்குத் தலை கனத்தது. அவன் கண் திறந்ததும், அதே பாழும் ஆற்றின் முகத்தில் தான் விழித்தான்.

* * * *

ஆகஸ்டு 19-ஆம் நாள் காலைப் பொழுது நல்லபடியாகவும் அமைதியுடனும் புலர்ந்தது. வெயிலும் முகில் நிழலும் மாறி மாறிக் கண்ணாம்பூச்சியாடி மண்ணகத்தின் மீது விந்தைக் கோலம் புனையும் அழகிய தினங்களில் ஒன்று அது. ஆற்றின் போக்கும் சாந்தமாகவே இருந்தது. 29·73 மீட்டர் அளவுக்கு உயர்ந்திருந்த அதன் நீர் மட்டம் பதினெட்டு சென்டி மீட்டர் முன்னாளே இறங்கி விட்டது. அணைக் கரையோரமாக அடங்கியோடியது அது! அலுத்துப் போன வேலையாட்களுக்குச் சிறிது ஓய்வையும் நிம்மதியையும் தந்தது.

''கடவுள் தயவால் வானிலை இப்படியே இருந்து வெள்ளமும் வற்றிக் கொண்டே வரவேண்டும்'' என்று கெங்-ஸெங் கூறிவிட்டு, துணைக் கரையில் நடந்த வேலையைப் பார்த்து வரக் கிளம்பினான். ஆனால் அவன் வேண்டுகோளைக் கடவுள் ஏற்கவில்லை.

வான்ஸீன், இசாங், ஷாஸி பகுதிகளில் நல்ல மழை பெய்திருப்பதாக வெள்ளத் தடுப்புக் கிளைஅலுவலகத்திலிருந்து ஒரு செய்தி வந்தது. அதனால் 'துணைக்கரையை



வலுப்படுத்தும் வேலைக்கு ஆட்களை ஏவ உத்தரவிட்டனர். மணல் மூட்டை, மரப்பலகை மறைவுகளில் வேலை செய்து துவண்டு போய்த் தூங்கச் சென்ற ஆட்களின் நெஞ்சம் திடுக்கிட்டது. ஹாங்கோவில் கிடைத்த மரத் துண்டுகளையெல்லாம் கொண்டு நிறுத்தியாயிற்று. சாரி சாரியாகப் பெண்கள் அவற்றை துணைக்கரைப்பக்கம் எடுத்துச் சென்றனர். அன்று குறிப்பிடத் தகுந்த நிகழ்ச்சி ஒன்றும் நடக்கவில்லை. பன்னிரண்டாவது பிரிவில்தான் ஒரு சிறு உடைப்பு கண்டது; அதை உடனேயே சரிப்படுத்தி விட்டனர். ஆனால் இரவு மீண்டும் ஆற்றுநீர் மட்டம் ஏறத் தொடங்கியது. ஜனங்கள் அதைச் சபித்தனர். ''இந்த இயாங்க்ட்ஸிக்கு எப்போதும் இதுதான் வேலை; ஓயாதஜுரம் போல ஏறி இறங்குவதுதான் தொழில்'' என்று திட்டினர்.

* * * *

சிங்-சியை யாரோ உலுக்கி எழுப்பி விட்டான். அவனுக்கு அது வேலை ஓய்வு நேரம். ஆகவே தன் தூக்கத்தைக் கலைத்த ஆள்மீது அவன் சீறி விழுந்தான். ''இன்னும் பொழுது விடியவில்லை. அது வரை நான் தூங்கலாமே'' என்றான்.

''சிங்-சி...நான்தான்'' என்று ஸியு-மின் குலைப்புடன் கூறினாள்.

கண்ணைத் திறந்தான். ஸியு-மின் என்று தெரிந்ததும் அலறிப் போட்டு எழுந்தான்.

''ஸியு-மின்... நீயா! யாருக்கு என்ன? இங்கே ஏன் வந்தாய்?'' என்று கவலையுடன் கேட்டான். ஸியு-மின்னின் கண்கள் சிவந்து, அழுகையால் ஊதிக் கிடந்தன. ''என்ன நடந்தது, ஸியு-மின்?'' என்றான்.

''எனக்குப் பயமாக இருக்கிறது சொல்வதற்கே...சிங்-சி, தங்கச்சி...'' என்று இழுத்தாள் ஸியு-மின்.

''அஹ் சுயெனுக்கு என்ன?'' என்றான் குரலில் படபடப்பு தோன்ற.

''அவள் போய்விட்டாள்! செத்துப் போய் விட்டாள்'' என்று கூறும்போதே ஸியு-மின்னின் குரல் மங்கித் தேய்ந்தது.

''ஐயோ தெய்வமே!'' என்று உரக்கக் கதறினான் ஸிங்-ஸி.

அஹ்-சென் மூலம் கேட்ட தகவலை ஸியு-மின் சொல்லி, ''அம்மா இதைக் கேட்டால் இதயம் வெடித்து சாவாளோ என்று அஹ்-சுயென் பயந்து அவளிடம் இதைக் கூற வில்லை'' என்றாள்.

''அம்மா... அம்மா எப்படி இருக்கிறாள்?'' என்று வெறிபிடித்தவன் போல் ஸிங்-ஸி வினவினான்.

''பதினெட்டாம் பிரிவில் வேலை செய்ய என்னையும் அம்மாவையும் அனுப்பினர்.''

''உன்னையும் கூலி வேலை செய்ய ஏவினரா?'' என்றான் ஸிங்-ஸி.

''வெள்ளம் உயர்ந்த அளவு ஏறிய அன்று நானும் அம்மாவும் ஒரே மூச்சாக இருபத்து நான்கு மணி நேரமும் உழைத்தோம்; முகாமிற்கே திரும்பி வர முடியவில்லை. தங்கச்சி கடும் காய்ச்சலில் அவதிப் பட்டாள்; அவள் சன்னி கண்டு பிதற்றவும் ஆரம்பித்து விட்டாள். அம்மா அவள் பக்கத்திலேயே துயர் தாளாமல் கதறினாள். இசாங்லைச் சேர்ந்த ஒரு நர்ஸ் வந்து பார்த்தாள். அஹ்-சுயென்னுக்கு நிமோனியா ஜுரமாக இருக்கலாமென்று சொன்னாள். எங்களிடம் எட்டாயிரம் டாலர்கள் இருந்தன. அவளை ஒரு டாக்டரிடம் அழைத்துச் செல்ல நினைத்தோம். ஆனால் ஒன்பது மணி ஆகிவிடவே, மேற்பார்வையாளன் வேலைக்குப் போவதற்கு எங்களை துரிதப் படுத்தினான். அம்மாவை மட்டும் விட்டு விடும்படி அவனைக் கெஞ்சிக் கேட்டேன். அதற்காக என்னை அவன் இரண்டு தடவை அடித்தான். அன்று முழுவதும் நாங்கள் வேலை செய்தோம். தங்கச்சியைப் போய்ப் பார்த்துவர இரவு ஒன்பது மணிக்கு மேற்பார்வை அதிகாரியிடமிருந்து அஹ்-சென் அநுமதி வாங்கிக் கொடுத்தாள். ஆனால் அம்மா பதினொரு மணி



வரைக்கும் வரவில்லை. அஹ்-சுயென் பிதற்றிக் கொண்டே இருந்தாள். அம்மா வந்தபோது, கைகளைத் தூக்கித் தூக்கி 'அம்மா அம்மா' என்று கூப்பிட்டாள்'' என்று சொல்லும்போதே ஸியு-மின்னுக்குத் தொண்டை அடைத்தது. கண்ணீர் பெருக அவள், ''அவளுக்கு மூச்சடைக்க ஆரம்பித்து விட்டது; பொழுது விடிவதற்கு முன்பே போய் விட்டாள்'' என்றாள்.

''அஹ்-சுயென்...அருமைத் தங்கச்சி'' என்று ஸிங்-ஸி கதறிக் கல்லாகச் சமைந்தான்.

''அம்மா மூர்ச்சையாகி விட்டாள். ஆனால் அஹ்-சென்னின் உதவியால் அவள் மூர்ச்சையைத் தெளிவித்தோம். ஆனால் ஒரு மணி நேரத்திற்குள் மறுபடியும் மயக்கம் போட்டு விழுந்தாள்'' என்றதும் ஸியு-மின் தேம்பித் தேம்பி அழலானாள். ஸிங்-ஸி அவளைத் தன் கைக்குள் அணைத்துக் கொண்டான்.

''இப்போது அம்மாவுக்கு எப்படி இருக்கிறது?'' என்றான். நாற்புறமும் மடக்கப்பட்ட புலிபோல் அவன் எதுவும் செய்ய முடியாமல் சீறித் துடித்தான்.

''அவளுக்குப் பிரக்ஞை வந்தது; அஹ்-சென்னும் ஸையோ மாமியும் அவளைக் கவனிக்கின்றனர். அவளுடைய நிலையைப் பார்த்தால் மோசமாகத்தான் இருக்கிறது, ஸிங்-ஸி'' என்றாள் ஸியு-மின்.

வாங்-ஸிங்கிக்குத் திக்கென்றது. அவனுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. சிறிது நேரம் மயக்குள் ஆழ்ந்தவன் போல் அவளைப் பிடித்தபடி நின்றான்.

''அஹ்-சென்னைத் துணைக்கு அழைத்துக் கொண்டுதான் உன்னைப் பார்க்க வந்தேன். அவள் வெளியே காத்துக் கொண்டிருக்கிறாள்—'' என்றாள் ஸியு-மின்.

''கடவுளே, இக்கதிக்கு வரவேண்டுமா? என் தங்கை-என் அம்மா...'' என்றதும் ஸிங்-ஸியின் உடம்பு நடுக்குற்றது. அவன் முகத்தில் பயங்கரக் களை ஆடவே ஸியு-மின் பயந்தே போய் விட்டாள்.

அஹ்-சென் குடிசையினுள் மெல்ல வந்தாள். வழக்கம் போல் ஏதாவது பயனுள்ள யோசனையைக் கூறுவதற்குத் தான். ''ஸியு-மின், அம்மாவை சிங்-சி போய்ப் பார்க்கட்டும். அவளும் அவனைப் பார்க்கட்டும். அதனால் அவளுக்குச் சற்று நிம்மதி ஏற்படலாம். அவள்...'' என்று கூறி நிறுத்தினாள்.

அவள் பேச்சை முடிப்பதற்குள் நெருக்கடியைக் காட்டும் சேமக்கலத்தின் ஓசையும், ஊதல்களின் ஒலியும் கேட்டன.

''மறுபடியும் என்ன சங்கடம்?'' என்று யாரோ கூவினார்கள், குடிசையுள்.

'சடுதி! ஆகட்டும், நடவுங்கள். துணைக்கரையை வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது!' என்று வெளியே கூச்சல் கேட்டது.

'ஒன்பதாவது பிரிவு ஆட்கள்—பதினேழாவது காங்கி ஆட்கள்—உங்கள் பகுதியில் துணைக்கரையில் உடைப்பு' என்று ஒலிபெருக்கிகள் முழங்கின.

'உடைப்பை உடனே மூடவேண்டும்' என்ற ஆக்ஞை ஒலித்தது.

''சீக்கிரம்! எழுந்து வாருங்கள்!'' என்று ஸூகெங்-ஸெங் தன் ஆட்களைத் திரட்டிக் கொண்டிருந்தான். ஆட்கள் குடிசையிலிருந்து திக்குக்கு ஒருவராக விரைந்தனர். சிங்-சிக்கு இன்னும் குழப்பம் தெளியவில்லை. அவன் செவியில் உத்தரவுக் குரல் எட்டவேயில்லை. லி கத்திக்கொண்டே அவனைக் கடந்து சென்றான். பல குரல்கள் சேர்ந்து கத்தவும், அவனைப் பல கைகள் சேர்ந்து உலுக்கவும், தன் நினைவுக்கு வந்தான்.

இதுதான் வாழ்விற்கும் சாவிற்குமான போராட்டத்தின் கடைசிக் கட்டமோ எனத் திடுமென அவனுக்குத் தோன்றியது. 'ஒருவரையொருவர் அணைத்துக்கொண்டு, ஒருவர் உடல் மற்றவர் உடலுடன் இழைய இந்த உடைப்பை எதிர்க்கும் அரண் போலாகி, ஆழ்நீரிடை மூழ்கி ஓர் முடிவைக் காண்போமோ' என்ற சங்கை எழுந்தது சிங்-சிக்கு.



தன் இனியாள் பக்கமாகத் திரும்பி, ''ஸியு-மின், நீ போய்விடு; நான் உயிருடன் திரும்பி வராது போனால், என்னை மறந்துவிடு. நீ நீடித்து வாழ வேண்டும்; உன்னைக் காத்துக்கொள்ள ஏதாவது வழியைத் தேடிக்கொள். உயிருடன் இருப்பவர் மரித்தவரைக் குறித்து நினைத்து வருந்தக்கூடாது. ஸியு-மின், தெம்பாக இரு'' என்று அவளை ஒருபுறமாக ஒதுக்கி, ''போய்விடு; எனக்கு நிறைய் வேலை இருக்கிறது'' என்றான்.

''ஓ! சிங்-சி!'' என்று ஸியு-மின், தலை முதல் கால்வரை உதறலிட அழத் தொடங்கினாள்.

''ஸியு-மின், நீ திரும்பிப் போ!''—அவள் தன்பேச்சுக்கு அடங்கிச் செல்வதற்குப் பெருங்குரல் எடுத்தான் சிங்-சி. அஹ்-சின் ஸியு-மின்னின் கையைப் பற்றிக் குடிசைக்கு வெளியே சென்றாள்.

இமைப்பொழுது சிங்-சி அதே இடத்தில் நின்றான். பிறகு உடைப்பைச் சரிப்படுத்த ஆட்கள் வேலை செய்யும் இடத்தை நோக்கி விரைந்தான்.

இதற்குள் நீரின் விசை துணைக்கரையின் ஒரு பகுதியை அரித்து விட்டது. அப்பகுதியின் மேல் ஓர் அடி உயரத்திற்கு நீர் வழிந்து ஓடியது. மண்ணைக் கணத்துக்குக் கணம் கரைத்து உடைப்பைப் பெரிதாக்கிக்கொண்டே வந்தது. அண்டைப் பகுதிகளையும் பலவீனப்படுத்திக்கொண்டே இருந்தது. குரல் கமறலிட அதிகாரிகள் கட்டளையிட்டபடி இருந்தனர்; கைகளைப் பிணைத்துக்கொண்டு, குலைந்து வந்த பகுதிகளுக்கு முதுகுகளினால் முட்டுக் கொடுக்கும்படி ஆட்களை ஏவினர். இதர ஆட்கள் இங்குமங்கும் மண்ணைச் சுமந்து உடைப்பு கண்ட இடங்களில் நிரப்பினர்.

மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையே மூண்ட இந்த மாபெரும் யுத்தத்தைக் கண்டு சிங்-சிக்கு ஆவேசம் பிறந்து விட்டது. அரும்பாடு பட்டும் தோல்வியுறும் நிலையில் முகம் வெளுத்து, செயலற்று நிற்கும் சுயாங் குவாங் ஹூவாவின் கையைப் பற்றி, ''வா, தோழனே! வீரனுக்குரிய

மரணத்தை வரிப்போம்'' என்றான் சிங்-சி. அவனை முன்னால் இழுத்து வந்து, படிப்படியாக இடிந்து இறங்கி வந்த அணைக் கரையில் புதிய அணை அமைக்க முற்பட்டவர்களுடன் வலுக் கட்டாயமாகச் சேரச் செய்தான். உடைப்பு வழியே சீறிப் பாய்ந்த வெள்ளத்தால் இரையாகி ஒரு சிலர் மாண்டால்தான் என்ன? இன்னும் சிலர் உடைப்பில் வழுக்கி விழுந்து ஒழிந்தால்தான் என்ன? மளமளவெனக் குவிந்த மணல் மூட்டைகளிடை மற்றும் சிலர் மாட்டிக்கொண்டு மாண்டால்தான் என்ன? ஆயிரமாயிரம் மக்கள் உயிர் தப்பும் பொருட்டு ஒரு சிலரை இவ்வாறு இழப்பது ஒரு பொருட்டா என்ன?

## 9

அணைக்கரைக்குச் சென்ற சிங்-சியிடமே திரும்பிப் போகக் கதறித் திமிறிய ஸியு-மின்னை எப்படியோ இழுத்துக் கொண்டு வந்து முகாமை அடைந்தாள் அஹ்-சென். முகாம் அணைக்கரை ஆகிய இரண்டு இடங்களிலுமே ஸியு-மின்னின் குடும்பத்தினர் ஆபத்துக்குட்பட்டிருந்தனர். ஆனால் அணைக் கரையிலிருந்த சிங்-சியே அனைவரிலும் அவள் நெஞ்சிற்கு நெருங்கியவன். அவன் கூறிய வெறி மொழிகளை அவள் நினைத்துப் பார்த்தாள். அவனிடமே செல்ல அலைபாய்ந்தாள்.

அஹ்-சென் வேதனையால் பதறும் அக்குமரியைத் தணிக்க, ''இதோ பார், ஸியு-மின், சிங்-சிக்கு என்ன ஆபத்து வந்துவிட்டது இப்போது? இங்கே, உன் அம்மாவின் நிலைதான் மோசம்'' என்று அவளை முகாமிற்குள் இழுக்க முயன்றாள்.

ஸியு-மின். கண்ணீர்த் தாரையில் வழிய, ''சிங்-சி எங்கே போகிறானோ, அங்கேதான் நானும் போவேன்'' என்று விசும்பினாள்.

''ஸியு-மின், நீயோ, சிங்-சியோ பக்கத்தில் இராது போனால் உன் அம்மா நிம்மதியாகச் சாகமாட்டாள். நல்லதைச் சொன்னால் அதற்குக் கட்டுப்பட மாட்டேன் என்கிறாயே'' என்று அஹ்-சென் சொன்னதும் சற்று ஓய்ந்தாள்



ஸியு-மின். சிங்-சிக்காக அவள் முகாமினுள் வர உட்பட்டாள்.

சிங்-சியின் தாய் கிழிசல் பாய்மீது நினைவு தப்பிக் கிடந்தாள். கண் பாதி திறந்தபடி, சற்றைக்கொருதரம் சிங்-சியை நாக்குழற அழைத்தாள். ஸியு-மின் அவள் பக்கம் மண்டியிட்டு, அவள் நெற்றியைத் தொட்டாள்.

''சிங்-சியைப்பற்றி என்னமாவது தெரிந்ததா? இவள் கடைசி மூச்சு பிரியும் போதாவது பக்கத்தில் வந்து நிற்பானா?'' என்றாள், லையாவோ மாமி.

ஸியு-மின் தலையசைத்தாள். அஹ்-சென் அந்த முதியவளை மெதுவாக இடித்து, சிங்-சியின் பெயரை எடுக்க வேண்டாமெனக் குறிப்பால் புலப்படுத்தினாள். ஸியு-மின் தன் அருகில் வந்து பேசுவது எங்கோ பேசுவது போலவே இருந்தது சிங்-சியின் தாய்க்கு. ஏதோ கனவிலிருந்து விழித்தது போல், அந்தக் குரல் மகனை அழைத்து வரச் சென்ற ஸியு-மின்னினுடையது என்பது அவளுக்கு ஞாபகம் வந்தது. மகன் திரும்பி வந்து விட்டானா? இதயத்தை அழுத்திய ஒரு பெரும் பாரம் விலகியது போல் உணர்வு மூண்டு அவள், கண்களைத் திறந்தாள். பார்வை பஞ்சடைந்து விட்டது. தன் மீது குனிந்திருந்த முகம் புகையால் கப்பியது போலவே இருந்தது அவளுக்கு.

''சிங்-சி...வந்துவிட்டாயா? அப்பனே, என் கிட்ட வா. உன் முகமே தெரியவில்லையே'' என்று முனகினாள் கிழவி.

அஹ்-சென், ஸியு-மின்னைத் தூண்டவே, கிழவியின் கைகளைத் தன் கையில் வைத்துக் கொண்டாள் ஸியு-மின். அவளுடைய கையைத் தடவினாள் கிழவி. தன் மகன் கை என்று எண்ணி, ''கிட்ட வா அப்பனே. அம்மா உன்னை நன்றாகப் பார்க்கட்டும்'' என்றாள்.

கிழவியின் குரல் அடங்கி வந்தது. இறந்து போகும் அவளை ஏமாற்ற விரும்பவில்லை ஸியு-மின். எனவே, குனிந்து

கிழவியின் செவியில், "அம்மா நான்தான் ஸியு-மின்" என்றாள்.

கிழவியின் குரல் மெல்ல முனகியது. "சிங்-சி : நீயும், ஸியு-மின்னும்.. இரண்டு பேரும்... மணந்து கொள்ளுங்கள்.. வாங் குடும்பம்..." அப்புறம் அவள் குரல் தேய்ந்து ஒடுங்கி விட்டது. மூச்சும் சிறுகச் சிறுகக் குறைந்து வந்தது.

அங்கே இருந்த பெண்டிர், அக்கிழவியையே மௌனத்துடன் சூழ்ந்து கொண்டு பார்த்தனர்.

மறுபடியும் அவளுக்கு மூச்சு வலுத்தது. விட்டு விட்டுப் பேசினாள்: "ரொம்பக் குளிர்... உம்...ஒரே இருட்டு"—ஒரு பெருமூச்சு வந்தது அவளுக்கு. தலை பக்கவாட்டில் தொய்ந்து விட்டது. அமைதியான இறுதித் துயில் அவளை ஆட்கொண்டது.

ஸியு-மின், மண்டியிட்டபடி அங்கேயே தம்பித்துக்கிடந்தாள். அஹ்-சென் இறந்தவளின் கைப்பிடியிலிருந்து அவளுடைய கையை மெல்லப் பிரித்தாள். அவள் இறந்ததை இன்னும் அறியாமல், "அம்மா..." என்று ஸியு-மின் பரிதாபமாக அழைத்தாள்.

"உன் அம்மா போய் விட்டாளடீ" என்று ஸயாவோ மாமி அவளைத் தொட்டு ஆசுவாசப் படுத்தினாள்.

ஸியு-மின்னின் உடல் ஆடியது. அவள் மயக்கமாகத் தரையில் விழுந்து விட்டாள்.

அரை நினைவில் தான் எங்கோ காற்றில் மிதந்து செல்வது போலவும், கீழே எங்குப் பார்த்தாலும் நீர் நிரம்பி இருப்பதுபோலவும் ஒரு மருள் தோன்றியது ஸியு-மின்னுக்கு.

* * * *

"ஸியு-மின்... ஸியு-மின்...!"

மிகவும் பரிசயமான குரல்; எங்கிருந்தோ வருவதுபோல் தோன்றியது. சிதறுண்ட பழைய நினைவுகள் அவள் மனத்துள் சிறகடித்து பறந்து வந்தன.



பகற்பொழுது வெயில் சுரீரெனக் காய்கிறது; ஸிலிங்கிலிருந்து ஓடிவந்து அலுத்துப்போன அகதிகளின் கூட்டம் ஓல்று ஷாஸி அருகில் நிழலின்கீழ் அமர்ந்துள்ளனர்.

"அம்மா சொன்னாள். நாம் இருவரும் மணம் செய்து கொள்ள வாக்குத் தத்தமானவர்கள் என்று...இனி நீ என் இனியன். நாம் இருவரும் எந்நாளும் ஒன்றாகவே வாழ்வோம். வெள்ளம் வற்றியதும், நாம் மணந்து கொள்வோம்." —சிங்-சியின் இவ்வுறுதியைக் கேட்டு நாணத்தால் தலையைத் தாழ்த்திப் பேசாச்சித்திரமாகச் சமைகின்றாள் ஸியு-மின்.

"ஸியு-மின்! உனக்கு என் அன்புப் பரிசாகத் தருவதற்கு ஒன்றும் இல்லையே! என் சொத்தில் பெரும்பகுதியை வெள்ளத்திற்குப் பறிகொடுத்து விட்டேன்..."

"நான் எந்தப் பரிசுக்கும் பொருளுக்கும் ஆசைப்படவில்லை. நாம் நம் அன்புப் பேச்சாலேயே பிணைந்திருப்பவர்கள். அது போதுமே..." என்கிறாள் ஸியு-மின்.

"ஸியு-மின்! இப்போது நீ என் நெஞ்சு நிறைந்தவள்; என் ஆருயிர் நீயே — என் அனைத்துமாவாய்" என்று சிங்-சி மெல்லச் சொல்லுகிறான்... அவள் கைகளைத் தன் கைக்குள் அணைத்துக் கொள்கிறான். இருவர் முகங்களும் இழைகின்றன. சட்டென நாணத்தால் குறுகுகிறாள் ஸியுமின். ஓடி ஒளிகிறாள்...

ஸியு-மின் அசைந்தாள்; உள்ளே வரும் கனத்த காலடிச் சப்தம் கேட்டபோது அவளுக்கு ஸ்மரணை வந்து கொண்டிருந்தது. அஹ்-சென் திரும்பிப் பார்த்தாள். ஈரம் சொட்டச் சொட்டத் தள்ளாடிவந்த சிங்-சியை தூ-பவோ பிடித்துக்கொண்டே வந்தான்.

"சிங்-சி வந்து விட்டான்!" என்று அஹ்-சென் கூவினாள்.

ஸியு-மின் தலையைத் தூக்கி பேயைக்கண்டது போல மருண்டு போய் நோக்கினாள்.

சிங்-சியின் கண்களில் ஒளியே இல்லை; அவனுடைய முகம் வெளுத்துக் கிடந்தது. தொப்பென்று பாய்மீது சாய்ந்தான்; ஸியு-மின்னை வெறித்துப் பார்த்தான். பிறகு நீட்டிக் கிடக்கும் அன்னையின் சவத்தை நோக்கினான்.

''சிங்-சி!'' என்று அலறி ஸியு-மின் அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். ஆனால் அவளை அணைத்துக் கொள்ளக் கூட அவன் அப்போது சக்தியற்று இருந்தான். அவனும், அவனைச் சேர்ந்தவர்களும் சற்று முன்புதான் கைகோத்து வெள்ளத்துடன் போராடி விட்டுப் பிழைத்து வந்திருந்தனர். அவர்கள் வெற்றி கண்டனர்; ஆனால் அது பயங்கரத் தியாகத்தினால்தான் கிட்டியது. மீண்டும் மரணத்துடன் மோதி வென்றுவிட்டான் அவன். ஆனால் அதனால் அவனது உடல் வலுவே ஒடுங்கி விட்டது. ஆயினும் பெரியதொரு காரியம் சாதித்தோமென்ற திருப்தி - அதோடு, தன் தாய் அமைதியாகத் தூங்குகிறாள் என்ற எண்ணமும் சேர்ந்து ஆறுதல் அளித்தது.

சிங்-சியின் ஈர உடைகளை ஸியு-மின் களைந்து அவனை உலர்ந்த போர்வையால் சுற்றிவிட்டாள். அஹ்-சென் அவளுக்குத் துணைபுரிந்தாள்; அவனுடைய காயங்களைத் துடைத்துக் கட்டுப் போட்டாள். பின் தூ-பவோவைப் பார்த்து, ''நான் முகாம் அதிகாரியைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிவிட்டு வருகிறேன். இவர்களை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்'' என்றாள்.

''அஹ்-சென், அவன் அம்மாவை அவன் கடைசியாக ஒருமுறை பார்க்கச் சொன்னால் என்ன?'' என்றாள் ஸயாவோ மாமி.

அஹ்-சென் ''கூடாது'' என்று தலையசைத்தாள்.

முகாம் அதிகாரிகள் மரணமுற்றவர்களுக்கு ஆற்றும் கடமைகளில் சிறிதும் அக்கறை கொள்ளாதவர்கள். அஹ்-சென் இரு மாதருடன் திரும்பி வந்தாள். சவத்தை முகாமிலிருந்து அப்புறப்படுத்துவதே அவர்கள் செய்ய



வேண்டிய வேலையாகும். இந்த வேலையில் அவர்கள் உணர்ச்சி
பற்ற மரக்கட்டைகளாய் உடனே ஈடுபடலாயினர்.

''லயாவோமாமி, நீங்கள் சற்றுத் தூங்குங்கள்... நான்
விழித்துக் கொண்டிருக்கிறேன். சிங்-சிக்கு ஒன்றும்
நேராது'' என்றாள் அஹ்-சென்.

''உனக்குத்தான் ஓய்வு தேவை. அப்புறம் வேறு வேலைக்
குப் போகவேண்டும், பாவம்'' என்றதும் அந்த முதியவள்
உட்கார்ந்து விட்டாள், காலும் கையும் உதற. எனினும் இறு
தியில் இசைந்து அவள் எழுந்து போனாள். அஹ்-சென்
லியு-மின்னின் கையைப் பற்றி, ''நான் நாளைக்கு முகாம்
அதிகாரியைப் போய்ப் பார்க்கிறேன். நீ வேலைக்கு வராமல்
இருக்க அவன் இணங்கினாலும் இணங்கலாம். உனக்கு ஓய்வு
மிகவும் தேவை; இராதுபோனால் நீயும் கீழே விழவேண்டியது
தான்'' என்றாள்.

லியு-மின், அசையாமல் அமர்ந்திருந்தாள்; பதிலே பேச
வில்லை. கடைசியில் அஹ்-சென் மோனத்தைக் கலைத்து,
''தா-பவோ, கரைப்பக்கம் நிலவரம் எப்படி? ஏதாவது
புதிய உடைப்பு ஏற்பட்டுள்ளதா?'' என்றாள்.

''உடைப்பு எற்பட்டால் மனிதர்களைப் பலி கொடுத்து
அடைத்து விடலாம்'' என்று தா-பவோ வாழ்வே கசந்துப்
போய்க் கூறியதும், ''அஹ்-சென், அந்த பயங்கரம் என்ன
வென்பது உனக்குத் தெரியாது'' என்றான்.

அவள், அவன் கையைப் பிடித்து, 'ஷ்... தா-பவோ,
மெதுவாகப் பேசு; எல்லோரும் தூங்குகிறார்கள். என் பக்கத்
தில் வந்து உட்கார்; அதைப் பற்றிச் சொல்லு. எத்தனை
பேர் உடைப்புப் பக்கம் இருந்தனர்?'' என்றாள்.

''ஓ, அதுவா, சரியாகத் தெரியாது. ஒன்பதாம் பிரிவில்
இருந்தவர்கள் அத்தனைபேரும், எட்டாம் பிரிவிலிருந்து
சிலரும், பத்தாவதிலிருந்து சில பேரும்.... எல்லாம் ஒரே
குழப்பம்... மேற்பார்வை அதிகாரிகளின் அதட்டல்; வேலை
செய்வோரின் சாபங்கள்; ஆற்றில் விழுந்து கரையேறத்

தவிக்கும் அப்பாவிகளின் தீனக்குரல். அவர்களைக் காப்பாற்றத்தான் ஆள் ஏது? அவகாசம்தான் ஏது? வெள்ளமோ கண்ணிமைப்பதற்குள் இழுத்துப் போய் விடுகிறது. மூன்று பேர் விழுந்ததை என் கண்ணாலேயே பார்த்தேன். நீச்சல் தெரிந்திருந்தால் அவர்கள் பிழைத்திருப்பார்கள். உடைப்பண்டை, நீர் குபுகுபுவென்று புகுந்து கொண்டே இருந்தது. கைகோத்துக்கொண்டு முதுகைத் தந்து எத்தனையோ பேர் நின்றனர். எவ்வளவுக் கட்டிப் பிடித்தாலும் மண்கரை சரிந்து கொண்டே வந்தது. உடைப்புக்கு அருகிலேயே நின்றால், வாய் மூக்கு கண்ணெல்லாம் சேறும் சகதியுந்தான். அந்த இடத்தில் நின்றுவிட்டால் அப்புறம் நகருவது ஏது? மணல் மூட்டைகள் வருவதற்குள் ஒரு யுககாலம் கழிந்து விட்ட மாதிரி இருக்கும். லி, எங்கள் காங்கியின் தலைவன். அவனே கால் வழுக்கி உடைப்புக்குள் போய்விட்டான். அவன்மீது ஒரு மணல் மூட்டையும் விழுந்துவிட்டது. அவனை வெளியேற்ற இரண்டு பேர் குதித்தனர், ஆனால் அதற்குள் மேலும் மூன்று மண் மூட்டைகள் அவன்மேல் வீசப் பட்டுவிட்டன. தப்பச் சந்தர்ப்பமே இல்லை. பாவம், நல்லவன்.''

தூ-பவோ சிறிது நேரம் ஒன்றுமே பேசவில்லை. அஹ்-சென் அவன் கையை எடுத்துத் தன் கைக்குள் அடக்கி, ''இடிந்து போகாதே தூ-பவோ... எல்லாத் துன்பமும் சீக்கிரமே முடிந்து போகும். நீ இளமை மிக்கவன்; திடகாத்திரம் உள்ளவன். அடிக்கடி இப்படி உடைப்புக்கள் ஏற்படா'' என்றாள்.

''இதுபோல எப்போதும் ஏற்பட்டு விடுவதில்லைதான். இருந்தாலும் ஏதாவது ஓர் ஆபத்து இருந்துகொண்டேதான் இருக்கிறது. அதோடு, நாம் துச்சமெனக் கழித்துக் கஷ்டப்படக் கூடியவர்களே என்ற நினைப்பும் நீடிக்கிறது'' என்றான் தூ-பவோ. மறுபடி அவன் பேசாமல் இருந்தான். அஹ்-சென்னின் கைப்பரிசத்தில் ஓர் ஆந்தரிகத்தை உணர்ந்தான்.



''இந்த ஆபத்துக்கோ, கஷ்டவேலைக்கோ நான் தயங்கவில்லை. அவர்கள் நம்மை நடத்தும் விதம்தான் மனுஷ்யத்தனமாகவே இல்லை'' என்றான் அவன்.

தூ-பவோ சற்று சங்கோசி; பெண்களிடத்தில் ஏதாவது மனம்விட்டுப் பேச அவனுக்குத் துணிவு கிடையாது. ஆனாலும் அந்தச் சூழ்நிலையில், இருட்டில் அவன் அஹ்-சென்னுடன் மனம்விட்டே பேசினான். அவள் காட்டிய பரிவும், அநுதாபமும் அவன் இதயத்துள் ஓர் ஆறுதலையும், இதத்தையும் பாய்ச்சின. ஹாங்கோவிற்கு வருவதற்குமுன் தன் வாழ்க்கையைப் பற்றி அவளுக்குச் சொன்னான். அவளும், தன் கணவன், மகன் இருவரும் வெள்ளத்தில் மூழ்கி இறந்த கதையையும், தனக்கிருந்த ஒரே மகள் நன்றாக வளர்ந்து பெரியவளாவாள் என்ற நம்பிக்கை தனக்கு இருப்பதையும் மறைக்காமல் கூறினாள். அந்த இரவு இப்படி அந்தப் பேச்சு சுவாரசியத்தில் போனதே தெரியவில்லை. இருள் மெல்ல மெல்ல விலகி உதய ஒளியும் அறையினுள் பரவியது.

''தூ-பவோ பொழுது விடிந்து விட்டது... நாம் சற்றுத் தூங்குவோம்'' என்றாள் அஹ்-சென்.

''அப்படியே, அஹ்-சென்! நான் ரொம்பப் பேசி உனக்கு அலுப்பைத் தந்து விட்டேனே என்னவோ! அதற்காக வருந்துகிறேன்'' என்றதும் அவனுக்கே வெட்கமாகி விட்டது.

அவள் அவனைப் பார்த்து முறுவல் பூத்தாள். ''நானும் தான் பேச விரும்பினேன். இங்கேயே இடம் ஒழித்து விடுகிறேன்; சற்றுப் படுத்துத் தூங்கு. அப்புறம் வேலைக்குக் கிளம்பவேண்டும்'' என்றாள்.

அவள் ஒரு பாயை விரித்தாள். அதன்மீது தூ-பவோ படுத்தான். அவன் கண்களைத் தூக்கம் வந்து அழுத்திய போது இளங்காலை ஒளியில் அஹ்-சென் முகத்தில் அரும்பிய அம்முறுவலே அவன் நினைவில் தோய்ந்து கிடந்தது.

## 10

மறுநாட்காலை நேரம் கழித்தே சிங்-சி கண்விழித்தான். தன்மேல் போர்வை போர்த்து விட்டிருப்பதையும், தனியாகத் தான் இருப்பதையும் உணர்ந்தான். எழுந்து உட்காரப் பார்த்தான்; அவன் உடம்பில் மரணவலி. தண்ணீர்க் கூஜாவை எடுக்கக் கையை நீட்டினான். அதைத் தன்னருகில் இழுத்து, அதைச் சாய்த்து இரண்டு வாய் பருக முயன்றபோது அவனுக்குக் கண் இருட்டிவந்தது. அப்படியே படுக்கையில் சாய்ந்துவிட்டான். தன் குடும்பத்தவரைப் பற்றி நினைக்கலானான். ஸியு-மின் அணைக்கரை வரைக்கும் வந்து ஏதோ சொல்ல வந்தது, தன் தாயைக் குறித்துத்தான். அவனுக்கு ஞாபகம் வந்தது. 'அதற்காகத்தான் வந்திருப்பாள். அம்மாவுக்கு உடம்பு நன்றாக இல்லை என்பதைச் சொல்லத்தான். அவள் இங்கே இல்லை. உடம்பு குணமாகி விட்டிருக்கும்; வேலைக்குப்போயிருப்பாள்' —இவ்வாறு அவனுடைய சிந்தனை ஓடியது. எல்லா விஷயமும் சிறிதளவே அவன் நினைவுக்கு வந்ததே தவிர, தெளிவாக எதுவும் தெரியவில்லை. ஸியு-மின் அழுதவண்ணம், அணைக்கரையருகில் தன்னைக் கட்டிக்கொண்ட காட்சி அவன் மூளையைத் துளைத்தது. உடனேயே அவன் தங்கையைப்பற்றிய வேதனையூட்டும் நினைவு வந்தது. அவளுக்கு நடந்த அந்த அநீதம் அவனைச் சிலிர்க்கச் செய்தது. இப்போது அவள் இல்லை, இறந்துவிட்டாள். தன்னால் ஒன்றும் செய்யமுடியவில்லையே என்று துக்கத்துடன் ஆக்ரோஷம் கலக்கத் துடிதுடித்தான். தன்னையும் மீறி உரக்கக் கத்தினான், சபித்தான். இதற்குப் பழிதீர்த்துக் கொள்வதே சரியென உறுதி பூண்டான். அணைக்கரையில் நெருக்கடி நிலை ஏற்பட்டபோதே, தன் தங்கையின் மரணத்திற்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ள முடிவு செய்து விட்டான் அவன். அதற்காகத் தேவையானால், தன் உயிரையே கொடுக்கவும் துணிந்திருந்தான். சுவாங்-குவாங்-ஹுவாமீது தன் முழு ஆத்திரத்தையும் தீர்த்துக் கொண்டான். அவன் அகதி கோஷ்டியைச் சேராதவன்; கோழை என்பது தெரியும் சிங்-சிங்கு. மடக்கப்பட்ட மிருகம்போலப் போராடியும்கூட



மனித அரணில் அவனை மாட்டிவிட்டான். அருவியெனக் கொட்டிய நீரை நோக்கி அவனை இழுத்து நிறுத்தினான். தன்னைப்போலவே எதற்கும் துணிந்த இன்னொருவனால் சுவாங்கின் இன்னொரு கை இறுகப் பற்றப்பட்டிருந்தது அவனுக்குத் தெரியும். இறுதியில் சுவாங்கின் உடல் தொய்ந்தது அவனுக்கு நினைவிருந்தது. அடுத்த ஞாபகங்களெல்லாம் ஒரே குழப்பமயமாக இருந்தன. கூச்சல் கூப்பாடுகள், வெறிவந்தது போன்ற பரபரப்பு, நாற்றம் பிடித்த ஆற்று நீர் வாய், கண், மூக்கெங்கும் புகுந்து திக்கு முக்காட வைத்தது. யாவும் மங்கிய சித்திரம்போல் சிங்-சியின் நினைவில் எழுந்தன. சுவாங் செத்தானா பிழைத்தானா என்பதுஅவனுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. ஆயினும் தன்னைப்போல அவன் அதிருஷ்ட வசமாகத் தப்பிப் பிழைத்திருக்கமுடியாது என்றே தீர்மானித்தான். 'எப்படியோ வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டாயிற்று' என்று அவன் சற்று வேதனையுடனேயே நினைக்கலானான். அப்படிப் பழிதீர்த்ததனால் அவன் தங்கை அஹ்-சுயெனின் உயிரைத் திருப்பிவிட முடியுமா என்று எண்ணியதாலேயே வேதனை. ஆயினும் நூற்றுக்கணக்கான நிரபராதிகள் அணைக்கரையில் உயிர் துறந்ததற்கு சுவாங் காரணமாவான். இருப்பினும் ஏனோ அவனைக் கொன்றோமென சிங்-சி உள்ளூற வருந்தினான். யாருக்குமே அவன் தீங்கு நினைக்காதவன். எனவே இந்த வேதனை அவனை வாட்டி எடுத்தது.

ஸயாவோ மாமி ஓசையெழுப்பாமல் நடந்து வந்து அவன் அருகில் உட்கார்ந்தாள். ''இப்போது உனக்கு எப்படி இருக்கிறது உடம்பு?'' என்று விசாரித்தாள்.

அவன் தலையை அசைத்தான், சுகமே இருப்பதாக. அம்மா என்னவானாள் என்பதை அறிய அவன் விரும்பினான். ஆனால், அவள் உடல் நிலை மிகவும் மோசமாக இருந்ததாக, ஸயாவோ மாமி சொல்லியிருந்தது நினைவு வரவே அவன் தயங்கினான்.

''ஸியு-மின்னை மறுபடி வேலைக்கு அனுப்பியுள்ளனர்'' என்று ஸயாவோ மாமி வேணுமென்றே சிங்-சியின் தாயைப் பற்றிய சமாசாரத்தை மறைக்கப் பார்த்தாள்.

''ஸயாவோ மாமி...அம்மா...எங்கே இருக்கிருள்?'' என்று கடைசியில் தைரியமாகக் கேட்டு விட்டான் சிங்-சி.

ஸயாவோ மாமி தரையையே வெறித்து நோக்கினுள். ''நீ திரும்பி வந்தபொழுது...அவள் உன்னைப் பார்த்த பிறகே கண்ணை மூடினுள்'' என்றதும் பலபலவென்று கண்ணீர் உகுத்தாள்.

சிங்-சி அசையாமல் இதைக் கேட்டான். 'ஒவ்வொருவராக இன்ருே நாளையோ இப்படித்தானே போக வேண்டும். முதலில் ஆசைக் கனவுகளுக்குச் சாவு; அடுத்து நம்பிக்கைகளுக்குச் சாவு; அப்புறம் ஆளுக்கே சாவுதான்' என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

''சிங்-சி, இந்தா இந்தக் கஞ்சியைக் குடி...பக்கத்து விடுதியில் ஒருத்தியிடமிருந்து வாங்கி வந்தேன்'' என்ருள் ஸயாவோ மாமி.

ஆற்று நீரை நிரம்ப உட்கொண்டதால் அவனுக்குத் தலை சுற்றி வாந்திக்கு வந்தது. அவன் இதயம் சூனியமாகி விட்டது. ''எனக்கு எதுவுமே வேண்டாம்'' என்ருன்.

''நீ சற்றுப் படுத்துக்கொள். மனம் குமுங்கிப் போகாதே, அப்பனே. வாழ்க்கை இத்துடன் அஸ்தமித்து விடாது. நான் அப்புறம் வருகிறேன்'' என்ருள் அந்த முதியவள்.

மிகவும் இளகிய மனம் படைத்த அந்த மாது போவதை நோக்கினுன் சிங்-சி. புகை நிறம் படிந்த அவ்வறையைச் சுற்றி அவன் கண் ஓடியது. வறுமையும், நோயும், தனிமையும் சூழ அவன், ''இதுவோ நாங்கள் காண ஆசைப்பட்ட புது வாழ்வு?'' என நினைத்தான்.

* * * *

இதற்குள் அணைக்கரையெங்கும் எல்லோருக்கும் தென்பூட்டும் ஆச்சரியச் செய்தி பரவலாயிற்று. பதினுலாவது பிரிவைச் சேர்ந்த ஒன்பது ஆட்கள் தப்பி ஓடிவிட்டார்களாம். உடைப்பைச் சரிப்படுத்தும் வேலையில் உழைத்துச்



சுரணை கெட்டுப்போன கெங்-ஸெங்கூட இந்தச் செய்தியை வரவேற்ருன். சுவிடம் வந்து உஷாராகவே விசாரித்தான். லிக்குப் பிறகு பதினேழாவது காங்கியின் தலைவன் பதவியை சு ஏற்றிருந்தான்.

''அவர்கள் எப்படித் தப்பியோடினுர்கள்? ஹாங்கோவிலிருந்து போய்விட்டார்களா?'' என்று கேட்டான் கெங்-ஸெங்.

''எனக்கு என்ன தெரியும்? ஹாங்கோவிலிருந்துஅவர்கள் வெளியேருமல் இருந்தால் அவர்கள் தப்பி யோடி விட்டார்கள் என்று எப்படிச் சொல்வது?'' என்று சு பதிலளித்தான்.

''சுற்றிலும் வெள்ளக் காடாக இருக்கும்போது அது எப்படி முடியும்?'' என்ருன் கெங்-ஸெங்.

''முடியாதுதான். ஆனுல் ஜனங்கள் பேசிக் கொள்வதைப் பார்த்தால் நம்ப வேண்டித்தான் வருகிறது—பீபிங்-ஹாங்கோஇரயில் பாதை வழியே அவர்கள் விட்டடித்தார்களெனச் சொல்லிக்கொள்ளுகிருர்கள்—அது என்னவோ...'' என்று மெதுவாகவே பேசினுன் சு.

''அது நடக்காத விஷயம்; ரொம்ப நாட்களுக்கு முன்பே வெள்ளம் அந்த ரெயில் பாதையை அடித்துக் கொண்டு போய் விட்டதே'' என்ருன் கெங்-ஸெங்.

''வதந்தி என்னவென்ருல், சின்னக் கட்டு மரங்களில் அவர்கள் ஏறிப் போய் விட்டார்களாம்'' என்று பொருமை மூச்சுடன் சொன்னுன் சு. மேலும் தொடர்ந்தான்: ''இது சுலபந்தானே? அவர்கள் வேலை செய்த இடத்தில் பலகையெல்லாம் இருந்தது. நம் காங்கில் அப்படி யாராவது முயன்றிருந்தால்தான் மாட்டிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் பத்திரமாகப் போய்ச் சேர்வார்களென நான் நம்பவில்லை. ஆனுலும் இப்படி இங்கே உயிரை விடுவதைவிட, அவர்களைப் போல் எங்கேயாவது போய்ச் செத்தொழிவதே மேல்.''

''அது அசாத்தியமென்றே இன்னமும் நினைக்கிறேன்'' என்ற ஸூ-கெங்-ஸெங்கிற்கு இருந்த நம்பிக்கை மெல்லக் கரைந்து விட்டது.

அகதிகள் தப்பியோடியதைப் பற்றிப் பேசும் வேறு குழுவினர் பக்கம் சென்றான்.

பதினெட்டாவது காங்கியிலிருந்து மாற்றலான வாங் அஹ்-ஹூ இந்த சமாசாரத்தைப் பற்றிக் குதூகலமாய்ப் பேசிக் கொண்டிருந்தான்.

ஏழெட்டு மரத்துண்டுகளைக் களவாட முடியுமானால் நாமும் ஒரு கை பார்த்துவிடலாம். பந்தயம் கட்டுகிறேன்'' என்றான் அவன்.

''மரத்துண்டுகளைக் களவாடுவதா? அப்புறம் இயந்திர பீரங்கிகள் கக்கும் குண்டுகள் நம்மைப் பின்தொடரும்!'' என்று அக்குழுவில் ஒருவன் கூறினான்.

''இது ஆபத்தை விளைவிக்கக்கூடிய விஷயந்தான்'' என்றதும் அஹ்-ஹூ மணல் மூட்டையைத் தூக்க நடந்தான். மேலும் தொடர்ந்தான்: ''கட்டு மரத்தில் மணல் மூட்டைகளை வைத்து நம்மைத் தோட்டாக்களிலிருந்து காத்துக் கொள்ள முடியும். ஆற்றில் மெல்ல மிதந்து சென்று எங்காவது ஏறலாம்; அங்கே உடைப்புக் கண்டிருந்தால் அந்த மணல் மூட்டைகளையே போடலாமே'' என்று இடிஇடியெனச் சிரித்தான். அங்குள்ளவர்களும் நகைத்தனர். ஸூ நெருங்குவதைக் கண்டதுமே இவர்களுடைய குதூகலச் சிரிப்பு பட்டென நின்று விட்டது. ஸூ கெங்-ஸெங்கை நம்புவதா, கூடாதா என்பது அவர்களுக்குத் தெரியவில்லை.

''உங்களுக்கு உயிர் வாழ வேண்டுமென்ற விருப்பமில்லையா? இங்கே உங்களிடையே யாரையாவது ஒற்றனாக அவர்கள் வைத்திருக்கலாம். உஷாராகப் பேசுங்கள்'' என்று எச்சரித்தின் ஸூ.

''துப்பாக்கி எதிரே நிற்பதைவிட இப்படித் தப்பி ஓடி எங்கேயாவது சாவதுமேல்'' என்று அஹ்-ஹூ மெல்ல



முனகினான், திரும்பிச் செல்லும் கெங்-ஸெங்கின் முதுகைப் பார்த்து.

''ஏய் அஹ்-ஹூ! பதினெட்டாம் பிரிவண்டை நிலவரம் எப்படி?'' என்றான் தூ-பவோ.

''பதினெட்டாம் பிரிவா? உன் கண்ணாலேயே பாரேன்-இங்குள்ளதற்கும் அங்குள்ளதற்கும் அதிக வித்தியாசமும் இல்லை'' என்றான் அஹ்-ஹூ.

''அங்கே வேலை செய்வோரின் மனப் போக்கு எப்படி இருக்கிறது?'' என்றான் தூ-பவோ.

''நம்மைப் போலத்தான்; அதிகாரிகளைத் திட்டுகிறார்கள். நகரத்திற்குப் போக மாட்டார்களா என்று சாபமிடுகின்றனர். அத்துடன் பெண்பிள்ளைகளை எண்ணிப் பரபரப்பு வேறு'' என்றதும் அஹ்-ஹூ பக்கத்திலுள்ள ஒரு மணல் மூட்டைமீது குத்து விட்டு, ''என் கையிலே சில்லறை இருந்தால் அவ்வளவையும் ஒரு பெண்ணுக்கே செலவழித்துவிடுவேன்'' என்றான். தூ-பவோவைப் பார்த்து பல்லிளித்து, ''என்ன சிரிக்கிறே? ஒரு பெண் பிள்ளையுடனாவது படுத்துத் தூங்காமல் உயிரை விட்டால் வெட்கக் கேடுதான்'' என்றான்.

தூ-பவோ காறி உமிழ்ந்துவிட்டு மண்வெட்டியால் மணலை வெட்டிக் குவித்தான். அஹ்-ஹூ அவன் பக்கம் திரும்பித் தமாஷாகச் சிரித்தான்.

தூ-பவோவுக்குக் கோபந்தான். அஹ்-ஹூ இப்படித் தன் மனத்தைக் கிண்டியதை அவனால் ஒதுக்கிவிட முடியவில்லை. அவன் எந்தப் பெண்ணுடனும் பழகியவனல்ல. பெண்ணில்லாத ஆடவனின் வாழ்க்கை உப்பில்லாத உணவுக்குச் சமம என்று சொல்லக் கேள்விப் பட்டிருந்தான். ஒரு பெண்ணை மணந்து குழந்தை குட்டிகளைப் பெறுவதுதான் நல்லதென்று பலமுறை அவன் தாயும் சொல்லியிருந்தாள். ஆனால் இயல்பாகவே வெட்கம் உடைய அவன் ஒரு பெண்ணைச் சந்தித்தால் எப்படி அவளிடம் உரையாடுவதென்பதைத் துளியேனும் அறியாதவன். ஆனால் அணைக் கரையில் வேலை பார்க்கத் தொடங்கியதிலிருந்து ஆடவர்

கொண்டிருந்த சென்-குவாங்-சென் நிமிர்ந்தான்; கைகளைக் கண்களுக்குமேல் குவித்துக் கொண்டபடிக் கூர்ந்து நோக்கினான்.

ஒலிபெருக்கிகள் அலறின.

''என்ன இருக்கப் போகிறது? மறுபடியும் ஏதாவது ஆபத்துச் செய்தியாக இருக்கும்'' என்று ஹுவாங் தரையில் காறித் துப்பினான். குவாங்-செங்கை இழுத்து, ''பத்தாவது பிரிவில் என்னவோவாம். அதைக் குறித்து நாம் கவலைப் படுவானேன்?'' என்றான்.

குவாங்-செங் அவனுக்குப் பட்டென பதில் தந்தான்: ''பத்தாம் பிரிவில் ஏதோ ஆபத்து.''—இதைக் கேட்டதும் அருகில் இருந்த ஆட்கள் பலர் எழுந்து நின்றனர்.

''உங்கள் வேலையைக் கவனியுங்கள்''—ஸுகெங்-ஸெங் அதட்டுவது கேட்டது. அவன் பின்னாலேயே ஆயுதங்கள் ஏந்திய காவல் சிப்பாய்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் செய்தி வந்தது. கழியோரமாகவுள்ள பத்தாவது பிரிவின் சில பகுதி களில் கரை இறங்கி விட்டதாம்; அதனால் உடைப்பு ஏற்படக் கூடிய பயம் இருக்கிறதாம். இந்தச் செய்தி மடமடவென்று வேலையாட்களுக்கிடையே பரவியது. வேலை செய்ய மறுக்கும் ஆட்கள் சிலர் பலகைகளைப் பிணைக்கும் தாம்புகளை அறுத்து விட்டார்களாம். இப்படி ஒரு குழப்பத்தை உண்டுபண்ணி இந்தச் சந்தடியில் சிலர் ஓடிவிடத் திட்டம் போட்ட தாகவும் பேசிக் கொண்டார்கள். வரவர இச் செய்தி பலவாறாகத் திரிந்து எங்கும் பரபரப்பை உண்டு பண்ணியது. அதனால் எல்லாப் பிரிவிலும் ஆயுதம் தாங்கிய சிப்பாய்களை நிறுத்தினர்.

ஆயுதம் ஏந்திய சிப்பாய்கள் பல திசையாகப் பிரிந் தனர். ஸியு-மின் வெறும் தட்டைத் தோள்மீது சுமந்தபடி அணைக் கரையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தாள். அவள் காலில் ஒரே சேற்றுப் புண். தத்தித் தத்தி நடந்தாள். அணைக்கரையின் கீழ் அவள் அஹ்-சென்னைக் கண்டாள்.



''அஹ்-சென், எனக்கு வெலவெலவென்று வருகிறது... களைப்பாயிருக்கிறது'' என்றாள்.

''வா...சாப்பிடலாம். தினத்தைவிட சாப்பாட்டு வேளை யையும் பொழுதோடேயே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். விரைவிலேயே வேலையிலிருந்து விடுவித்தும் விடுவார்களாம்'' என்றாள் அஹ்-சென்.

''இவ்வளவு பொழுதோடேயா?''

''அணைக்கரையில் என்னவோ ஆபத்தாம். அங்கே நம்மை வேலை செய்ய அனுப்ப மாட்டார்கள் போலத் தெரிகிறது.''

''அனுப்ப மாட்டார்களா? என்ன ஆபத்தோ?'' என்று ஸியு-மின் பராக்காகக் கேட்டாள். சிங்-சி அங்கு வேலை செய்யவில்லை என்பதை அவள் அறிவாள். இந்த அணை சரிந் தால் என்ன, சரியாது நின்றால்தான் என்ன? அவளும் சிங்-சியும் சாவப் போவதென்னவோ திண்ணம்—இன்னும் எத்தனை நாள்!

''சிங்-சி எப்படித்தான் சமாளிக்கிறானோ?'' என்றாள் அஹ்-சென்.

ஸியு-மின் பற்களை நறநறவெனக் கடித்தாள். ''அஹ்-சென், அதை நினைக்கும்போதே எனக்குத் தலை கிறுகிறுக் கிறது. அவருக்கு உடம்புச் சற்றுத் தேறினால் உடனேயே இன்னொரு கஷ்டமான வேலைக்கு அனுப்பிவிடுவார்கள்: அணையண்டை செத்தால் என்ன, முகாமில் செத்தால் என்ன? இரண்டும் ஒன்றேதான்'' என்றாள்.

அஹ்-சென் ஸியு-மின்னிடம் ரகசியமாகச் சொன்னாள்: ''எத்தனையோ பேர் தப்பி ஓடிவிட்டதாக வதந்தி. எனக்குப் பூராக் கதையும் தெரியாது.''

''தப்பி ஓடுவதா? ஸிலிங்கிலிருந்து தப்பி இங்கே வந்தோமே, என்ன பலன் கிடைத்தது?'' என்றாள் ஸி-யுமின்.

ஸியு-மின் கூறியது சரிதானே? அஹ்-சென் பதில் சொல்ல வில்லை. அவ்விளையவளின் கையுடன் தன் கையைக் கோத்துக்

கொண்டு உணவு விநியோகம் செய்யுமிடத்தை அடைந்தாள். ஒரு கிண்ணம் நிரம்ப அரிசிச் சோற்றை வாங்கிக்கொண்டு முகாமில் தம் இடத்திற்குத் திரும்பினர் இருவரும்.

நீர் தேங்கியிருந்த தெருக்களில், சேற்றுப் புண் வாதையால் கால் வைக்க முடியாமல் நெம்பி நெம்பி நடந்தாள் ஸியு-மின். முகாமிற்கு அருகே வரவர அவள் பரபரப்புற்றாள். 'சிங்-சி உயிருடன் இருக்கிறானோ இல்லையோ?' என்ற திகிலே அவளுக்கு.

''அஹ்-சென், எனக்கு என்னவோ திகிலாகத்தான் இருக்கிறது. அவருக்கு என்னமாவது நேர்ந்திருக்குமோ? நீ போய்ப் பார்த்து வாயேன்'' என்றாள்.

''ஏன் அதைரியப்படுகிறாய்? எந்த நிலையில் இருந்தாலும் அவரை நீ பார்த்துத்தானே ஆகவேண்டும்?'' என்றாள் அஹ்-சென்.

அதே சமயம், அஹ்-சென்னின் சிறிய மகள் கைகளை விரித்துக்கொண்டே அன்னையின் மடியில் விழுந்து சந்தோஷத்தால் கட்டிக் கொண்டாள். அதனால் ஸியு-மின் தனியாகவே தன் விடுதிக்குச் செல்ல நேர்ந்தது.

திக்திக்கென்று மார்பு படபடக்க, சிங்-சி படுத்திருக்கும் இடத்திற்கு மெல்ல வந்தாள். மங்கல் ஒளியில், கிழிந்த போர்வைக்குள் அவன் வடிவம் அசையாமல் பாய்மீது கிடப்பது தெரிந்தது. அவள் மண்டியிட்டுக் குனிந்து அவனையே நோக்கினாள். அவன் கண்கள் திறந்திருந்தது கண்டு பேராறுதலுற்றாள். அவனுடைய பெயரை மெதுவாக உச்சரித்தாள். ஆனால் பதில் ஏதும் இல்லை. அவள் வந்ததை அவன் தெரிந்து கொள்ளவே இல்லை.

''சிங்-சி!'' என்று மெதுவாக அவன் தோளைத் தொட்டு, ''நான்தான், என்னைப் பார்'' என்றாள்.

ஸியு-மின் பக்கமாகத் தலையைத் திருப்பி அவளையே முறைத்துப் பார்த்தான் சிங்-சி. அவளைப் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை.



''சிங்-சி, உனக்கு இப்போது எப்படி இருக்கிறது?'' என்றாள் ஸியு-மின். சிங்-சியின் கண்கள் அவள் மீதே பதிந்திருந்தன. சட்டென அவன் அடைத்த குரலில், ''நீ உயிருடன் இருக்கிறாயா?'' என்றான்.

''சிங்-சி, இதோ உயிருடன்தான் இருக்கிறேன்'' என்றதும் ஸியு-மின் அவனை நெருங்கி அவன் நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். ஆனால் அவனோ பொறுமையற்றவனாய் அவளுடைய கைகளை உதறித் தள்ளினான். ''என் தாயும் என் தங்கையும் இறந்து போய்விட்டார்கள்; நீ...நீ மட்டும் ஏன் உயிருடன் இருக்கிறாய்?'' என்று திராணியற்ற குரலில் கேட்டான். அவள்மீது குற்றம் கூறுவது போலிருந்தது, அக்குரலின் தோரணை. ஸியு-மின்னின் இதயம் உறைந்து விட்டது.

''சிங்-சி! என்னைப்பற்றிக் கவலைப்படாதே. உன் அம்மாவையும் தங்கையையும் நான் சீக்கிரமே பின்பற்றுவேன்'' என்றாள், கசந்துபோய். சிங்-சி தன்னிலை மறந்து பேசினான் என்பது அவளுக்குப் புரியவில்லை. அலுத்துப் போய் மனம் உடைந்து போயிருந்தாள். வெகுளி பொங்க அவள் கூச்சலிட்டாள் : ''சிங்-சி, இனிமேல் உன்னையே நீ கவனித்துக்கொள்! நான் போகிறேன்!'' என்று நகர்ந்தாள். ஆனால் உடனேயே நின்று விட்டாள். சட்டெனப் பழைய காதல் நினைவுகள் வரவே அவள் கண்களில் நீர் அரும்பிற்று. இதுவரை அவள் அவனுடன் ஊடியதே இல்லை. இப்போது அவன் அவளை வெறுப்பதால் — அவளிடத்தில் அக்கறை காட்டாததால் — தான் இறந்தொழிந்தால் என்ன என்று அவளுக்கு உறைத்து விட்டது. சட்டென எழுந்து நின்றாள். காலில் செருப்பைக்கூட அணிந்து கொள்ளாமல், திரும்பி வேகமாகவே அறையைவிட்டு அகன்றாள்.

அவள் சென்றதும், சிங்-சி மனங்குழம்பிப் படுக்கையிலேயே கிடந்தான். அவள் அவ்வாறு ரோஷத்துடன் போவதற்குத் தான் என்ன சொன்னோமென்று நினைத்துப் பார்த்தான். அவளுடைய பேச்சின் சில பகுதிகளே அவன் மூளையில் ஒலித்துக் கொண்டிருந்தன. திடுமென எழுந்து

உட்கார்ந்தான். ஸியு-மின்னைப் பெயரிட்டு அழைத்தான். ஆனால் அவள் அங்கு இருந்தால்தானே!

''ஸியு-மின்! ஸியு-மின்!'' என்று கத்தினான். அவளைப் பிடித்து வரத் தாவினான். தன் வலியையும் மறந்து, கை கால்களை அசைக்க முடியாமல் இருந்தும் அவளைப் பின் தொடர்ந்தான். முகாமிற்கு வெளியே அவளைப் பிடித்து விட்டான்.

''ஸியு-மின்...நான் என்ன சொல்லி விட்டேன்? ஏன் இப்படிப் போகிறாய்?''

வேறு பக்கமாக முகத்தைத் திருப்பி, அவனுடைய பிடியிலிருந்து நெளிந்து விடுபெற முயன்றாள் ஸியு-மின். ''என்னை விடு! நான் சாக வேண்டும்! என்னைப்பற்றித்தான் உனக்கு அக்கறை இல்லையே! நான் ஆற்றில் விழுந்து சாகிறேன்.''

''ஸியு-மின், நீ அப்படியெல்லாம் ஏதாவது செய்து விடாதே'' என்று சிங்-சி அவளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

''என்னை விடேன்!'' என்றதும் தாரை தாரையாக ஸியு-மின்னின் கன்னங்களில் கண்ணீர் பெருகியது.

''இங்கே இரண்டு பேரும் என்ன செய்கிறீர்கள்?''—ஒரு குரல் கேட்டது. இருவருக்குமே பதில் சொல்லத் தெரிய வில்லை. அப்போது அங்கு வந்த ஸயாவோ மாமி நெடு மூச்செறிந்து, ''அசட்டுக் குழந்தைகளா! ஒருவர்மீது ஒருவர் அன்பும் ஆதரவுமாக இருக்க வேண்டிய சமயத்தில் இப்படிப் பிணங்கலாமா? வாருங்கள், என்னுடன்'' என்று காதலர் இருவரையும் முகாம் கட்டடத்தினுள் அழைத்துச் சென்றாள். சிங்-சியின் பின்னாலேயே அடக்கத்துடன் சென்றாள் ஸியு-மின். பாய்மீது படுத்துத் தேம்பித் தேம்பி அழலானாள். ஸயாவோ போகக் காத்திருந்த நேரத்தில் தன்னை நிதானப் படுத்திக்கொண்ட சிங்-சி, அவள் போனதும் மண்டியிட்டு அன்புடன் ஸியு-மின்னின் முதுகை வருடியபடி, ''ஸியு-மின்,



நான் என்ன சொல்லி விட்டேனென்று இவ்வளவு கோபம் என்மேல் உனக்கு?'' என்றதும், தான் ஏதாவது அவள் மனம் புண்ணாகும்படி கூறியிருக்க வேண்டுமென ஊகித்தான். அவன் உள்ளூற வருத்தமே அடைந்தான். எப்படி அவளைத் தேற்றுவது என்பது தெரியவில்லை.

''ஸியு-மின்! என்னை மன்னிப்பாய். நான் என்ன சொன்னேனென்று எனக்கே ஞாபகமில்லை. ஏதாவது உடம்பு வேதனையால் பிதற்றி இருப்பேன்.''

ஸியு-மின்னின் உடல் குலைத்தது. அவள் தன் இரு கைக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

''ஸியு-மின், உன்னைத் திரும்பக் காணுவேன் என்று நான் எண்ணவே இல்லை'' என்றதும் அவள் கூந்தலை நீவிக் கொடுத்து, ''நாளெல்லாம் உன்னையும் அம்மாவையும் எதிர் நோக்கியே இருந்தேன். அப்புறம் அவள் போய்விட்டாள் என்று கேள்விப்பட்டேன். நீயும் என்னைவிட்டுப் பிரிந்து போய்விட்டாய் என்று நினைத்தேன்'' என்று கூறியதும் சற்று நின்றான். ''ஸியு-மின், நீயும் இறந்து விட்டா யென்றே முடிவு கட்டி விட்டேன்...என் மனம் ஒரு நிலையில் இல்லை'' என்றான்.

கடைசியில் ஸியு-மின்னின் விசும்பல் ஓய்ந்தது. அவள் திரும்பிப் பார்த்தாள். சிங்-சியின் முகத்தில் துயரும், கவலையும் எழுதியிருந்ததைக் கவனித்தாள். சட்டென இருவரும் இறுகத் தழுவிக் கொண்டனர். இருவர் உடல் களும் காதலின் தீவிரத்தால் துடிதுடித்தன. சற்றுமுன் இருந்த கோபதாபங்கள், ஐயம் யாவும் அந்த இன்ப வெள் ளத்தில் எங்கோ மறைந்தொழிந்தன. ஒருவருக்கென மற்றவர் வாழ்கிறோம்; உயிர்த்துடிப்பு உள்ளமட்டும் இக் காதல் அழியாது என்பதை இருவர் இதயங்களும் உணர்ந்து அமைதியுற்றன.

## 11

ஆகஸ்ட்டு 25-ஆம் நாள் துயர் மிக்கதொன்றாகும். சாப்பறை முழங்கிட, உள்ளம் சாம்பிய பாட்டாளி மக்கள்

கூட்டம் கூட்டமாய் வெள்ள நீர் பாய்ந்த தெருக்களூடே துழாவி நடந்து, இறந்தவர் நினைவாகச் சடங்கு நிகழுமிடத்தை அடைந்தனர்.

வாங்-சிங்-சி ஐந்து நாட்களாக வேலைக்குச் செல்ல வில்லை; உடல் தேறுவதற்கு இன்னும் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. முகாம் அதிகாரி மட்டும், அந்த விசேஷச் சடங்கில் கலந்துகொள்ள வேண்டுமென அவனை வற்புறுத்தினான். அந்த நினைவுச் சடங்கு எதற்காக என்பது அவனுக்கு விளங்கவே இல்லை. அணைக்கரை வேலையில் மாண்ட நூற்றுக்கணக்கான அகதிகளின் நினைவாகவா அல்லது இரண்டு தினங்களுக்குமுன் உயிர் துறந்த அறுபத்தேழு ஆட்களின் ஞாபகார்த்தமாகவா? அவன் தாய், தங்கை இவர்களைப்பற்றி நினைப்பதற்கு ஒரு சடங்குமில்லையா? ஒரே நாளில் அறுபத்தேழு பேர் மாண்டனர்! என்ன நடந்தது; ஏன் இவர்கள் மரிக்க நேர்ந்தது? எங்கே விபத்து ஏற்பட்டது என்ற விஷயமெல்லாம் யாருக்கும் தெரியாது. இப்படி மாண்டு போனவர்களில் தன் காங்கியைச் சேர்ந்தவர்களும் இருப்பாரென எண்ணினான் சிங்-சி.

நினைவுச் சடங்கு நடக்குமிடத்தில் ஆயுதம் தாங்கிய சைனிகர்கள் நெருக்கமாகவே அணிவகுத்துச் சூழ்ந்திருந்தனர். அலுத்துப்போன உழைப்பாளி மக்கள் போரில் தோற்றுத் திரும்பும் சிப்பாய்களைப்போல் அந்த இடத்திற்கு வந்தனர். இருமருங்கும் பந்தோபஸ்து செய்யப்பட்ட இடம். ஈமத்திற்கான ஒள்ளிய துணியால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. அங்கே தனக்குத் தெரிந்த சிலரையே அவன் கண்டான். பதினேழாவது காங்கியினர் எங்கே காண வில்லையே என்று வியந்தான். அவர்கள் எல்லாம் கொல்லப் பட்டு விட்டனரா? அவ்வளவு மோசமாகவா போயிருக்கும் நிலைமை? முன்னாள்கூட வாங் தூ-போவைப் பார்த்தானே? அப்படி நேர்ந்திருந்தால் அவன் சொல்லியிருப்பான் அல்லவா!

ஈமச் சடங்குகள் துயரைக் காட்டும் தொனியில் இயம்பின. சடங்கை நடத்துவோன் எல்லோரையும் எச்சரிக்கையுடன் நிற்குமாறு ஏவினான். நியமத்தை யொட்டிய இரண்டொரு காரியங்கள் ஆனதும், மேடை மீது ஒருவன் ஏறினான். அவன் என்ன பேசப் போகிறான் என்பது சிங்-சிக்குத் தெரியும். அதனால் தனக்குத் தெரிந்தவர்கள் அங்கு யாராவது வந்துள்ளனரா எனத் துருவிப் பார்த்தான். அவன் வேலைக்குச் சென்று சில நாட்களாயின; ஒரு மாதம் ஆபத்திற்கிடையேயும், துயருக்கிடையேயும் தனக்கு ஒத்தவர்களுடன் வேலை செய்து பழகிய பிறகு, அவர்களுடைய நலத்தைப் பற்றிய செய்தியைக் கேட்க அவனுக்கு ஆவல் இருக்கத்தானே செய்யும்? தன்னுடன் பழகிவிட்ட கூட்டாளிகளை அவன் எவ்வாறு மறப்பான்?



சட்டென, தூ-பவோ தன் கைப்பக்கமாக வந்து நின்றதைக் கவனித்தான்.

''உன்னால் எப்படி வர முடிந்தது?'' என்று சிங்-சி அவனை மெதுவாகவே வினவினான்.

''எனக்கு இப்போது வேலை இல்லை.''

''நினைவுச் சடங்கில் கலந்து என் மாதிரிச் சில ஆட்களை தேடியபோது நான் தூங்கிக் கொண்டிருந்தேன். அஹ்-ஹூவும் நானும் சேர்ந்தே புறப்பட்டோம்; ஆனால் அவன் எனக்கு முன்னாலேயே போய் விட்டான்; அவன் போனவழி எனக்குத் தெரியவில்லை'' என்றான் தூ-பவோ.

''அஹ்-ஹூ – யார் அவன்?''

''அவன் யாரென்று உனக்கு ஞாபகமில்லையா? பதினெட்டாவது காங்கியைச் சேர்ந்தவன்; எப்போதாவது நம்முடன் பேச வருவானே...பெண்களைப்பற்றி ஓயாமல் பேசுவானே, அவன்தான். சமீபத்தில் அவனை நம் காங்கிற்கு மாற்றி விட்டனர். ஆள் நல்ல மாதிரிதான். அவன் எந்தப் பக்கம் போனான் என்று தெரியவில்லையே'' என்றான் தூ-பவோ.

மேடை மேல் பேசுவதற்கு ஏறிய ஆளை ஒரு தரம் நோக்கியதும் சிங்-தூ-பவோ பக்கம் திரும்பிக் காதோடு பேசினான்:

''தூ-பவோ, நம் காங்கியில் நிலவரமெல்லாம் எப்படி? உன்பாடு சௌகரியம் போல் தெரிகிறது; ஸு மாமா எப்படி இருக்கிறார்?'' என்றான்.

''அவர் நன்றாகத்தான் இருக்கிறார்—ஒரு விஷயத்தில் நம் காங்கி அதிர்ஷ்டம் செய்ததுதான். நம்மில் ஒருவருக்கு உடம்பு 'சீக்கு'; இருவருக்குக் காயம்; அந்தச் செவிடன் பேய்-ஷெங் காணாமற் போய்விட்டான். அவனுக்கு நடந்தது என்னவென்று உனக்குத் தெரியாதா? அவன் தப்பியோடி விட்டானென்று சிலபேர் சொல்லுகின்றனர்.''

''அறுபத்து ஏழுபேர் மாண்டார்களாமே, அவர்கள் யார்? எந்தக் காங்கியைச் சேர்ந்தவர்கள்?''

''அவர்களா? இரண்டாம் பிரிவைச் சேர்ந்தவர்கள். எத்தனையோ உடைப்புக்கள் ஏற்பட்டன. அவர்கள் வேலை செய்ய மறுத்தனர். மற்றவர்களையும் தம் கட்சியில் சேரத் தூண்டினர். காவல்படையினர் சுட்டனர்; பலபேர் இறந்தனர். அப்படியென்று தான்கேள்வி. எத்தனையோபேர் ஆற்றிலே குதித்து விட்டார்களாம்; அவர்களைப் பிடித்துத் தள்ளி விட்டார்கள் என்றும் சிலர் கூறுகின்றனர்.''

''அந்தக் கலவரம் எப்படி ஆரம்பித்தது?''

''பழைய கதையேதான்! வேலைக்குப் போய் சாக ஜனங்கள் உடன்படவில்லை.''

''தெரிகிறது, அதற்குத்தான் இந்த நினைவுச் சடங்கா?'' என்றான் சிங்-சி, வியங்கியமாக. ''இஷ்டத்துடன் சாவை ஏற்கவேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர்போலும்!'' என்றான்.

''முட்டாளே! அக்கம் பக்கம் பார்த்துப் பேசு'' என்று தூ-பவோ அவன் காதில் உரைத்தான். ''இப்போது இந்த வெள்ள நிலைமையைச் சமாளித்து விட்டனர். ஆனால் ஆட்களுக்குப் போதும் போதுமென்றாகி விட்டது. சிலர் தப்பி ஓடி விட்டனர். ஏதாவது சற்றுப் புகைந்தாலும், குழப்பம் ஒவ்வொருவரும் தயாராக இருக்கின்றனர்,



செய்ய. காவல் படையினரில் ஒருத்தனை எட்டாவது பிரிவைச் சேர்ந்த சிலர் ஆற்றில் அமிழ்த்து விட்டனராம்.''

''அப்புறம்—?''

''அதற்காகப் பத்து மடங்கு வேலையாட்கள்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளப்பட்டது'' என்றதும் தூ-பவோ தன்னைச் சுற்றி யாராவது ஒற்றுக் கேட்கின்றனரா எனக் கவனித்தான். ''சிங்-சி, இப்போது சமீபத்தில் அஹ்-சென்னை நீ பார்த்தாயா? அவள் இந்தச் சடங்கிற்கு வந்திருக்கிறாளா, தெரியுமா?''

''எனக்குத் தெரியாது! நான் முகாமிலிருந்து கிளம்பும்போது அவளை நான் பார்க்கவில்லை'' என்றான் சிங்-சி.

''ஓ! அவள் முகாமில்தான் இருக்கிறாளா?''

''அதுவும் எனக்குத் தெரியாது'' — சிங்-சிக்குப் புதிர் போல் இருந்தது, திடுமென தூ-பவோ அஹ்-சென் பற்றி அவ்வளவு அக்கறை காட்டவே, சிங்-சியும் அதிகமாக அஹ்-சென்னைப்பற்றி அறிந்தவனன்று. ''எதற்காக அவளைப்பற்றி கேட்கிறாய்?'' என்றான்.

''அதுவா? ...'' —தூ-பவோவின் முகம் வெட்கத்தால் சிவந்தது. ''வேறு எதுவுமில்லை; யாரோ அவளுக்கு ஒரு செய்தி எட்டவிடச் சொன்னார்கள்'' என்றான் அவன் அசடுதட்ட விழித்து. ''அப்புறம் உனக்கு எல்லாம் விளக்கமாய்ச் சொல்லுகிறேன்; அஹ்-ஹூவை நான் முன்னால் தேடிப்பிடிக்க வேண்டும்.''

தூ-பவோ திடுமெனக் கும்பலில் மறைந்து விட்டான்.

மேடை மேல் ஏறி நின்ற ஆள், வீரர்கள் புரிந்த மகத்தான தியாகத்தைப் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தான். சு பேய்-ஹூங்கைப் பற்றி அவன் குறிப்பிட்டதும் சிங்-சி 'தூ' என்று துப்பினான். அடுத்தபடி குவாங்ஹூவாவின் பெயர் வந்தது. அப்போது அவனுடைய இதயம் வேகமாகப் படபடத்தது. தான் கலந்திராது போயிருந்தால் குவாங் ஹூவாங் செத்தேயிருக்க மாட்டான். தன் வஞ்சத்

தால் அல்லவோ அவன் மாள நேர்ந்தது? அதற்காக அவன் உளமார வருந்திஞன். உண்மையில் அவனைச் சாகடித் திருக்க வேண்டியதில்லை. இளம் வயதினன், மூடன், கோழை அவ்வளவுதான். அவன் தாய்க்கு அவன் எப்படி இறந்து போஞன் என்று தெரிந்தால்?

தான் செய்த பாபச் செயல்களைக் குறித்துச் சிங்-சி உள்ளூறத் துடித்தான்.

* * * *

ஸியு-மின் தன் பாய்மீது உறங்கிக் கொண்டிருந்தாள். திடுமெனச் சீதக்கழிச்சல் கண்டதால் அவள் பலவீனமுற்றி ருந்தாள். அஹ்-சென் தன்ஞல் முடிந்த மட்டும் அவளுக்கு சுச்ருஷை செய்து வந்தாள். முகாமின் மருத்துவ விடுதி யிலிருந்து கரி மாத்திரைகளை வாங்கிக் கொடுத்தாள். அதஞல் ஸியு-மின்னுக்கு குணமேற்படவில்லை. குணமாகும் மென்ற வெறும் நம்பிக்கையே தவிர வேறல்ல. அகதிகளுக் பகனச் சிகிச்சை விடுதி எதுவும் அந்த முகாமில் இல்லை. கிடைத்த மருந்து எதுவாயினும் விழுங்கிஞல் நோயினின்று விடுபெறலாமென்று நம்பினர். அஹ்-சென்னுடன் இது குறித்துப் பேசிக் கொண்டிருந்தாள் ஸியு-மின்; நோயிஞல் இறப்பதே உபாதையற்ற மரணமென்று சொன்ஞள்.

''உன்னைப் போல் இளம் பெண், இச்சிறு நோயால் மரணம் நேரிடுமென்று நம்புவது விசித்திரமாக இருக் கிறது!'' என்று அஹ்-சென் அவளை மெல்லக் கடிந்தாள்.

''இந்த முகாமில் எத்தனையோ பேர் சீதக்கழிச்சலால் இறந்து போகவில்லையா? நானும் அந்த மாதிரிச் சாகலாம் அல்லவா? இந்த உயிரை வைத்திருப்பதால் என்ன பலன்?''

''மடப் பெண்ணே! இனிமேல் இதைப்பற்றி உன்னுடன் நான் பேசப் போவதில்லை...எனக்கும் வேறு வேலை இருக் கிறது... போக வேண்டும்'' என்று அஹ்-சென் எதைக் குறித்தோ பரபரப்புக் கொண்டாள். இப்படித் திடுமென அஹ்-சென் நடந்து கொண்ட விதத்தைப் பார்த்து, அவள்



மனத்தை வருத்துவது என்ன வென்று **வினவிஞள்,** ஸியு-மின்.

''சாவைத் தவிர எதைப் பற்றிப் பேசுகிருய் நீ? எனக் குச் சலித்து விட்டதம்மா'' என்ருள் அஹ்-சென் அசிரத்தையாக.

ஸியு-மின் வற்புறுத்திக் கேட்டாள், ''அஹ்-சென், உன் மனசை என்னவோதான் வருத்துகிறது. என்னிடம் சொல்; என்ஞல் முடிந்த உதவியைச் செய்கிறேன்'' என்ருள்.

அஹ்-சென்னுக்கு தரும சங்கடமாகி விட்டது. ''மிக வும் சிக்கலான பிரச்னை; எப்படித் தீர்ப்பதென்றே தெரிய வில்லை எனக்கு'' என்ருள்.

''என்ன பிரச்னையோ?'' — ஸியு-மின் திகைப்புற்றுக் கேட்டாள். ''என்னிடம் சொல்வதற்கென்ன?''

''தூ-பவோ உனக்குத் தெரியுமோ இல்லையோ? அவன்.. எனக்கு உறுதி தந்தான்—''

''உன்னை மணப்பதற்கா உறுதி தந்தான்! அதுவும் இந்தச் சந்தர்ப்பத்திலா?'' என்றதும் ஸியு-மின்னுக்குக் மூண்ட அதிர்ச்சி இவ்வளவு அவ்வளவல்ல.

''பல முறை உறுதி தந்தான் ஸியு-மின்...அவன்...'' பேச முடியாமல் திணறிஞள் அஹ்-சென். ''தூ-பவோ நான் எதிர்பார்த்ததையும்விட ஏற்றவனென்றே படுகிறது. என்னைவிட இளையவன், நல்ல வலிவு இருக்கிறது...அழகா யும் இருக்கிருன்; கலியாணமும் ஆகவில்லை. எனக்குத்தான் ஒரு தரம் ஆகியிருக்கிறது.''—அவளுடைய குரல் மெலி வுற்றது.

''அப்படியாஞல் அவனை ஏற்றுக் கொள்வதுதானே?''

''அது முடியாதே...'' என்று அவள் தலையை அசைத் தாள். சிறிது நேரம் சிந்தித்துவிட்டுத் தொடர்ந்தாள் பேச்சை. தனக்குத்தானே சொல்லிக் கொள்வது போல். ''என்ஞல் எப்படி ஏற்க முடியும்? நீயே சொல்லு, ஸியு-மின். சமீபத்தில் நான் மானக்கேடான காரியம் எத்தனையோ

செய்திருக்கிறேன். என்னை அவன் மனைவியாகக் கொண் டால், எல்லாரும் அவனைப் பார்த்துச் சிரிக்க மாட்டார் களா? மனுஷ்யன் பாவம், நல்லவன். நான் செய்த தவறு களுக்காக அவன் ஏன் அவதிப்பட வேண்டும்?''

''அவனிடம் என்னதான் சொன்னாய்?'' என்று கேட் டாள் ஸியு-மின்.

''நடந்ததையெல்லாம் சொல்லிவிட்டேன்.''

''அதற்கு அவன் என்ன சொன்னான்?''

அஹ்-சென் சற்றுத் தயங்கி கூறத் தொடங்கினாள்: ''நான் பண்ணிய அந்த இழிவு வேலைகளை அவன் பொருட் படுத்த மாட்டானும்...வாழ்வின் மேல் வேட்கையுற்றவர்கள் அப்படிச் செய்வது சகஜம்தான்'' என்றான் அவன்.

''அதுதான் சரி; உன் சமாசாரம் தெரிந்து, அதை யெல்லாம் சட்டை செய்யாமல் உன்னை அவன் ஏற்றுக் கொள்ளத் துடித்தால், அவன் பெரிய மனம் படைத்தவன் என்றே சொல்லவேண்டும். அவனை நீ மணஞ் செய்து கொள்வதற்கு என்ன தடை? ஒருவர்மீது ஒருவருக்கு அன்பு ஏற்பட்டு விட்டால் அதைவிட சுகம் வேறு என்ன இருக் கிறது!'' என்றாள் ஸியு-மின்.

அஹ்-சென் வருத்தத்துடன் சொன்னாள் : ''அவ்வளவு எளிதல்ல. நாங்கள் மணந்து கொள்வதைப் பார்த்து அவ னுடைய நண்பர்கள் ஏளனம் செய்தால், அவன் ஏனோ மணந்து கொண்டோமென்று வேதனைப்படுவான். அப்புறம் இன்பமாக நாங்கள் வாழ்வதற்கே வழியிராமல் போய் விடும்.''

''அவ்வளவு தூரத்திற்கு உன் எண்ணங்கள் ஓடிவிட் டனவா! காலம் செல்லச் செல்ல பழைய மாசு பற்றிய நினைவு எல்லாம் மறைந்துபோய் இன்பமே நிலவும். இந்த முகாமில் எவ்வளவுபேரால்தான் சகஜவாழ்க்கை நடத்திவிட முடியும்? உன்னை மணந்து கொண்டால் தா-பவோ துயரமே படமாட்டான் எனறே நான் நினைக்கிறேன்.''



''ஐயோ, இளம்பெண் அல்லவா, நீ வெளுத்ததெல் லாம் பாலாக நினைப்பவள். இந்த ஆண் பெண்களிடையே உறவில் உள்ள ரகசியங்கள் எல்லாம் உனக்கு எப்படித் தெரி யும்?'' என்றாள் அஹ்-சென். ''ஏதோ உணர்ச்சி வசத் தாலோ, என்னைக் கண்டதும் எழுந்த முதல் மோகத்தாலோ அவன் இந்த முடிவுக்கு வரவில்லை. அவன் இதைக் குறித்து மும்முரமாகவே இருக்கிறான்'' என்றாள்.

''நீ சொல்வது நன்றாகப் புரியவில்லை எனக்கு! அவன் எதைத்தான் வேண்டி நின்றான்?'' என்றாள் ஸியு-மின், புருவம் சுளித்து.

''அந்தக் கதையைச் சொல்லுகிறேன் கேள். நானும் அவனும் இதைக் குறித்துப் பல தடவை பேசியிருக்கிறோம். முதலில் அவன் என்னை மெல்ல வசியம் செய்து கொள்ளவே தான் மிகவும் ஏழை, அப்பாவி என்றெல்லாம் நயமாகப் பேசுகிறான் என்று நினைத்தேன். போகப்போக நான்தான் அவனைத் தவறாகப் புரிந்துகொண்டேன் என்பது தெரிந்தது. உண்மையிலேயே அவன் என்னை உள்ளூறவே காதலித்து என்னைத் தன் மனைவியாக்கிக் கொள்ள விரும்புகிறான் என் பது விளங்கியது. பல தடவை நாங்கள் இருவரும் நெருங் கியே பழகினோம். அவன்தான் சற்றுக் கூச்சப்படுகிறான். இனிமையுடன் நடந்து கொள்கிறான். உண்மையாகவே என்னை நம்பியிருக்கிறான். ஸியு-மின்! நீதான் சொல்லேன், இதெல்லாம் பார்த்தால் எப்படி இருக்கிறது? நான் இத்தனை இழிவாக நடந்திருக்கும்போது அவனுடன் வாழ நேர்ந் தால் என்னை மதிப்பானா? கடைசியாகப் பார்த்தபோது கூட அவனிடம் சொன்னேன், 'உன் காதலுக்கு நான் லாயக்கற்றவள்' என்றே.''

''அவனை ஏற்றுக்கொள்ளப் போவதில்லை என்று முடிவு கட்டி விட்டாயா?''

''எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. மணக் கவும் ஆசை! ஆனாலும், வேண்டாமென்று தோன்றியது. இப்படி ஊசலாடுகிறது என் மனசு.''

அதே சமயம், தூ-பவோவே அறையினுள் எட்டிப் பார்த் தால். ஸியு-மின் கண்ணில் முதல் முதல் அவன் படவே, அவள் மெல்ல அஹ்-செனை இடித்தாள்.

''அங்கே பார்! தூ-பவோ...'' என்றுள்.

''தூ-பவோ!''—அஹ்-சென் சட்டெனத் திரும்பினுள் அவன் பக்கமாக.

''எப்படி. சமாசாரமெல்லாம், அஹ்-சென்?'' —தூ-பவோ குதூகலமாகச் சொன்னுன். ''அஹ்-ஹுவும் நானும் நினைவுச் சடங்கிலிருந்து மெல்ல நழுவி வந்து விட்டோம்.''

''ஒிங்-ஒியை அங்கே பார்த்தாயா?'' என்றுள் ஸியு-மின்.

''அங்கேதான் இருக்கிருன்.''

''தூ-பவோ; நீ இங்கே வந்ததை அவர்கள் கண்டால் அதனுல் ஒன்றும் நேராதே?'' என்று அஹ்-சென் சற்றுத் திகிலுடன் கேட்டாள்.

''அதனுல் ஒன்றும் வராது. சடங்கு நடக்குமிடத்தில் ஒரே கூட்டம். நான் அங்கு இராததை யார் கவனிக்கப் போகிருர்கள்? மேலும், இப்போது எனக்கு ஓய்வு நேரமா யிற்றே!'' என்றதும், தூ-பவோ ஸியு-மின்னை ஒரு தரம் நோக்கினுன். பிறகு அஹ்-சென் பக்கம் திரும்பினுன். ''உன்னுடன் நான் தனியாகப் பேச வேண்டும்...அந்தப் பகக மாகப் போகலாமா?''—இதைக் கூறும்போது அவனுக்கே வெட்கமாகி விட்டது. அவன் இப்படி லஜ்ஜைப்படுவதைக் கண்டு ஸியு-மின்னுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அதை அவளால் அடக்க முடியவில்லை. அஹ்-சென் சற்றுத் தயங்கி, மறுகணமே எழுந்து அவனுடன் வேறு பக்கம் சென்றுள்.

தூ-பவோ, குறுகிய தாழ்வாரத்தை அடைந்ததும் லஜ்ஜையினுல் உடல் நடுக்குற, ''நேற்று உன்னைப் பிரிந்து சென்றதிலிருந்து உன் நினைவே என் மனத்தில். அடுத்த தடவை சந்திக்கும்போது உன் முடிவை வெளியிடுவதாகச் சொன்னுயே...'' என்றுன்.



அஹ்-சென் வாளாயிருந்தாள். படுக்கையருகில் இரு வரும் மெல்ல வந்தனர். ''எதற்காக இப்படி அவசரப் படுகிருய், தூ-பவோ? உனக்கு ஏற்றவளா நான், சொல்லு?'' என்று கேட்டாள்.

''அஹ்-சென், அதையே மறுபடியும் எடுக்கிருயே?'' என்றதும் பாய்மீது அமர்ந்தான் தூ-பவோ. ''பழைய விஷயத்தைப்பற்றிப் பேச வேண்டியதில்லை. என்னை மணக்க உனக்குச் சம்மதமா?'' என்றுன்.

''உன்னை நான் ஏற்பதும், மறுப்பதும் முக்கிய விஷய மன்று. என்னுடைய கவலையெல்லாம் உன்னைப்பற்றித் தான்'' என்று தன் குரலைத் தாழ்த்தினுள் அஹ்-சென். ''தூ-பவோ, என்னைவிட நல்ல பெண் யாராவது இருந்தால், அவளை உனக்குப் பேசி முடிக்கிறேன்'' என்று அவனுடைய கையைத் தன் கைக்குள் வைத்துக் கொண்டாள்.

அவனுடைய கை மெல்ல நடுங்கியது; அவளையே நேராகப் பார்த்தான். ''நீதான் வேண்டும் எனக்கு'' என்றுன் பிடிவாதமாக.

அவனுடைய கண்களையே அவளும் உற்று நோக்கினுள். பழைய நினைவுகள் அவள் மனத்துள் குழுமின—தன் இளமை, அப்போது அவள் அநுபவித்த காதலின் களிப்பு யாவும், மீண்டும் அந்த வாழ்வின் இனிமையும், மென்மையும் அவள் இதயத்துள் குமிழ்த்தெழுந்து பெருகுவதை உணர்ந் தாள். தூ-பவோவைத் தன் உடலுடன் சேர்த்து, ஆர்வத் துடன் முத்தம் தந்தாள்.

வெகு நேரம் மெய்மறந்து போன தூ-பவோ, ''அஹ்-சென், நான் இப்போதே முகாம் அதிகாரியைப் பார்த்து விடுகிறேன்'' என்றுன்.

அவள் தலையசைத்து, ''இதற்குள் இப்படி அவசரப்படு கிருயே...இரு'' என்றுள்.

''இல்லை, அஹ்-சென். எவ்வளவு விரைவாக மணக் கிருேமோ அவ்வளவுக்கு நல்லது'' என்றதும் இன்னும்

அவனை நெருங்கிக் காதோடு, ''நாம் மணப்பதற்கு இனிமேல்
என்ன தடை?'' என்றான்.

தூ-பவோவைத் தன் கைக்குள் அணைத்துக்கொண்டே,
அஹ்-சென் அவன் தலைமயிரை விரல்களால் கோதித்
தந்தாள். வெறும் முத்தம் தந்ததாலேயே தான் காதலிப்ப
தாக எண்ணக்கூடாதென அவனுக்குச் சொல்ல நினைத்தாள்.
'தூ-பவோ, இந்தக் குறிப்பை மன்றலுக்குப் பூர்வாங்கமான
சங்கேதமென நினைத்து விட்டான்; பாவம், அப்பாவி மகன்'
என்று வருந்தினாள். ஆனால் இதையெல்லாம் அவள் வாய்
விட்டுச் சொல்லவில்லை. அவன் மனம் புண்ணாவதையோ,
அவன் காதற் கனவில் அதிர்ச்சி ஏற்படுவதையோ அவள்
விரும்பவில்லை. அவளும் அவனைப்போல் ஒரு காலத்தில்
இருந்தவள்தானே? இறந்துபோன அவள் கணவரைத் தவிர
முன்னர் வேறு எவனுக்குமே இந்த முத்தம் தந்ததில்லை.

''அஹ்-சென்'' என்று மெல்ல அழைத்து அவள் சிந்தனை
யைக் கலைத்தான். ''நான் ஏழை, வக்கில்லாதவன்தான்
மணப் பிரஸ்தாபத்தை எடுக்கக்கூடாதுதான். குடும்பப்
பொறுப்புக்கு லாயக்கற்றவன்தான். நாம் இந்த அகதிகள்
முகாமில் இருக்குமட்டும் நீயும் நானும் கணவன்-மனைவியாக
வாழ்க்கை நடத்த முடியாதுதான். ஆனால் இதையெல்லாம்
விட நான் உன்னை மனமாரக் காதலிப்பது முக்கிய விஷய
மன்றோ? இப்படியே நான் வறுமையிலேயே இருந்து
விடுவேனா? என் உடம்பில் வலிமை இருக்கிறது; நான்
இளமை மிக்கவன். இன்ப வாழ்வே நமக்கு ஏற்படும்''
என்றான்.

''இன்ப வாழ்வா?''—அஹ்-சென் தலையையாட்டி,
''அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை, தூ-பவோ. நீ
என்னைக் காதலிப்பது போலவே நானும் உன்னைக் காதலிக்
கிறேன். ஆனால் என் மனம் இடம் தர மறுக்கிறது. நான்
உனக்கு ஏற்ற மனைவியாக இருக்க முடியாதே!'' என்றாள்.

''நான்தான் சொல்லிவிட்டேனே, உன் பழைய வரலாற்
றைக் குறித்து நான் அக்கறைப் படவில்லை என்று. முடியும்,



முடியாது இரண்டில் ஒன்று சொல், அஹ்-சென்! என்னை
இப்படிக் காக்க வைக்காதே. இப்போதே உன் பதில் தேவை''
என்றான் தூ-பவோ.

என்ன சொல்வதென்று திண்டாடினாள் அஹ்-சென்;
மௌனமாக இருந்தாள். கடைசியாக அவள் வேண்டா
வெறுப்பாய்த் தன் இணக்கத்தைத் தலையசைவால் காட்
டினாள். அவனை அதற்கு மேல் அழவைக்க அவள் விரும்ப
வில்லை. அவன் மீது அவளுக்கும் காதல் படர்ந்தது.
ஆயினும், அந்த மணவாழ்க்கை இன்பமாக இருக்குமென்று
அவள் நம்பவில்லை. அவளை அநுபவித்த பிறகு அவனுக்குச்
சலிப்புத் தட்டக்கூடும்; இந்த பயமே அவளுக்கு. இருப்
பினும், காதலைத் தந்து அவன் கெஞ்சும்போது அவளால்
மறுக்க முடியவில்லை.

களிப்பெய்த அவன், ''அஹ்-சென், நான் உடனேயே
முகாம் அதிகாரியிடம் பேசுகிறேன். நாம் மணந்து கொள்
வோம்'' என்றதும் சற்றுத் தயங்கி, ''இதை எப்படி நிறை
வேற்றுவது? மணச் சடங்கிற்குச் செலவு செய்யப் பணம்
இல்லையே என்னிடத்தில்?'' என்றான்.

''அலட்டிக் கொள்ளாதே, தூ-பவோ...அதற்குச் சில
நாட்களாகும்'' என்று கூறி அஹ்-சென் சிரித்தாள்.

''எனக்கு ஆத்திரமாக இருக்கிறது...சீக்கிரமே முடித்து
விடுவதுதான் நல்லது'' என்றான் தூ-பவோ. விரலிடுக்கு
வழியே வழியும் நீரென வாழ்வு நழுவிவிட்டால் என்ன
செய்வது? அந்த அணையோ மரணதேவன் பசியை ஆற்றிக்
கொள்ளுமிடம். சட்டப்பிரகாரம், மக்கள் நீதி மன்றத்
திற்கு மனுப்போட்டு மணந்துகொள்ள அனுமதிச் சீட்டுப்
பெற வேண்டும். சம்பிரதாயப்படியோ அவனும் அவன்
மனைவியும் தேவதைகளை உத்தேசித்துச் சில சடங்குகளை நிறை
வேற்ற வேண்டும். சம்பிரதாயப்படி மணக்கவே அவன்
விரும்பினான். இதுபற்றித் தன் சந்தேகத்தைத் தீர்த்துக்
கொள்ள அவன் அஹ்-சென்னை நாடினான். அவள் எதுவுமே
சொல்லவில்லை. தன்மீது ஆறாக் காதலுற்றவன் விஷயத்தில்

அவளுக்குத் தனி மதிப்பும், மரியாதை உணர்வும் ஏற்பட்டு விட்டன. கூச்சமும் கூடியது. நன்றியாலும் அநுதாபத்தாலும் அவள் மனம் இளகிக் கசிந்தது.

அவன் கிளம்ப வேண்டிய நேரம் குறுகியது. தூ-பவோ கூறினான்: ''அஹ்-சென், என்னுடைய நண்பர்களைக் கலந்து யோசித்துவிட்டு, இன்று மாலை உன்னை மீண்டும் சந்திக்க முயல்வேன். இராது போனால் நாளைப் பகலில் எப்போதாவது. .'' என்றான்.

''அப்படியே'' என்றதும் அஹ்-சென் முறுவல் பூத்தாள். அவன் கையைத் தொட்டுத் தடவினாள். ''அவசரப்பட வேண்டாம், தூ-பவோ; நிதானமாகவே நடக்க வேண்டிய காரியம் இது'' என்றாள்.

* * * *

அணைக்கரைமீது, ஈமச்சடங்கின் வாக்கியங்கள் முழங்குவது கேட்கவே இல்லை. இருந்தாலும் அங்கே அவலச் சூழ்நிலை நிலவியது.

இயாங்க்ட்ஸி நதிக்குமேலே கனத்த மேகப்படலம். ஒரே இறுக்கம்; தாளமுடியாத வெப்பம். அணைக்கரை ஆட்கள் பயந்தனர், இன்னொரு பெருமழை கொட்டுமோ என்று. ராணுவ மக்கள் பாதுகாப்புப் படைகள் மீண்டும் கலவரம் எதுவும் நடக்காமல் பார்த்துக்கொள்வதற்கு உஷாராகவே இருந்தனர். ஏற்கனவே வேலை செய்வோர், இரண்டாம் பிரிவில் ஏற்பட்ட ரத்தக் களறியால் வெகுண்டிருந்தனர். ஆயுதப்படைகளைவிட எண்ணிக்கையில் அவர்கள் அதிகமாகவே இருந்தனர். மீண்டும் அவர்கள் கிளர்ந்து எழுந்தால் அந்த அணையையே தகர்த்துவிட்டு ஹாங்கோ நகரின் லட்சக்கணக்கான மக்களுக்குப் பெரும் சேதம் விளைவித்தாலும் விளைவிக்கக் கூடும்.

மாண்டவர் நினைவாக நடத்திய இச் சடங்கின் முக்கிய நோக்கம், பாட்டாளிகளின் நலன், பத்திரம் இவற்றைக் குறித்து வேலை வாங்கும் அதிகாரிகளுக்கு அக்கறையும், ஆர்வமும் உண்டு என்று பாசாங்கு செய்வதற்கேயாம். ஆனால்



இதனால் வேலையாட்கள் திருப்தியடைந்து விடவில்லை. அதிகாரிகளின் நயவஞ்சகத்தைக் கண்டவர்கள் ஆனதால், அவர்களுக்கு நம்பிக்கை விழவில்லை. காம்யூனிஸ்ட்டுக்களின் தந்திரங்களில் அதுவும் ஒருவகை என்றே நினைத்தனர்.

அணைக்கரையில் மீண்டும் படைகளின் நடமாட்டம் தோன்றவே காம்யூனிஸ்ட்டுகள் எவ்வளவு நன்றி கெட்டவர்களென்பது தெளிவாகியது. 'ஆடு நனைகிறது என்று ஓநாய் அழுததாம்' என்ற வசனத்தை அவிழ்த்துவிட்டான் ஒருவன்.

ஆகஸ்ட்டு 18-ஆம் நாளன்று உயர்ந்த அளவிலிருந்து ஆற்று வெள்ளத்தின் மட்டம் வெகுவாய் இறங்கிவிட்டது. ஆகஸ்ட்டு 25-க்குள் 1931-இல் கண்ட வெள்ள மட்டத்தின் அளவிற்கு வந்தது. பொலபொலத்த கரையும், உடைப்புகளும் சாங்குங் அணைச்சுவரை எப்போதும் ஆபத்தான நிலைமையிலே வைத்தன. ஆனால் வேலை செய்த ஆட்களில் பெரும்பாலோர் அந்த அணைக்கரை சரிந்து போவதைக் குறித்து விசனமே படவில்லை. எவ்வளவு பாரா இருந்தும்கூட, ஆட்கள் நழுவிப் போய்க் கூட்டம் கூடிப் பேசுவதும், பெண்களைக் குறித்து வம்பளப்பதுமாகவே இருந்தனர்.

ஸூகெங்-ஸெங்கின் போக்கில் தோன்றிய மாறுதல்தான் மிக ஆச்சரியமானது. காங்கித் தலைவனாக அவன் சலிப்பிராமல் தானும் வேலை செய்து, மற்றவர்களையும் வேலைவாங்கி, பெருமையால் பாட்டாளிகளின் வீரமகனாகத் திகழ்ந்திருக்கக் கூடும். ஆனால் இப்போது இந்த உண்மை உழைப்பினால் பலன் எதுவுமில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டான். பாட்டாளி மக்கள் தன்னை ஒதுக்கி விடுவதை அவன் விரும்பவில்லை. இரண்டாவது பிரிவில் பெருத்த அபாயம் நேர்ந்தபோது ஒரு காங்கித் தலைவனை ஆற்றில் தள்ளியதை அவன் தன் கண்ணாலேயே பார்த்தான். அந்த நிகழ்ச்சி அவனுடைய பிரமையைச் சிதறச் செய்தது. அடுத்தபடி தன் முறைவருமோ என்று நடுங்கினான். ஒரு மாதத்துக்குள் அவனது காங்கியில் இருபது பேருக்குமேல் இறந்துவிட்டனர். நடுங்கினான். வெள்ளமோ நவம்பர் வரைக்கும் இந்த அபாய மட்டத்திலேயே இருக்கும்; போகப் போகப் பயங்கர நாட்கள் வரக்கூடும்.

அதனுலேயே தன் வருங்காலத்தைப்பற்றி அவன் சிந்திக்கலானுன். குவாங் செங்குடன் கலந்து, தப்பியோடுவதற்கான திட்டங்களை வகுக்கத் தலைப்பட்டான்.

குவாங் செங்கின் குறிப்பெல்லாம் பக்கத்திலிருந்த கூட்டுறவு நிறுவனத்தின்மீதுதான். அங்கிருந்து ஒரு கோடி டாலர் ஜென்மினிக்பியை* எளிதாகக் கைப்பற்றி, விட்டடிக்க முடியுமென அவன் எண்ணினுன். ஆனல் ஸு கெங்-ஸெங் இந்த யோசனையில் அவனுடன் ஒத்துப்போகவில்லை. அந்த சாகசச் செயலில் அகப்பட்டுக் கொள்ளக்கூடிய வாய்ப்புக்கள் இருந்தன. பணத்தைக் கவர்ந்து ஓடும்போது, துப்பாக்கி ரவைகளுக்கு இலக்காக வேண்டியிருக்குமே?— இரண்டுநாள் இருவரும் சதியாலோசனை செய்தும், செயல் முறையான ஒரு திட்டத்தையும் காணவில்லை.

நினைவுச் சடங்கு நடந்துகொண்டே 'இருந்தது. குவாங் செங், ஸு கெங்-ஸெங்கை அணுகி, ''இருபத்தெட்டாவது காங்கில் ஏதோ புதுக் கலவரம் மூளும்போல் தெரிகிறது'' என்ருன், மிக ஜாக்கிரதையாக.

''உனக்கு யார் சொன்ஞர்கள்? அவர்கள் என்ன செய்வதாக இருக்கின்றனர்?''

''என்னைச் சேர்ந்த ஆளே சொன்னுன் போயேன். 'நம்பக்கூடியதுதான். அணைக்கரையைத் தகர்த்துவிடத் திட்டம் போட்டிருக்கிருர்களாம். காம்யூனிஸ்ட்டுக்கள் அந்தப் பிரிவு ஆட்கள் சிலரை நையப் புடைத்தனராம். அதைத் தாளாமல்தான் இந்த வேலைக்குத் துணிந்து விட்டனராம்'' என்ருன் குவாங்-செங்.

ஸு மௌனமாகக் கேட்டுக்கொண்டான். ஏதோ சிந்தனையில் தலையைத் தாழ்த்தினுன். மோவாயைத் தடவிக்கொண்டான்.

''அவர்களுடன் நாம் சேர்ந்து கொண்டால் என்ன?'' என்ருன் குவாங்-செங்.

சற்றுநேரம் யோசித்துவிட்டு கெங்-ஸெங் 'கூடாது' என்று தலையை ஆட்டினுன். ''இத்தனைப் பாரா, ஆயுதப்

* சீனத்து நாணயம்



படைகள் இருக்கும்போது அது அவ்வளவு எளிதல்ல. அப்படி அவர்கள் செய்தாலும், ஆயிரக்கணக்கில் மக்கள் சாவார்கள். இதில் என்ன நன்மை?'' என்ருன்.

''எப்படியும் நாம் இந்த இடத்தை விட்டுப் போய்விட வேண்டும். சியு-கியாங்கிற்கோ, சுங்கிங்கிற்கோ போய்த் தலையை மறைத்துக் கொள்ள வேண்டியதுதான். நம்மை யாராலும் கண்டுபிடிக்க முடியாது'' என்ருன் குவாங் செங்.

''அது அவ்வளவு சுலபமல்லவே. கையில் கொஞ்சம் பணம் இருந்தால்தான் அது சாத்தியம். யார் வீட்டிலாவது புகுந்து களவாடினுல்தான் இது கிடைக்கும். இரண்டு மாதமாவது ஹாங்கோவில் தலைமறவாகத் திரிவதற்கு அது வேண்டுமே. வெள்ளம் அடங்கியதும் வேறு எங்கேயாவது தப்பித்துச் செல்லலாம்.''

''ஹாங்கோவில் மறைந்துகொள்வதா? அங்கே பந்தோபஸ்த்துப் போலீசாரிடம் மாட்டிக் கொள்வோமே.''

''அங்கே அதிக ஆபத்தில்லை. இந்தப் போலீசிடம் அப்படியொன்றும் மந்திரக்கோல் இல்லை, மடக்கிப் பிடித்துவிட. ஹாங்கோ நகரமே அல்லோல கல்லோலப் படுகிறது.அந்தக் குழப்பத்தில் நம்மை வந்து கவனிக்கப் போகிருர்களாக்கும்? எனக்கு நெருங்கிய நண்பன் வீடு இருக்கிறது அங்கே; அங்கே சில நாட்கள் இருக்கலாம். கேட்டால் அவன் ஏதாவது காரணம் சொல்லிவிடலாம். கையில் காசில்லை; அகதி முகாமிலிருந்து ஓடிவந்து விட்டோம்; ஏதோ சில நாட்கள் தங்கிச் சாப்பிட்டுவிட்டுப் போகிருேம் என்ருல் அவன் மறுக்க மாட்டான், நம்மை நம்புவான். நாம் கண்ட இடத்திலும் தலைகாட்டாமல் இருந்தால் இரண்டு மாதகாலம் பயமின்றிக் கழித்துவிடலாம்'' என்று கெங்-ஸெங் கூறி நிறுத்தி, மீண்டும், ''தப்பி ஓடி எங்கேயாவது அகப்பட்டுக்கொண்டு பிராணனை விடுவதைவிட இது மேலல்லவா?'' என்ருன்.

''ஹாங்கோவில் தலைமறவாகச் சில நாட்கள் இருக்கும் யோசனை அவ்வளவு புத்திசாலித்தனமானதல்ல என்றே எனக்குப்படுகிறது. நான் போட்ட திட்டம் ஆபத்துக்கு

எதுவானதாக இருக்கலாம்; ஆனால் அது பலித்தால் எவ்வளவோ அநுகூலமாயிற்றே பிற்பாடு? கையில் அவ்வளவு பெரிய தொகை இருக்கும்போது தைரியமாக எங்கேயாவது ஒரு நகரில் வியாபாரம் ஆரம்பிக்கலாம். இந்தமாதிரி ஏதாவது துணிந்து செய்தால்தான் நாம் பிழைத்துப்போவோம்'' என்றான் குவாங் செங்.

''அப்புறம் இதைப் பற்றிப் பேசுவோம் குவாங்-செங். இருபத்தெட்டாவது காங்கியாட்கள் இன்றிரவு அணையை நாசமாக்குவாராயின் நாம் மூழ்கிச் செத்துப் போக வேண்டியதே. இந்த மாதிரி அசட்டுத் திட்டங்கள் போடும் சிரமமே நமக்கு இருக்காது'' என்றான் ஸா.

அதே சமயம், வெறி பிடித்தவராய் இருபத்தெட்டாவது காங்கியாட்கள் கரை நெடுகிலும், கிழ்ப்புறம் பள்ளம் வெட்டி அணைக்கரையைத் தகர்க்க மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தனர். தங்கள் உயிர் போனாலும் பரவாயில்லையென அப்படிக் குழிவெட்டி மேற்பார்வையாளரை தீர்த்து விடுவதெனக் கங்கணம் கட்டிக் கொண்டனர். ஆனால் அவர்கள் அந்த நாசவேலையைச் செய்யும்போது அகப்பட்டுக் கொண்டனர். உடனேயே காவலில் வைக்கப்பட்டனர்.

இந்த வீண் முயற்சியைப் பற்றிய செய்தி மாலைப் பொழுதில் கெங்-ஸெங்கிற்கு எட்டியது. ஆற்றையே முறைத்தவண்ணம், தப்பியோடும் எத்திட்டத்திலும் இருக்கும் கஷ்டத்தைக் குறித்துச் சிந்திக்கலானான். எதையும் நிதானமாகச் சிந்தித்து ஜாக்கிரதையுடன் நடத்தும் வயதின் வரம்பை அவன் எட்டியவன். முதுமையின் தொடக்கம்; எதிலும் அலுப்பு. நிச்சயமில்லாத விடுதலைக்காக உயிரைப் பணயம் வைக்க அவன் விரும்பவில்லை.

இருபத்தெட்டாவது காங்கியிலிருந்து சில கிளர்ச்சியாளர்கள், அன்றிரவே தப்பித்துச் சென்று விட்டனர். அவர்களில் ஒருவன் தாசெங். அவன் சகோதரனை குவாங் செங்கை தலைமை அலுவலகத்திற்கு விடியுமுன்னரே, திடுமென அழைத்தனர். அவன் திரும்பவில்லை. கூட்



டாளி இல்லாது போகவே கெங்-ஸெங்கிற்கு தப்பிச் செல்வதில் ஆர்வமே குன்றி விட்டது. வெள்ளத்துடன் போராடுவதே தன் தலையெழுத்தென அவன் ஒரு நிதானத்திற்கு வந்து விட்டான். அப்போராட்டத்தில் முடிவோ யாருமே அறிய வொண்ணாதது; எவருக்குமே புரிபடாதது!

## 12

ஆகஸ்ட்டு 27ஆம் நாள் நடுப்பகலில் சிங்-சி, அணைக்கரையில் தன் வேலைக்குத் திரும்பினான். தலைமை அதிகாரிகளின் நிலையத்திற்குச் சென்ற பிறகு குவாங்-செங்கைப் பற்றி ஒன்றுமே தகவல் இல்லை. எனவே அவனுக்குப் பதிலாக சிங்-சி அவ்வேலையை ஏற்றான்.

முகாமை விட்டுக் கிளம்பும்போது அவனுக்கு மனதே சரியாக இல்லை. காரணம், ஸியு-மின்னின் உடல் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டே வந்தது. அவள் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து மாய்ந்து போவது போலவே இருந்தது. அவளிடம் விடை பெறுகையில், அவள் சொன்ன வார்த்தை ஒவ்வொன்றையும் அவன் நினைத்துப் பார்த்தான். தாங்கள் முடிவாகப் பிரிந்துபோவது போலவே அவளுடைய பேச்சின் போக்கு இருந்தது.

'சிங்-சி, ஜாக்கிரதையாக இரு; உன் குடும்பத்தில் நீ ஒருவனே தப்பிப் பிழைத்திருப்பவன். போனதடவை செய்த மாதிரி உடைப்புக்குள் மூழ்கி மாட்டிக் கொள்ளாதே. நான் என்னவோ பிழைப்பேன் என்று தோன்றவில்லை. எனக்கு எது நேர்ந்தாலும் பரவாயில்லை, சிங்-சி; உன்னை நான் நேசிக்கிறேன்; அதனால் நீ பத்திரமாக இருக்க வேண்டும்' என்றாள் அவள்.

தன்னைக் குறித்து அவள் அதற்குமேல் எதுவுமே பேசவில்லை. அழுகை தொண்டையை அடைக்கவே, 'போய் வருகிறேன்' என்று சொல்லக்கூட முடியாமல் போய் விட்டது. சிங்-சி அணைக்கரைக்கு வந்தபோது அங்குப் பல மாறுதல்களைக் கண்டான். ஸா கெங்-ஸெங் அவன்பால் காட்டிய தந்தைக்குரியது போன்ற பரிவு இப்போது அசட்டையாகவே மாறிவிட்டது. சிங்-சி அவ

னுடன் பன்முறை பேச முயன்றும் அவன் சரியாகவே முகம் கொடுத்துப் பேசவில்லை. வேலை செய்வோரும் அவனுடன் வெளிப்படையாகவே பகைமை காட்டுவது அவனுக்கு வியப்பைத் தந்தது. முக்கியமாக, புதிதாக வந்தவர்கள் அவனை வெறுத்தனர். அவர்களுள் ஒருவன் பின்வருமாறு பேசியதைக் கேட்டான்: ''இந்த அகம் பிடித்த பயல் நம்ம கிட்டேயா வேலை காட்டுறான். பார், ஒரு நாள் இவனை ஆற்றிலே தூக்கித் தள்ளி விடுகிறேன்.''

அவ்வாறு பேசியவன் யாரென்று தெரியவில்லை, சிங்-சிக்கு. உடனேயே அக்கூட்டத்தில் அந்த யோசனையை ஆமோதிக்கும் பலத்த ஆரவாரம் கேட்டு அவன் தம்பித்துப் போனான். தம்மை ஆட்டி வைக்கும் காம்யூனிஸ்ட்டு யஜமானர்கள்மீது தாங்கள் கொண்டிருந்த ஆத்திரத்தையெல்லாம் அவர்களுக்குக் குற்றேவல் புரிபவர்மீதே திருப்பினர் என்பதை சிங்-சி உணர்ந்து கொண்டான். காங்கியின் தலைவனாகி விட்டதால் தானும் அந்தப் பட்டியலில் சேர்க்கப்பட்டுவிடக்கூடும் என்பதைக் கண்டுகொண்டான். எனவே சந்தர்ப்பம் கிட்டியவுடன் அவன் ஸா கெங்-ஸெங்கிடம் சென்று, தன்னை அப்பதவியிலிருந்து உடனேயே விலக்கி விடுமாறு கேட்டுக் கொண்டான்.

''நான் சாகிற மட்டும் நீ பொறுக்கமாட்டாயா?'' என்று கெங்-ஸெங் சற்றுக் கடுமையாகவே சொன்னான். பெருமூச்செறிந்து அவன் மேலும் தொடர்ந்தான்: ''இரு தலைக் கொள்ளியிடையே எறும்பு போல் நான் மாட்டிக் கொண்டு அலைகிறேன். என்னுடைய மேலிடத்தவர்கள் என்மீது ஒருபுறம் அவநம்பிக்கை கொள்ள, மறுபுறம் என் காங்கியில் வேலைசெய்யும் ஆட்கள் பள்ளம் வெட்டி என்னைப் புதைக்கப் பார்க்கின்றனர். இந்த இக்கட்டில் சிக்கிய நான் வெகு நாட்கள் உயிர் பிழைத்திரேன்.''

சிங்-சி திடுக்கிட்டான். நெடு நேரம் வாளாயிருந்து, அவன், ''ஸா மாமா, இங்கே நான் சில நாட்களே வராமல் இருந்தேன். அதற்குள் ஏன் இப்படி எல்லாம் தாறுமாறாகி விட்டது?'' என்றான்.



''ஒருவன் தன் உயிருக்கு ஆபத்து நேரப்போகிறது என்று தெரிந்துகொண்ட பிறகு, அவன் எதைக் குறித்தும் அஞ்ச வேண்டியதில்லை; எதற்கும் துணிந்தவனாகிவிடுகிறான். என்னை இவர்கள் ஆற்றில் தள்ளிக் கொல்லப் பார்க்கின்றனர்'' என்று கூறும்போது கெங்-ஸெங்கின் முகத்தில் ஒரு விகாரச் சிரிப்பு தோன்றியது. ''அப்படிச் செய்தாலும் நல்லதே. என்னுடன் என்னைப் பிடித்த தொல்லையும் போகும்'' என்றான்.

சிங்-சிக்கு குழப்பமாகிவிட்டது. துணைக்கரைக்கு அப்பால் தென்படும் தொலைவை அவன் நோக்கினான். 'வெள்ளம் வற்றிப் போகும், இன்னும் ஒரு வாரத்திற்குள் நீர் மட்டம் இறங்கி அபாயம் விலகிவிடும்' என்று தனக்குத் தானே நம்பிக்கையூட்டிக்கொள்ள முற்பட்டான். 'வெள்ளம் இத்துடன் நின்றுவிடும்; அதன் கடைசி கட்டம் முடிந்து விட்டது. நெருக்கடியான நிலை மாறி எல்லாம் பழைய பிரகாரமாகிவிடுமென மனக்கோட்டை கட்டினான். வேலை செய்யும் மக்களின் ஆக்ரோஷமும் எதிர்ப்பும் இந்தக் கடைசிக் கட்டத்தில் இப்படி வெடிக்கும் நிலைக்கு ஏன் வந்தன என்பது அவனுக்கு விளங்கவே இல்லை.

ஆனால் அவன் நினைத்ததுபோல் நெருக்கடி நிலைமையின் கடைசிக் கட்டம் அல்ல அது. சிங்-சியின் தீவிர விருப்பமே இவ்வாறு நினைக்க வைத்து அவனை ஏமாற்றிவிட்டது. முக்கியமான அணைப் பகுதி பல வாரங்களாக நீருள் ஆழ்ந்திருந்ததால், அது மேலும் நீர் விசையால் வலிவிழந்து வருவதை அவன் மறந்தே போய்விட்டான். ஆகவே, அபாய அளவை எட்டாமல் வெள்ளத்தின் மட்டம் நின்றாலும், அணைக்கரை தகர்ந்து போவதற்கான ஏதுக்கள் இருந்தன.

வேலையாட்களுக்குப் புதிய வேலைகள் தரப்பட்டன. பெரும்பான்மையினரைத் துணைக்கரையை வலுப்படுத்தவும், மராமத்துச் செய்யவும் ஏவினர். எஞ்சியவர்களைப் பிரதான அணையில் மண் கரைந்து போன இடங்களில் மணல் மூட்டைகளைக் கொண்டு நிரப்ப உத்தரவிட்டனர். சாங்குங் அணைக் கரை பல நோய்களுக்கு ஆளாகிப் படுத்திருக்கும் முதிய

வலைப் போலவே காட்சி அளித்தது. வெள்ளம் முற்றிலும் வடிந்தாலொழிய கரையை உறுதிப்படுத்தும் வேலை நிறைவேறாது. அணைக்கரை நெடுகிலும் நடு நடுவே எத்தனையோ சிறு சிறு உடைப்புக்கள். இந்த வேலையில் காலக்கிரமத்தில் பெற்ற அநுபவத்தைக் கொண்டு சிங்-சி, எந்த இடத்தில் அபாயம் நேரிடுமென்பதை எளிதில் தெரிந்துகொண்டான். சிறு உடைப்பானாலும் உரிய சமயத்தில் பழுது பார்க்காது போனால் பேராபத்திற்கே வழிகோலிவிடும்.

ஒலி பெருக்கி மீண்டும் முழங்கியது. ஆற்றின் மேல் பிராந்தியங்களில் திடுமென வெள்ளம் வரக்கூடும். அதனால் எச்சரிக்கையுடன் இருக்குமாறு ஆட்களுக்கு அறிவித்தது. கணவாய்ப் பிராந்தியங்களில் பெருமழைக்கான அறிகுறிகள் தென்படுவதையும், முக்கியமாக கியாங்கன் சமவெளியில் பலத்த மழையை எதிர்பார்க்கலாமென்றும் வானொலிச் செய்தி வெளியாயிற்று. கண்காணிப்பு விமானங்கள் குறிப்பிட்ட பிராந்தியங்கள்மீது பறந்து சென்று, இந்தச் செய்தியை உறுதிப்படுத்தின. ஷாஸியைச் சேர்ந்த இரண்டு ஆட்கள், சிங் ஆற்று வெள்ளத்தைத் திருப்பிவிடும் திட்டம் பலனற்றே போகுமென மனமாரத் திட்டுவதை ஒற்றுக் கேட்டான் சிங்-சி. ஒருவன் சொன்னான்: ''வெள்ளத்தைத் திருப்பறுங்களாம்! எல்லாம் கண்துடைப்பு வேலைதான். இந்தத் துணைக்கரையை வலுப்படுத்துவதெல்லாம் ஜனங்கள் கண்ணில் மண்ணைத் தூவத்தான். ஏற்கனவே எவ்வளவு சேதம் இதனால் ஏற்பட்டது; நாம் பார்க்கவில்லையா?''

''ஒன்றுமேயில்லாததற்கு அது பரவாயில்லையே? இங்கே நம் வேலையை அது சற்று குறைக்கவில்லையா?'' என்று மற்றொருவன் குறுக்கே பேசினான்.

''ரொம்பத்தான் குறைத்துவிட்டது, போயேன்!'' என்று ஷாஸிப் பிராந்தியத்தைச் சேர்ந்த மற்றவன் எடுத்தெறிந்து பேசி, ''அந்தத் திருப்ப வேலையில் இரண்டு லட்சம் ஜனங்களைச் சாவடித்தாங்களே, தெரியாதா? வெள்ளத்தைக் குறைப்பதுதான் திட்டம். ஆனால் அந்தத் திட்டப்படி குறைக்கப் போய் இயாங்க்ட்ஸி பள்ளத்தாக்கில் வெள்ளம்



அதிகமாகப் புகுவதற்குத்தான் வழி பண்ணிவிட்டாங்களே! அந்தத் திருப்பத்தில் வேலை செய்தவங்கள் அத்தனைபேரும் வெள்ளத்திலே மாட்டிக்கிட்டு ஒழிந்தார்களே. அணைகளுக்கு வரும் ஆபத்தைத் தடுக்க என்ன பாடுபட்டார்கள் பாவம்! முடியவில்லை! அந்தப் பிரதேசம் பூராவும் வெள்ளம் குபுகுபுவென்று பாய்ந்துவிட்டது'' என்றான்.

மற்றவன், ''ஆமாம், ஆமாம்... இரண்டு லட்சம் ஆட்கள் எல்லாவற்றையும் இழந்து ஓடினார்கள்; அகதிகள் கூட்டம்தான் அதிகமாச்சு, அதனாலே'' என்று ஒத்துப் பாடினான்.

சிங்-சிக்கும் இந்த வெள்ளத் திருப்ப வேலையில் நம்பிக்கை விழவில்லை. ஆகவே, அது பெரும் தோல்வியடைந்ததென அவர்கள் கூறியதைக் கேட்டு அவன் ஆச்சரியப்படவே இல்லை. அதைரியம் அவனை ஆட்கொண்டது. நிலைமை குறித்து கெங்-ஸெங்குடன் ஆலோசிக்க விரும்பினான். பதினேழாம் காங்கி வேலை செய்யுமிடமெல்லாம் அவனைத் தேடித் தேடிப் பார்த்தான்; அவனைக் காணவே இல்லை. சாங்கைப் போலவே ஸுவும் மறைந்துவிட்டானோ என்று அவன் வேதனைப்படலானான். சூவைப் பார்த்துக் கவலையுடன் ஸுவைப் பற்றி விசாரித்தான். ''அவனுக்கு இப்போது ஓய்வு நேரமாயிருக்கும்; வேலையிராத நேரம் அவன் அணைக் கரைப் பக்கம் தென்படுவதே இல்லை. எவளாவது பெண் பிள்ளை பின்னால் திரிவான், வேறு என்ன வேலை?'' என்றான் சூ.

''இப்படி அவன் முன்பு இருந்தது இல்லையே?''

''இருக்கலாம், ஆனால் காலம் மாறுகிறதோ இல்லையோ! முன்னெல்லாம் வேலையாட்கள் அவனிடம் மரியாதையாக இருந்தனர்; இப்போது வந்திருக்கும் பயல்களோ சமயம் வந்தால் அவனை அடித்து நொறுக்கிவிடுவார்கள்'' என்றான் சூ.

''அவ்வளவுக்கு வந்துவிட்டதா?'' என்று சிங்-சி மெல்ல நகர்ந்து சென்றான்.

''உன்னைத்தான், சிங்-சி'' என்று சூ, அவனைக் கூப்பிட்டு, 'இன்னொரு விஷயம் இப்பத்தான் ஞாபகம் வருகிறது.

சற்று நேரத்துக்கு முன்னுல் நாலாவது பிரிவு தலைமை அலுவலகத்தைச் சேர்ந்த தோழர் ஸூயி இங்கே சிங்-சி என்ற ஆள் யாரென்று அடையாளம் காட்டும்படி என்னைக் கேட்டான்'' என்றுன்.

''எதற்காக?'' என்றதும் சிங்-சியின் இதயம் திகிலினுல் அடித்துக் கொண்டது.

''எனக்கு என்ன தெரியும்? ஆனுல் அவனைப் பார்த்தால் அப்படிச் சங்கடம் இழைப்பவனுகத் தெரியவில்லை.'' ''தோழர் ஸூயி? அவன் பெயர் என்ன?'' என்றதும் சிங்-சிக்கு உதறல் எடுத்தது. குவாங் ஹூவாவின் மரணத்திற்குப் பிறகு, அந்தத் தலைமையக ஆட்கள் எவர் கண்ணிலும் படாமல் இருக்க அவன் படாத பாடுபட்டுவந்தான். ''அவன் பெயர், ஸூயி பெய்-லின், நம் பிரிவின் புதிய மேற்பார்வை அதிகாரி'' என்றுன் சூ.

சற்று நிதானித்து சிங்-சி உஷாராகவே, ''அவனைப் போய் நான் பார்த்தாக வேண்டுமென நினைக்கிருயா?'' என்றுன். ''அது உன் இஷ்டம். அவன் இங்கே எங்கோ தான் ரோந்து போயிருக்கிருன். நீயே அவனுக்கு எதிர்ப் படலாம். நானுக இருந்தால், அவசியம் ஏற்பட்டால்தான் அவனைக் காணச் செல்வேன்; இல்லாதுபோனுல் அவன் கண்ணில் படமாட்டேன். இந்தமாதிரி ஆட்களை நம்பவே கூடாது.''

அந்த சமாசாரத்தை மனத்தைவிட்டு அகற்றுவது அவ்வளவு எளிதாக இல்லை, சிங்-சிக்கு. இது குறித்து இரண்டொரு நண்பர்களுடன் கலந்தாலோசிக்க அவன் விரைந்தான். ஆனுல் அவர்களைக் காண முடியவில்லை. தூ-பவோ அந்தப் பக்கமே தென்படவில்லை. அந்தப் 'புல்தடுக்கி' துணைக்கரையருகில் வேலை செய்து கொண்டிருந்தான். மேலும், வேலை மும்முரத்தில் அவர்களை நெருங்கிப் பேசுவதும் கடினம். கரையருகில் மரக்கால்களை அடுக்கும் வேலை காத்திருந்தது அவனுக்கே. கடைசியில், இந்தத் தயக்கத்திற்கு ஒரு முடிவு காண தானே தோழன் ஸூயியைக் கண்டுவிடுவதெனத் துணிந்தான். அந்த ஆள் பத்தாவது பிரிவில்



இருப்பதாக யாரோ சொன்னுன். ஆனுல் அங்கே அவனைப் பார்க்க முடியவில்லை. இருட்டுகிற சமயம் அவன் தன் இடத்திற்குத் திரும்பினுன். அப்போதும் ஒரு திகில் அவனுக்கு. கரைமீது இணை வரிசைகளில் விளக்குகள் எரிந்தன. அவற்றின் நிழலொளி வளைந்து விழுந்து ஆற்று நீரில் பிரதிபலித்தது. அணைக்கரைக்கு அவன் வந்த முதல் நாள் இரவை அது நினைவூட்டியது. அதே போலக் காட்சி தந்தாலும், ஏதோ படுமோசத்தை அது மறைப்பது போலவே இருந்தது. ஒரு மாதத்திற்கு முன் அணைக்கரையில் நிலவிய அமைதி இப்போது இல்லை. அச்சிறு காலவரம்பில் சினந்தெழு ஆற்றினுல் ஏற்பட்ட கோர சம்பவங்களை அவன் நேரில் கண்டவன். சிறுவனுக இருக்கையில் கவிஞர் ஸூ-துங்-போவின் 'பெருநதி விரையுது கீழ்த்திசையே' என்ற கவிதையை அவன் மனப்பாடம் செய்திருந்தான். கரை மீது செல்லும்போது அவன் தன்னையும் மீறி அதை உரக்கவே பாடிக்கொண்டு சென்றுன்.

'பெருநதி விரையுது கீழ்த்திசையே—வெருவுறு விசையுடன் நீத்தம்...'

''சிங்-சி நீயா பாடுகிருய்?'' என்று ஒரு குரல் அவனைப் பின்னுலிருந்து அழைத்தது.

சிங்-சி திரும்பி நோக்கினுன். தூ-பவோ அவன் அருகில் வந்து கொண்டிருந்தான். மெல்லச் சிரித்து, ''இத்தனை நேரம் எங்கே இருந்தாய்?'' என்றுன்.

''இப்பத்தான் நான் வருகிறேன். வேலைக்குப் போகிறேன். நல்ல காலம், தாமதமாகவில்லை. இப்போதெல்லாம் சற்று உஷாராக நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது. ஸூ மாமா முன்போல் இல்லை. அவனுக்கு என்ன கவலையோ?''

''நீ முகாமிலிருந்தா வருகிருய் நேராக? ஸியு-மின்னுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?'' என்றுன் சிங்-சி, கவலையுடன்.

''ஸியு-மின்?''—தூ-பவோ புருவத்தைச் சுளித்தான்.

''அவளுக்கு ஒன்றுமில்லையென்றே நினைக்கிறேன். அவளை நான் பார்க்கவில்லை. அஹ்-சென்னும் நானும் எங்கள் திருமணத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்.''

''அப்படியானல், நீங்கள் மணந்துகொள்ள உறுதி கொண்டு விட்டீர்கள்...!''

''ஒரு மனதாய்த் தீர்மானித்து விட்டோம். செப்டம்பர் 3-ம் தேதி எங்கள் திருமண நாள். ஜோசியன் லுதான் முகூர்த்த நாள் பார்த்துக் கொடுத்தான். எட்டாவது சாந்திர மாசத்தில் ஏழாம் திதியில் நல்ல யோகம் கூடிய நாள் அது. சிங்-சி, இதுபற்றி உன் அபிப்பிராயம் என்ன? தடபுடலான சடங்கே இல்லை. பிதுருக்களை வணங்கிவிட்டுக் கலியாணத்தை முடித்து விடுவோம்.''

''ரொம்ப அதிர்ஷ்டக்காரன் நீ! மண வாழ்க்கையில் இன்பம் காணப்போகிருய். மணச்சடங்கு எப்படி இருந்தால் என்ன? கனவில்கூடக் காண முடியாது என்ருல்...'' —இவ்வாறு கூறும்போது சிங்-சி நோயுற்றிருக்கும் தன் இனியாளை நினைத்துக் கொண்டான்.

''நீயும் மணம் புரிந்து கொள்ளேன்? எதற்காகக் காலம் கடத்துகிருய்?'' என்ருன் தூ-பவோ.

''எப்படியப்பா? ஸியு-மின்னுக்கு உடல் நிலை சரியாக இல்லையே? நானும் அவளும் கணவன் - மனைவியாக இல்லறம் நடத்துவோமென நான் நினைக்கவில்லை'' என்ருன் சிங்-சி துயருடன்.

தூ-பவோ சற்றுத் தயங்கி, ''சிங்-சி, நம் ஊரில் இது போல் நோய்வாய்ப்பட்டிருப்பவர் மணம் புரிந்து கொண்டதும், நோயினின்று விடுபட்டிருப்பதை நான் கேள்விப் பட்டது உண்டு. சில சமயம் இந்த மணம், மருந்தென வேலை செய்யும். நீயும் முயன்று பாரேன்'' என்ருன்.

சிங்-சி தலையை ஆட்டி, ''உம்...அது நடக்காது. மருந்திராமல் வியாதி குணப்படுமா? நேற்று என்னிடமிருந்த காசையெல்லாம் அவளுடைய மருந்துக்காகச் செலவு செய்தேன். ஆனல் ஒரு குணத்தையும் காணேமே'' என்ருன்.



''அதுதான் சொன்னேன்...அந்தப் பழைய முறையைப் பரீட்சை செய்து பார். அதில் கஷ்டம் என்ன இருக்கிறது? அது வேலை செய்தாலும் செய்யும். ஒரு சமயம் என் தாய் சொல்லியிருக்கிருள்—சவோ மாமாவுக்கு மூண்ட பிணி இந்த வழியில் தீர்ந்ததாம்.''

இவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில், அஹ்-ஹூ பரபரப்புடன் வந்தான். ''பத்தாவது பிரிவில் புதிய தொந்திரவு ஏதோ—இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் ஊரடங்கு சட்டம் அமலாகும் போலிருக்கிறது'' என்ருன்.

''என்ன நடந்தது?''—தூ-பவோ வினவினன்.

''துணைக்கரைப் பக்கம், ஒரு மரச் சட்டத்தில் மேற்பார்வையதிகாரி ஒருவன் தூக்கில் இறந்து தொங்குகிருன். அவன் இறந்துபோய்ச் சற்று நாழிகைதான் ஆகியிருக்குமென்று சொல்லுகிருர்கள். சிங்-சி ஆவல் தூண்டிட, ''அந்த ஆள் யார் தெரியுமா?'' என்ருன்.

''எனக்குத் தெரியாது. சில பையன்கள் நான் கரையிலிருந்து திரும்பி வரும்போது அந்தச் சம்பவத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். மூங்கில் நாரில் கழுத்துச் சுருக்கிட்டு, கழுத்தளவு வரை நீரில் தொங்கிக் கிடக்கிருன்—இருட்டிய பிறகே இது நடந்ததாகத் தெரிகிறது.''

தூ-பவோ சற்றுச் சிந்தித்து, ''இது ஒருத்தன் மட்டும் செய்த வேலையாக இருக்க முடியாது. பல பேர் திட்டமிட்டு இதைக் கச்சிதமாக நிறைவேற்றியிருக்க வேண்டும்...இதை யார்தான் செய்திருப்பார்கள்?'' என்ருன்.

''யாருக்குத் தெரியும்?'' என்ருன் சிங்-சி.

அஹ்-ஹூ தோளைக் குலுக்கி, ''இதில் சங்கடம் எதுவும் இராது போனல் நானே கண்டு பிடித்து விடுவேன். இன்று இரவு நமக்கெல்லாம் நரக அநுபவந்தான். நல்ல காலம், நம் பிரிவிற்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. இரா விட்டால், நம்மையெல்லாம் வாட்டி எடுத்து விடுவார்களே...'' என்ருன்.

செய்தி, வாய் வழியே சரசரவென்று பரவி, வேலை செய்வோரிடையே விரைவில் பகிரங்க ரகசியமாகிவிட்டது. இதைக் கேட்டு ஒருவித குரூர குதூகலமும், தெம்பும் கொண்டனர் ஆட்கள். அணைக்கரையில் மேலும் ஆயுதப் படையினரைக் கொண்டு நிறுத்திவர், அதிகாரிகள். படையினர் ஒன்பதாவது பிரிவில் நிலை கொள்வதைச் சிங்-சி காணும்பொழுது, திடுமென ஸு-கெங்-ஸெங் குடிசைப் பக்கம் தள்ளாடித் தரையில் சாய்வதுபோல் நடந்து செல்வதைக் கவனித்தான்.

சிங்-சி ஓடி அவன் அருகில் நின்றான். கெங்-ஸெங்கின் முகம் மதுபானம் மிதமிஞ்சிப் பருகியிருந்ததால் சிவந்து விளங்கியது. ஒரு மூங்கிற் கழிமீது தலையை முட்டிட்டு உட்கார்ந்தான். அவனுக்கு மூச்சு வாங்கியது. சிவப்பு வளையமிட்ட கண்களை விழித்து சிங்-சியை நோக்கினான். ''என்ன நடந்தது அப்பா...?'' என்றான்.

''பத்தாம் பிரிவில் ஏதோ கலவரமாமே—மேற்பார்வை அதிகாரி ஒருவனை.. ''

''ஆமாம், எனக்கும் தெரியும். ஸுயி பெய்-லின் தானே? அவனைக் கழுத்தை இறுக்கிச் சாகடித்து விட்டார்கள்...''

''என்ன? ஸுயி பேய்-லின்னையா?'' என்றான் சிங்-சி தூக்கிவாரிப் போட்டு. ''அவன்...' என்று இழுத்தான்.

''அவன் என்ன? செத்தொழிந்தான்...'' என்று கெங்-ஸெங் ஒரு நெடு மூச்செறிந்து பாய்மீது விழுந்தான். ''ஓர் உயிரைக் கொல்வதால் என்ன லாபம்? அவனைக் கொன்றது தண்டம்'' என்றான்.

சிங்-சிக்குக் கைகால் ஆடவில்லை. சில நாழிகைக்கு முன்னர்தான் ஸுயி பெய்-லின் அவனைக் காண வந்தது பலபேருக்குத் தெரியும். அவனுக்கு மூண்ட மரணம் சிங்-சியை எவ்வாறு பாதிக்கும்? இதைக் குறித்து அவன் தெரிந்து கொள்ள விரும்பினான். ஸியு-மின்னைப் பற்றித் தான் பயப்பட்டதையும் சொல்லிக் கொள்ளத் தவித்தான். ஆனால் இதையெல்லாம் செவிமடுக்க கெங்-ஸெங்கின்



நிலை சரியாக இல்லையே; குடிமயக்கம் இன்னும் அவனை ஆழ்த்திக் கொண்டிருந்ததே.

''ஸு மாமா, நீ அளவுக்கு மேல் குடித்து விட்டாயா?'' என்றான் சிங்-சி.

''ஆமாம், அப்பனே! அளவுக்கு மேல்'' என்று கெங்-ஸெங் பாயில் இப்படியும் அப்படியுமாகப் புரண்டான். ''என் பொன் பற்கள் இரண்டைப் பிடுங்கி—இரண்டு பொற்காசு எடை உள்ளவை - குடித்து விட்டு, பெண்கள் மத்தியில் சற்றுத் தமாஷாக விளையாடினேன். உன்னுடைய ஸுமாமா, இந்த வியாபாரத்தில் ரொம்பக் கெட்டிக்காரன்'' என்றான்.

''ஸு மாமா..,'' சற்றுத் திகிலுடன் சிங்-சி, ''வேலைக்குப் போக நேரமாகவில்லையோ?'' என்றான்.

''ஆமாம், தெரியும். இன்னும் அரைமணி நேரம் மஜாவாக இருக்கலாம்'' எனறதும் இன்பத்தால் கண்களை மூடி மெதுவாகவே பேசத் தொடங்கினான்: ''சிங்-சி, உன் மாமாவிடம் இந்தச் செய்தியைக் கேட்டுக் கொள். இன்று இரவு அணைக்கரையை விட்டு வராதே. உனக்கு வேலையில் ஓய்வு நேரம் விட்ட போதுகூட வராதே.. ஏதோ நடக்குமென்று எல்லோரும் சந்தேகப் படுகின்றனர். மேலும் தொல்லைகள் வரும் போல் தெரிகிறது.'' சிங்-சி கரைப் பக்கம் வந்து, ''புரிகிறது, மாமா'' என்றான். அந்த இடம் மனிதர் நடமாட்ட மற்றிருந்தது. கண்ணுக்கு எட்டியவரை ஒரே நீர்ப்பரப்பு. கூதிர்கால மழை சிறு தூற்றலாக விழுந்து கொண்டிருந்தது. ஊதைக் காற்று அவன் என்பு வரைக்கும் பாய்ந்து நடுக்குறப் பண்ணியது. ஆற்று நீரில் பிரதிபலிக்கும் லாந்தர் வெளிச்சங்கூட மனிதர் படும் துயரைக் கண்டு சகிக்காமல் அழுகை நீர் வார்ந்த கண்களென ஒரு மருளை எழுப்பின.

ஊதல்களின் ஒலி கேட்டது. இரவு வேலை செய்வோர் துரிதமாகத் தம் இடங்களை நோக்கி நடந்தனர். குடிசையிலிருந்து வெளியே வந்ததும் ஸு கெங்-ஸெங்கை ஒரு

சேவகன் கையுடன் அழைத்துச் சென்ருன். அரைமணி
பொறுத்து அவன் திரும்பினுன். குடிசையோரமாகத்
தூற்றலில் உடலைக் குறுக்கிக் கொண்டு குந்திஞன்.
சிங்-சிக்குச் சமிக்ஞை செய்து, ''நான்காவது உட்பிரிவின்
தலைமை அலுவலகத்தில், ஓர் அவசரக் கூட்டம் நிகழ்ந்தது.
மேலும் ஆட்களை இம்சித்துப் புலன் விசாரிக்கப் புகுந்தால்,
கடைசியில் பெருங் கிளர்ச்சியே வெடித்தெழலாம்; அதனுல்
பத்தாம் பிரிவில் நடந்த சம்பவத்தை ஆராயாமல் அத்
துடன் நிறுத்த வேண்டியதென முடிவு கட்டி விட்டார்கள்
அதிகாரிகள்'' என்றதும் கெங்-ஸெங் காறித் துப்பினுன்.
''ஆனுல் என் பேச்சுப்படி நட. நாக்கை அதிகமாக ஆட
விடாதே. நாகாவாது போனுல் துன்பத்திற்குள்ளாவாய்...''
என்ருன்.

சிங்-சி மழை நீரைத் தன் நெற்றியிலிருந்து வழித்
தெறிந்து விட்டுக் குடிசைக்குள் சென்ருன்.

மழைத் தூற்றலும், ஊதல் காற்றும், அணைச்சுவர்
மீது மோதும் வெள்ளத்தின் ஓசையும் சேர்ந்து தனியே
நின்று தவிக்கும் சிங்-சியின் உள்ளத்தைக் குளிர் நடுக்கால்
ஒடுக்கியே விட்டன.

அந்தத் தனிமையில் அவனுடைய எண்ணங்கள், படுக்
கையில் கிழித்த நார் போல் கிடந்து நோயால் தேய்ந்து
போகும் ஸியு-மின்னை நோக்கியே பறந்தன.

'அவளை நான் உயிருடன் காண்பேனு? அந்தப் பழமை
வழியால் மணம் செய்து கொண்டால், நோய் தீருமென்
கிருர்களே அதைச் செய்து பார்க்கலாமா?' என்றெல்லாம்
அலை பாய்ந்தது அவன் நெஞ்சம். வெய்துயிர்த்து, விதியின்
கொடுமையை நினைந்து புழுங்கினுன்.

'மறுபடி நீர் மட்டம் ஏறும் போல் தெரிகிறது'
என்று யாரோ சொல்வது அவன் செவியில் விழுந்தது.

'ஏறட்டும், ஏறட்டுமே!' — மற்ெருருவன் வெறி
பிடித்துச் சாபனையிட்டான்.



சிங்-சியின் மனமோ இந்த வெள்ளத்திற்கெல்லாம் அப்பால் எங்கோ சென்று விட்டது. மரணத்தை எதிர்நோக்கியிருக்கும் தன் ஸியு-மின்னை நினைக்கும்போது, வானமே பெயர்ந்து விழுந்து தன்னுடைய உடலையும் உள்ளத்தையும் நசுக்கிக் குழைத்து விடுவது போன்ற துடிப்பினை உணர்ந்தான்.

## 13

**வா**ங் தூ-பவோ குதூகலமும் பரபரப்பும்கொண்டிருந்தான். செப்டம்பர் 3 ஆம் நாள், அவனுடைய திருமண தினம். வருங்காலத்தைப் பற்றிய இன்பக் கனவுகளில் அவன் மனம் உலவிக் களிப்பெய்தி இருந்தது. ஆற்றை அவன் கண்கள் நோக்கினவே தவிர, அவன் எண்ணம் அங்கில்லை. 'அடுத்த வருஷமே என் மனைவி எனக்கொரு மகனைப் பெற்றுத் தருவாள்; வெள்ளமும் இறங்கிவிட்டிருக்கும்; பயமின்றி நாங்கள் இருவரும் அமைதியாக வாழ்வோம்' என்று நினைத்தான். ஒரு பெண்ணுடன் இணைந்து இன்பம் பெறுதற்கே மணம் புரிந்துகொள்ள வேண்டுமென அவன் முதன் முதல் நினைத்தான். இப்போதோ அந்நோக்கை விட்டு, உண்மைக் காதலுக்கும், வருங்காலத்தில் நல்லதோர் இல்லறம் நடத்துவதற்கும் மணம் தேவை என்பதை உணர்ந்து கொண்டான்.

இரவு ஆகாயம் படிப்படியாக வெளுத்து வந்தது. காற்று உந்தி, அடர்ந்த மேகங்கள் நகர்ந்துகொண்டிருந்தன. ஒரு நாளெல்லாம் மழை பெய்ததால் நீர் மட்டம் உயர்ந்து கொண்டே இருந்தது. ஆற்றில் நீர் விசையும் வலுத்தது. இப்புது வெள்ளத்தால் என்ன நேரிடுமென்பதை எவருக்கும் சொல்லத் தெரியவில்லை. ஷாஸியிலிருந்து கிடைத்த தகவல் படி, இப்புது வெள்ளத்தின் மட்டம் ஆகஸ்ட்டு 18-இல் தோன்றியதற்குச் சமமாகவாவது இருக்குமெனத் தெரிந்தது. தூ-பவோ இதையெல்லாம் காதில் போட்டுக்கொள்ளவில்லை. விசேஷச் சலுகை பேரில் அவனுக்கு ஓய்வு அளிக்கப்பட்டது. காலை வேலைச்சுற்றிலிருந்து அவன் விடுபெற்ருன். தன் குடிசைக்கு வந்து ஓர் இரண்டு மணி நேரமாவது

நல்ல தூக்கம் போட உத்தேசித்தான். அப்புறம் தலைமயிரை வெட்டிக் கொண்டதும் மாலையில் மணமகன் கோலத்தில் நிற்க வேண்டும் — இவ்வளவு விஷயம் இருக்கும்போது வெள்ளத்தைப் பற்றி அவன் ஏன் மூளையைக் குழப்பிக் கொள்ளப் போகிறான்?

தூ-பவோ எத்தனைக் கெத்தனை மகிழ்ச்சியுடன் இருந்தானோ அவ்வளவுக்கவ்வளவு துயரத்தில் ஆழ்ந்திருந்தான், அவன் வேலை செய்தவிடத்திற்குச் சற்று அணித்தாகவே இருந்த சிங்-சி, விடிகாலையில் சமயம் வாய்த்தபோது ஒருதரம் ஸியு-மின்னை அவன் போய்ப் பார்த்துவிட்டு வந்தான். அவளுடைய நிலைமை முன்னிலும் மோசமாகி யிருந்ததைக் கண்டான். முகம் சுருங்கி வெளுத்துவிட்டது; உடல் வெறும் கூடாகி விட்டது. பேசக்கூடத் திராணி இல்லை. அவள் பக்கமாக மண்டியிட்டு, அவள் தன்னைவிட்டுப் பிரிந்து போகிறாள் என்பதை உணர்ந்து நெக்குருகினான் சிங்-சி. ஏதோ யந்திரம் வேலைசெய்வது போல் தன்வேலையைச் செய்தான். அன்றிரவு வேலையும், சற்றுக் கடுமையாகிவிட்டது. புதுவெள்ளம் வரக் கூடுமென்று நெருக்கடியினால், ஹாங்கோ நகரில் அகப்பட்ட கோணிச் சாக்கையெல்லாம் திரட்டி வந்தனர். மணலையும் துருக்கல்லையும் போட்டு நிரப்பினர். நெருக்கடியானதொரு நிலைமை இருந்தும், வேலை செய்வோர் தம்வேலையில் அக்கறை காட்டவில்லை. லாந்தர் வெளிச்சத்தில் ஆட்களின் முகம் தொங்கிச்சோர்வுற்றிருப்பதைக் கண்டான் சிங்-சி. அவர்கள் ஏன் இப்படி வெறுப்புற்றனர் என்பது இப்போதுதான் அவனுக்குப் புரிந்தது. ஸியு-மின்னின் உயிர் ஊசலாடும் போது அவனுக்கும் வேலையில் மனம் செல்லவில்லை; வெறுப்பே கொண்டான். ஒரு கற்றைச் சாக்குப் பைகளை எடுத்துக்கொண்டு அவன் தூ-பவோவிடம் சென்றான்.

''தூ-பவோ! உன்னை ஒரு யோசனை கேட்கத்தான் வந்தேன்'' என்றான் சிங்-சி.

''கேளேன்; என்ன விஷயமோ? ஆகாயத்தைப் பார்த்தாயா? இன்று எனது திருமணதினமல்லவா, நிர்மலமாக இருக்கிறது'' என்றான் தூ-பவோ பெருமிதத்துடன்.



சாக்குப் பைகளைக் கீழே கிடத்திவிட்டு, தூ-பவோ பக்கத்தில் வந்து குந்திய சிங்-சி, ''மணப்பதால் வியாதி குணமடையுமென்று நீ சொன்னாயே, அதைப்பற்றி எனக்கு விவரமாகச் சொல்லேன். அதற்காக ஏதாவது தனிச் சடங்கு செய்ய வேண்டுமா?'' என்றான்.

''எனக்கு அவ்வளவு தெரியாது; அம்மா சொல்லக் கேட்டிருக்கிறேன்'' என்று பதிலளித்தான் தூ-பவோ.

சிங்-சி தலையைச் சொறிந்து, ''ஓ!'' என்றதும், சற்றுப் பொறுத்துத் தொடர்ந்தான்: ''ஸியு-மின் படுகிடையாக இருக்கிறாள், தூ-பவோ...அவள் தேறுவாளென்று எனக்குப் படவில்லை. உன்னுடைய வழியைச் செய்து பார்க்கலாமென்று நான் நினைக்கிறேன்.''

''சிங்-சி! ஸயாவோ மாமிக்கு இதுபற்றித் தெரிந்திருக்கலாம். நான் முகாமிற்குப் போனவுடன் அவளைக் கேட்கிறேன்'' என்றான் தூ-பவோ.

சிங்-சி ஆந்தரிகமாக, ''ஸியு-மின்னும் நானும் எங்களுக்குள் வாக்குத்தத்தம் செய்து கொண்டிருக்கிறோம். வருங்காலம் எப்படி இருக்குமோ, அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. எங்களுடைய உறவுக்குத் திருமண முத்திரை வைத்துவிடவே விழைகிறேன்'' என்றான்.

''சிங்-சி, ஸியு-மின் தேறிவிடுவாளென்றே எனக்குத் தோன்றுகிறது'' என்றான் தூ-பவோ, அநுதாபம் தொனிக்க.

''இன்று காலை நான் அவளைப் பார்த்தபோது பேசக் கூடச் சக்தியிராமல் இருந்தாள்'' என்று கூறுவதற்குள் துக்கம் சிங்-சியின் தொண்டையை அழுத்தியது.

''என்னிடம் மட்டும் கொஞ்சம் பணம் இருந்தால், அவளைப் பிழைக்க வைத்து விடுவேன்'' என்றான்.

''பேதைப் பெண்'' என்றான் தூ-பவோ. ஏதோ உபசாரத்துக்கு அவன் துயர்ப்படுவது போலிருந்தது. எனினும் கவலையில் ஆழ்ந்திருந்த தன் நண்பன்முன் தன் உள்ளக்

குதுகுதுப்பைக் காட்டிக் கொள்ளாமலே இருந்தான். ''அஹ்-சென்னும் நானும் தெய்வங்களுக்குப் பூசை போட்டு விட்டு மனைவியும் கணவனுமாவோம். ஆனால் இன்று இரவே பதினொரு மணிக்கு அணைக்கரை வேலைக்கு ஆஜராக வேண்டும். இதுவே எங்கள் முதல் இரவு; இருந்தாலும் அதை அந்த முகாமில் துர்நாற்றத்துக்கிடையே கழிக்க வேண்டும்'' என்றான்.

சிங்-சி வலுவில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டான். ''இன்று இரவு வேலைக்குச் சற்றுத் தாமதித்துப் போனால் ஒன்றும் முழுகிவிடாது. சிறிது நேரமாவது மனைவியுடன் இன்பமாகப் பொழுதைப் போக்கு'' என்றான்.

''ஸூ ஏற்கனவேதான் எனக்காக ரொம்பப் பாடுபட்டு ரஜா வாங்கித் தந்திருப்பதாகச் சொல்லி இருக்கிறான். புது வெள்ளம் எந்த நேரம் வருமென்று சொல்ல முடியாது. வேலையை எவ்விதத்திலும் தளரவிட முடியாது'' என்றான்.

''ஏன் அதைரியப்படுகிறாய்? அவளுடன் சிறிது நேரம் இருந்துவிட்டுப் போ'' என்றதும் சிங்-சி எழுந்தான். நீ ஸயாவோ மாமியைப் பார்த்தால் நான் சொன்ன விஷயத்தைப்பற்றி விசாரி—முகாம் பக்கம் வர எனக்கு ஒழிவிராது'' என்றான்.

''கட்டாயமாக விசாரிக்கிறேன். நான் திரும்பி வந்ததும் சொல்லுகிறேனே.''

பொழுது நன்றாகப் புலர்ந்து வெளிச்சமாகிவிட்டது. ஊதல் ஒலி ஏங்கும் கேட்டது. கரைமீதிருந்த விளக்குகள் ஒவ்வொன்றாக அவிந்தன. இரவு வேலை செய்து அலுப்புற்றவர்கள் கொட்டாவி விட்டுக்கொண்டே தூக்கம் போடத் தம் இடங்களுக்குத் திரும்பினர்.

ஸூ-கெங்-ஸெங் தன் விடுதியிலிருந்து வெளிப்போந்து, காங்கித் தலைவர்களைப் பார்த்து, வேலை எம்மட்டில் நடந்துள்ளதெனக் கேட்டான்; பின் இரவு வேலை அறிக்கை சமர்ப்பிக்கத் தன் மேலதிகாரிகளிடம் சென்றான். காலை உணவுக்காக தூ-பவோ காத்து உட்கார்ந்திருந்தான்.



உணவு கொண்டதும் தான் ரஜா வாங்கிக்கொள்ளப் போவ தாகத் தன்னுடன் வேலை செய்தவர்களிடம் கூறினான்.

''படு முட்டாளே! இன்னும் ஒரு மணி நேரமாவது ஆகும் காலை உணவு வருவதற்கு. அதற்குள் ஒரு தூக்கம் போடேன். குரங்கு மாதிரி இப்படியும் அப்படியும் ஏன் அலை பாய்கிறாய்? மணச்சடங்கு நடப்பதற்குள் உன் உடம்பு ஓய்ந்துவிடப் போகிறது பார்'' என்றான் 'புல்தடுக்கி' என்ற ஹூ-வாங் சுவோ-ஷெங்.

''என் கண்ணில் தூக்கம் வரவில்லையே'' என்றான் தூ-பவோ, நகைத்து.

''போய்ப் படு...தானாக வரும். காலை உணவு வந்ததும் உன்னை எழுப்புகிறேன்'' என்று சுவோ-ஷெங் அவனைக் குடிசைக்குள் தள்ளினான்.

ஸூ-கெங்-ஸெங் திரும்பியதும் சூவையும் சிங்-சியையும் தனியாக அழைத்துச் சென்றான்.

''சமாசாரம் வந்திருக்கிறது; இன்று இரவு நீர் மட்டம் கபகபவென்று உயர்ந்து விடுமாம். எல்லோரையும் உஷாராக இருக்கச் சொல்லுங்கள். நெருக்கடி நிலை வந்தால் ரஜா வாங்கிக் கொண்டவர்கள்கூட வேலை செய்ய வந்தாக வேண்டும். மேலிடத்து உத்திரவிது. சிங்-சி, நீ பகலுக்கெல்லாம் வேலைக்குத் திரும்பிவிட வேண்டும். சூ இங்கேயே இரு; போய், அந்தப் பெண்கள் எவ்வளவு கற்களை நிரப்பி இருக்கிறார்கள் பார்'' என்றான்.

சூ தோளைக் குலுக்கிக் கொட்டாவி விட்டான். ''இந்த மாதிரி ஓயாமல் உழைக்க இரும்பால்தான் உடல் பண்ணியிருக்க வேண்டும்'' என்றான்.

''உளறுதேயடா. சில தினங்களுக்கு முன்பு நீ ஓயாமல் தூங்கியது போதாதா?'' என்று கெங்-ஸெங் தன் தலையைச் சொறிந்து, ''இன்னொன்று சொல்ல வேண்டும் உன்னிடம். மேலிடத்துக் கடுமையான எச்சரிக்கை; வேலையில் சோம்பல் காட்டினால் தகுந்த நடவடிக்கை எடுப்பார்களாம். புது

அதிகாரிகள் இப்போது மேற்பார்வைக்கு அமர்த்தப்பட்டுள்ளனர்'' என்றான்.

''அவர்கள் உம்மைப் போட்டு ஆட்டுவார்கள், இல்லையா?'' என்று சூ ஏளனமாக நகைத்தான். ''எங்களை நீர் அதட்டி வேலை வாங்குகிறீர். அவர்கள் உம்மை மிரட்டுகின்றனர். பெரிய மீன் சின்ன மீனைத் தின்கிற கதைதான்'' என்றான்.

''அசட்டுப்பிசட்டென்று உளறாதே...புதிய அதிகாரிகளின் கையில் துப்பாக்கி இருக்கிறது.''

''லூவி-பெய்-லினின் சாவு அவர்களுக்கு ஒரு எச்சரிக்கையாகும்'' என்றான் சிங்-சி. நூறு துப்பாக்கிகளைச் சேமித்துப் பெரும் புரட்சியைக் கனவில் கண்டு உயிரை இழந்த அந்த ஜூ ஹெய் பிங்கின் நினைவு சட்டென அவனுக்கு வந்தது. ''ஜூ-ஹெய்-பிங் உயிருடன் இருந்திருப்பானாயின் இந்த ஆயுதம் தாங்கும் புதிய அதிகாரிகளைத் தீர்த்துக் கட்டியிருப்பான்'' என்றான், உரக்கவே.

''ஹெய்-பிங்!'' என்று உரக்கக் கத்தினான் சூ. அவன் மூழ்கி இறந்து போகாமல் இருப்பின், இப்படித்தான் ஒரு வழியில் செத்து விட்டிருப்பான். ஆ, எந்த மாதிரி வாய் அவனுக்கு! நீயும் உயிரோடு இருக்க வேண்டுமானால் சற்று வாயைப் பொத்திக்கொள்'' என்றதும், சூ தன் தலையைத் தட்டித் தமாஷாக, ''இந்தத் தலைக்குத் தீப்பு எந்த நிமிடம் வேண்டுமானாலும் நேரிடலாம்...என்ன வாழ்க்கை இது!'' என்றான்.

''போதுமடா; சளசளவென்று பேசுவதை நிறுத்தமாட்டாயா?'' என்று கூறிய கெங்-ஸெங், அநுபவம் வாய்ந்த தன் நோக்கை ஆற்றுப் பக்கம் திருப்பினான். தண்ணீரைச் சுட்டி, ''மறுபடி தொந்தரை வரும்போலத் தான் தெரிகிறது'' என்றான்.

சிங்-சி, லூ கட்டிய இடத்தையே கூர்ந்து பார்த்தான். குப்பையும் செத்தையும், உருட்டியோடும் நீரில் கிழக்கு நோக்கி அடித்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தன.



சற்று நேரத்திற்கெல்லாம் ஒலிபெருக்கி வாலாயமாக முழங்குவதுபோல் முழங்கியது: 'வூ-ஹான் சுங்கத் துறையருகில் நீர் மட்டம் 29·21 மீட்டர்; ஷாஸி பகுதியில் 44·13 மீட்டர்...'

''நாசமாப்போக, ஏறுகிறது நீர்!'' என்று அஹ்-ஹூ பரபரப்பினால் எழும்பிக் குதித்தான்.

மீண்டும் ஒலிபெருக்கி — '...தண்ணீர் மட்டம் மேலும் ஏறுமென எதிர்பார்க்கப் படுகிறது...ஹன்யாங் பகுதியில் நிலைமை பரவாயில்லை. வூ-சங்கிற்கு மேல் வாங்கியாங் அணைக்கருகில் இரவில் மூன்று இடங்களில் உடைப்பென அறிவிப்பு வந்தது நம் விரர்கள் உதவிக்கு ஓடினர். வந்த அபாயம் வெற்றியுடன் சமாளிக்கப்பட்டது. வேலையாட்கள் காட்டிய சுறுசுறுப்பு, சலிக்காமல் உழைத்த உழைப்பு இவற்றை வெள்ளத் தடுப்பு மேலதிகாரிகளின் தலைமை நிலையம் பாராட்டும். இதில் உயிர்த் தியாகம் செய்த மாவீரர்களின் நினைவுக்காக ஒரு பிரார்த்தனைக் கூட்டம் 7-ஆம் நாளன்று நிகழ இருக்கிறது...' என்ற செய்தியை விளம்பரப் படுத்தியது.

''நரகத்துக்குப் போக இவர்கள்! இனிமேல் நித்தியமும் மாண்டவர் நினைவாகப் பிரார்த்தனைகள் நடந்தேறும்'' என்று அஹ்-ஹூ மனமாரச் சபித்தான். காலை உணவு தின்பவர் கூட்டத்தில் சேர்ந்து கொண்டான். தூ-பவோ தன் பங்கு உணவைக் குதப்பித் தின்றதும் போக எழுந்தான்.

''தூ-பவோ, கிளம்பி விட்டாயா?'' என்று அஹ்-ஹூ தன் சோற்றுக் குச்சியைப் போட்டுவிட்டு, ''உன் பாடு மஜாதான். இன்னும் ஏதாவது தேவையானால் உபதேசம் பண்ணுகிறேன்'' என்றான்.

''நாசமாகப் போக!'' என்று தூ-பவோ எரிந்து விழுந்தான். மற்றவர்கள் இடி இடியென நகைத்தனர். தூ-பவோ அசடு வழிய, மெல்ல நழுவி விட்டான்.

மேற்கொண்டு நியமிக்கப்பட்ட காவல் படையினர் அணைக்கரைமீது தோன்றினர். இருவர் பதினேழாம்

காங்கிக்கென வந்தனர். இந்தப் புது ஆட்களைச் சேர்த்து ஒவ்வொரு காங்கிக்கும் எத்தனை மேற்பார்வையாளர்கள் என்பதை ஸு-கெங்-ஸெங் கணக்குப் பார்த்தான். ஒன்பதாவது பிரிவில் ஐந்து காங்கிகள் இருந்தன. இந்தப் புதுக் காவலாளிகளுடன், நகரும் மேல் பார்வைச் சிப்பந்திகளும் சேர்ந்து ஐம்பது ஆட்களை வேலை வாங்குவது, கைதிகளை நடத்துவது போலவே இருந்தது. இது போன்ற நிலை ஏற்படவே கெங்-ஸெங்கிற்குத் திடுமென சேயென்று ஆகிவிட்டது. மெலிந்து, கந்தல் உடை அணிந்து, தலை வைத்துப் படுக்க நல்ல இடமிராத, செய்யும் வேலைக்கு அரைவயிற்றுக் கஞ்சிகூடப் பெறாத, ஆபத்துக்களில் அரிய உயிரையும் தியாகம் செய்யும் ஆட்களுக்கா இத்தனை ஆயுதம் தாங்கிகள்? பந்தோபஸ்துப் படையினரோ தின்று கொழுத்து மழுமழுவென்று இருந்தனர். ''நாம் கைதிகள் அல்ல; அதைவிட ஆடு மாடுகள் என்றால் சரியாகப் பொருந்தும்'' என்று கசந்து நினைத்தான்.

அகதிகள் முகாமில் அஹ்-சென், அன்றுமாலை திருமணத்திற்கான ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தாள். மனச் சங்கைகள் எங்கோ மறைந்துபோய், பாட்டின் அடிகளை மெல்ல முனகிக்கொண்டே தூ-பவோவுக்கு ஒரு புது ஜாக்கெட் பின்னிக்கொண்டிருந்தாள். அவள் நிறையப் பணம் சேர்த்து வைத்திருந்தாள். ஒன்றுமே இராத தூ-பவோவுக்காக (நாலு முறை க்ஷவரத்திற்குக்கூட அவனிடம் இருந்த காசு போதாது) அதைச் செலவு செய்வதில் மகிழ்ச்சி கொண்டாள். பின்னல் வேலை செய்யும்போது அவள் தனக்குத் தானே முறுவல் பூத்தாள். இருப்பினும் ஒன்பது ஆண்டுகளுக்குமுன் நடந்த ஒரு சித்திரத்தை அவளால் நினைத்துக் கொள்ளாமல் இருக்கமுடியவில்லை. அவளுக்கு முதல் முறை மணமாகியது, செந்நிற மணவுடை பூண்டது, உற்றார் உறவினர் சூழ விமரிசையாக நடந்த விருந்து, அவள் தெய்வமெனத் தொழுத அந்தக் கணவன்—இந்த நினைவெல்லாம் புரண்டு வந்தது. இப்போது அக்கணவனுமில்லை, மகனும் இல்லை...ஒரு மகளை மட்டும் விட்டுச் சென்றனர். நினைக்கும்



போதே அவளுக்கு உடற்சிலிர்ப்பு மூண்டது. ஒருவேளை இந்த இரண்டாவது மணமும் துயரிலேயே முடியுமோ என்று பெருமூச்சால் அவள் மார்பு விம்மிற்று. பல்லால் ஒரு நூலைக் கடித்து இழுத்து, பின்னி முடித்த ஜாக்கெட்டை உதறி வைத்தாள்.

திருமணத்திற்கென அவள் தனக்குச் செய்துகொண்ட ஏற்பாடுகள் யாவும் மிக எளிதானவையே. ஒட்டுப்போட்ட நீல நிற உடலங்கி; துல்லியமான கால் சட்டை இவ்வளவே. பகட்டான மணவுடை எதுவுமே இல்லை. நன்றாகக் குளித்து, உடையணிந்து, கூந்தலில் எண்ணெய்த் தடவி வாரிக் கொண்டை போட்டிருந்தாள். தாடையில் மெல்லிய சிவப்புப் பூச்சு அணிந்தாள். இரவல் வாங்கி வைத்திருந்த உடைந்த கண்ணாடியில் தன் அலங்காரத்தை ஒருமுறை பார்த்துக்கொண்டாள்.

அவளுடைய வெளுப்பான மேனிக்கு அந்த நீல அங்கி எடுத்துக் காட்டியது. பின்புறம் கொண்டையாகப் போடப்பட்ட அவளுடைய கருநிறக் கூந்தல் அவளுடைய வட்ட முகத்திற்கு ஓர் அழகு தந்தது. மறைத்து வைத்திருந்த தங்க வளையங்கள் அவள் காதுகளில் மின்னின. இவையே அவள் தனக்குச் செய்துகொண்ட சிங்காரிப்பு.

முகாமெங்கும் திருமணச் செய்தி பரவிவிட்டது. சற்று நேரமாவது தொல்லையிலிருந்து விடுபெற்றுத் தமாஷாகக் காலம் போக்கலாமென்று பெண்கள் குழுமிவிட்டனர். அஹ்-சென்னைச் சூழ்ந்துகொண்டு திருமணப் பரிசாகத் தம்மால் இயன்றதைத் தரக் காத்திருந்தனர். அஹ்-சென் எப்போதுமே பிறர் துன்பப்படும்போது, அவர்களுக்கும் ஆறுதல் கூறவும், நோய் வாய்ப்பட்டவர்களுக்குச் சுசுருஷை புரியவும், கவலையில் ஆழ்ந்தவர்களுக்கு நல்ல புத்திமதி புகட்டவும், அநாதைக் குழந்தைகளைப் பேணிப் பாதுகாப்பதும் இவை போன்ற நற்பணிகள் புரிந்தவள். தனக்கு இத்தனை நண்பர்கள், நலத்தைக் கருதுபவர்கள் இருப்பார்களென அவள் நினைக்கவே இல்லை. தூ-பவோ தலைமயிரை ஒழுங்காக மழித்துத் தூய்மையாகக் குளித்துவிட்டு, உள்ளே வந்த

போது இத்தனை பேர் அவனைச் சூழ்ந்திருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தான். அஹ்-சென்னையே பருகிவிடுவது போல் பார்த்து நின்றுவிட்டான். அவனையும் முகாமிலுள்ளவர்கள் சூழ்ந்து நல் வாழ்த்துக் கூறினர். எல்லோரும் போனதும், அஹ்-சென் அவனை நோக்கி மெல்ல முறுவலித்தாள்.

''தூ-பவோ, அற்புதமாக இருக்கிறாய்! நேற்று இரவெல்லாம் நீ உழைத்து வருந்தியவன் போலவே தோன்றவில்லை. என்ன பொலிவுடன் விளங்குகிறாய்!'' என்றாள் அஹ்-சென்.

அவள் மீதிருந்து பார்வையை அகற்றமுடியாமல் உற்று நோக்கிக்கொண்டேயிருந்த தூ-பவோ குனிந்து அவளுக்கு மென்மைமிகு முத்தமொன்று ஈந்தான்.

''நீயும் எவ்வளவு சோபையாக இருக்கிறாய் அஹ்-சென்! கண்ணைப் பறிக்கும் அழகு!'' என்றான் தூ-பவோ.

அவள் வெளிப்படையாகச் சிரித்து அவனுடைய கையைப் பற்றினாள்.

''இதென்ன பிதற்றல்! காரியத்தைக் கவனிப்போம். சோதிடர் லூ நமக்கு உதவி செய்வதாகச் சொல்லியிருக்கிறார். மணச்சடங்கைப்பற்றி அவருக்கு நன்றாகத் தெரியும்'' என்றாள் அஹ்-சென்.

''நல்லது, அஹ் - சென்...அவரைப் பார்த்தாயா இன்று?''

''அதிகாலையிலேயே பார்த்தேன். சின்ன மணப்பரிசும் அனுப்புவதாகச் சொன்னார்.''

''மணப்பரிசா? அவரிடமிருந்து அதைப் பெறுவது உசிதமா? நாமெல்லாம் அகதிகளாக வந்தவர்கள்; பரிசு வழங்குவதற்குத்தான் சக்தி ஏது?''

''தனக்கு அதனால் ரொம்பச் செலவில்லை என்று லூவே கூறினார்'' என்றதும் அஹ்-சென் அவன் கையைத் தட்டி, ''இரண்டு சேர் இறைச்சி, இரண்டு மீன் வாங்கி வைத்திருக்-



கிறேன், மண விருந்துக்காக. நாம் லூவையும் அழைப்போம், இந்த விருந்துக்கு'' என்றாள்.

சொல்லும்போதே லூவும் அங்குப் பிரசன்னமானான். வயது அறுபதுக்குமேல் இருக்கும்; சிறிய உடலமைப்பு. வாழ்வெல்லாம் சுவடிகளைப் படித்துப் படித்து முதுகு வளைந்து போயிருந்தது அவனுக்கு. தூ-பவோ அவனை வரவேற்க எழுந்தான்.

''வணக்கம், லூ. இவ்வளவு அக்கறை கொண்டதற்கு எப்படி நன்றி உரைப்பதென்றே தெரியவில்லை!'' என்றான் தூ-பவோ.

லூ கையில் ஒரு காகிதச் சுருளை வைத்துக்கொண்டு தூ-பவோவை அணுகிப் புன்னகை செய்து, ''பெரிதாக என்ன செய்துவிட்டேன், தம்பி? இந்தக் காகிதத்தில் என் கையாலேயே உங்களை ஆசீர்வதிக்கும் நிமித்தம் ஏதோ கிறுக்கியுள்ளேன்'' என்றதும், இரண்டு சிவப்புக் காகிதச் சுருள்களைப் பிரித்தான். அவற்றில் பெரிய அளவான நான்கு வாக்கியங்கள் வரையப்பட்டிருந்தன. ஒன்று: 'நீங்கள் இணைந்து நூறாண்டு வாழ்வீராக!' மற்றொன்று: 'நீங்கள் ஒருவருக்கென ஒருவர் காதலுடன் வாழ்வீராக!'

இவ்வாறு அக்கிழச் சோதிடனின் அன்பு கனிந்த வாழ்த்துக்களால் தூ-பவோ நெக்குருகிவிட்டான். அவனைப் பன்முறை வணங்கினான், இன்பம் பூரிக்க நிற்கும் தம்பதியைப் பார்த்து லூ முறுவலித்து, ''நீங்கள் தயாராவதற்குள் நான் இதோ திரும்பிவிடுவேன். தூ-பவோ, அணைப்பக்கம் எப்படி இருக்கிறது நிலவரம்? மறுபடி நீர்மட்டம் ஏறுகிறதாமே, நிசந்தானா?'' என்றான்.

''ஆமாம்; ஏறத்தான் செய்கிறது...ரொம்ப சிரமம் கொடுத்துவிட்டேன், லூ'' என்றான் தூ-பவோ. லூ சென்றதுமே, தூ-பவோ அந்தக் காகிதச் சுருள்களைத் தட்டி மீது ஒட்டினான். அஹ்-சென்னை நோக்கி, ''நாம் நூறாண்டு காலம் இருப்போமா என்பது சந்தேகந்தான்...'' என்றதும், சற்று நிதானித்து, உடனே லஜ்ஜைக்குள்ளாகி, ''ஆனால்

அஹ்-சென், நாம் இன்பமாகக் காலம் கழிப்பதற்கு நான் என்ன முயற்சி வேண்டுமானாலும் செய்யக் காத்திருக்கிறேன்'' என்றான்.

''நானுந்தான், தூ-பவோ'' என்றாள் அஹ்-சென், மெதுவாக. பிறகு அவள் தான் பின்னிய நூல் சட்டையை எடுத்து தூ-பவோவுக்கு அணிவித்தாள். தனக்கு வாய்த்திருக்கும் மணப்பெண் இவ்வாறு தன்னை அலங்காரம் செய்தது அவனுக்கு இன்ப ஊறலை எழுப்பியது. ஆனால் அவளோ அதைக் கவனியாது கைப்புறமெங்கும் சட்டையை ஒழுங்குபடுத்தினாள். பின், அந்த உடையில் அவன் அழகு எவ்வாறு தோன்றுகிறதென ஒதுங்கி நின்று கவனித்தாள்.

''சரியாக அமைந்துவிட்டது...பேஷாக இருக்கிறது!''

''இதென்ன சங்கடம்...மணப்பெண்ணுக்கு நான் தர வேண்டும், நகையும் நட்டும்...'' என்றதும் அவன் வெட்கிப் போனான்.

''நீ குழந்தையைப் போல் வெட்கப்படுகிறாயே, தூ-பவோ! நாம் இருவரும் மனைவி கணவனென்பதை மறந்துவிட்டாயா? எதையும் பங்கிட்டுக்கொள்ள வேண்டியதுதானே?'' என்றபடி அஹ்-சென் புன்முறுவல் பூத்தாள். ''வெள்ளம் வடியட்டும்; மறுபடியும் வாழ்வில் அமைதி வந்ததும், உனக்குப் பிடித்ததையெல்லாம் எனக்குப் போடேன்'' என்றாள்.

இப்படிச் சொன்ன பிறகுதான் அவனுக்குச் சற்று தலை தூக்க முடிந்தது. அவன் சிரித்து நன்றியைச் செலுத்த முத்தம் தந்தான். ஸியு-மின், சிங்-சி இவர்களும் மணந்து கொள்ள விரும்புவது சட்டென அவன் நினைவுக்கு வரவே அதைப்பற்றி அஹ்-சென்னிடம் சொன்னான்.

''தன் உயிரைக் காப்பாற்ற இது கடைசி முயற்சி, வெற்றி தராத முயற்சி என்பது ஸியு-மின்னுக்குத் தெரிந்துவிடும். அவளுக்கு இதனால் நல்லதைவிடக் கேடே விளையும்.'' என்றாள் அஹ்-சென் மெல்ல.



''இதைப்பற்றி ஸயாவோ மாமியைக் கேட்கச் சொன்னான் சிங்-சி. அவனும் ஸியு-மின்னும் ஏற்கனவே வாக்குத் தத்தமானவர்களாம். ஸியு-மின்னை மணந்து கொள்ள அவன் துடிக்கிறான். அவள் வாழ்வதற்குத் தன்னால் ஆனதையெல்லாம் செய்யக் காத்திருக்கிறான்'' என்றான் தூ-பவோ.

''எதற்கும் நாம் ஸியு-மின்னை முதலில் போய்ப் பார்ப்போம்; அப்புறம் ஸயாவோ மாமியுடன் கலந்து ஆலோசிப்போம்'' என்றதும், அஹ்-சென் எழுந்தாள். ''இன்று காலையே பிடித்து அவளைப் போய்ப் பார்க்க எனக்கு ஒழியவே இல்லை'' என்றாள்.

எழுந்து குந்தக்கூட முடியவில்லை ஸியு-மின்னால். ஆனால் அவள் மனம் மட்டும் தெளிவாகவே இருந்தது. உடம்பில் திராணி நிமிடத்துக்கு நிமிடம் குறைந்து வந்தது. சிங்-சியை அவள் பார்க்கத் துடித்தாள்.

தூ-பவோவும் அஹ்-சென்னும் வருவதை நோக்கி அவள் பலவீனமாகச் சிரித்தாள். இருவரும் இன்ப வாழ்வு நடத்த வாழ்த்தினாள். ஸியு-மின் உருமாறி நோய்க்கு இரையாகியிருப்பதைக் கவனித்து, உடனேயே விஷயத்திற்கு வந்தான். ''சிங்-சி, உன்னைச் சீக்கிரமே மணந்து கொள்ளப் போவதாக என்னிடம் சொன்னான்'' என்றான்.

''அப்படியா!'' என்றதும் மழுங்கிய முறுவல் அவள் வற்றிய முகத்தில் சற்று ஒளிர்ந்தது.

''நான் மணமகளாவதற்கு வாய்ப்பே ஏற்படாதென்று நினைக்கிறேன்'' என்றாள்.

''ஸியு-மின், கட்டாயம் வாய்ப்பு இருக்கிறது'' என்று அஹ்-சென் அவளுக்கு உறுதி புகன்றாள். ''இதுவரை நீ சகித்து வந்திருக்கிறாய். கடைசியில் நீ இந்த நோயிலிருந்து விடுபடுவாய்'' என்றாள்.

ஸியு-மின் தலையை ஆட்டினாள், தனக்கு நம்பிக்கை இல்லை என்பதைக் குறிக்க.

''இவ்வளவாவது என்னை வந்து பார்த்தீர்களே; அதுவே போதும்'' என்று சொல்லும்போது அவளுடைய குரல்

மழுங்கிவிட்டது. ''உங்கள் திருமணம் உங்களுக்கு நல் வாழ்வைத் தரும்! இன்பம் காண்பீர்கள்!'' என்றாள். அஹ்-சென்னுக்கு கண்ணீர் வெடித்து வந்தது; அந்த இடத்தில் நிற்க அவளுக்குத் தைரியமில்லை. தூ-பவோவையும் மெல்லச் சீண்டி வந்துவிடுமாறு கூறினாள். ஸியு-மின் தொடர்ந்தாள்: ''தூ-பவோ, சிங்-சிக்கு உடம்பு ஒன்றுமில்லையே?''

''நன்றாகவே இருக்கிறான். இன்று உன்னைக் காண வர அவனால் ஆகாது. நீர்மட்டம் உயர்ந்து வருகிறது. நாளை எந்த நேரமாவது உன்னை வந்து கட்டாயம் பார்ப்பதாகச் சொன்னான்.''

''நாளைக்கா?... உம்!...''—ஸியு-மின் வீட்டுக் கூரையையே வெறித்து நோக்கினாள்.

''ஐயோ சிங்-சி! நான் அதுவரைக்கும் இருப்பேனா?''

''ஏன் இருக்காமல்?'' என்று அஹ்-சென், அவளுக்குத் தைரியம் தந்தாள். ''உடம்பை அலட்டிக்கொள்ளாதே. மறுபடி உன்னை வந்து பார்க்கிறேன். திகில்படாதே. உடம்பு தேறி நீயும் இன்பம் காண்பாய், அம்மா!'' என்றாள். ஸியு-மின் பேசவில்லை; அசையாமல் இருந்தாள். தன்னை சிங்-சி வந்து காணுவான் என்ற நம்பிக்கையில் அவள் பிராணனைப் பிடித்துக் கொண்டிருந்தாள். இப்போதோ, அவளுக்கு எல்லாம் ஒடுங்கிவிட்டது போன்றே இருரதது. மறுநாள் தான் உயிரோடு இருப்போமென்ற நம்பிக்கை அவளுக்கு இற்று வந்தது. அவள் கன்னங்களில் விழிநீர் ஆறாகப் பெருகியது.

சற்று நாழிகை பொறுத்து ஸயாவோ மாமி அவள் பக்கவில் வந்து உட்கார்ந்தாள். சில நாட்களாக அந்த மாமி ஒருத்திதான் அவளைக் கவனித்துப் போகிறாள். ஸியு-மின் மூக்கால் 'பேசினாள்: ''ஸயாவோ மாமி, எனக்கு எவ் செய்கிறீர்கள். என்ன கைம்மாறு செய்வது இதற்கெல்லாம்... என்னால் முடியாதே!''

''குழந்தே, அப்படியெல்லாம் சொல்லக் கூடாது. நான் சொல்வதைக் கேள்: சிங்-சி உன்னைப் பழைய முறைப்படி



மணந்துகொள்வதால் உன் வியாதி தீருவதற்கு வழியிருக்கிறது. இப்போது உனக்கு உடம்பு அதிகம்தான். அந்த மணமுறை நடந்துவிட்டால், தெய்வம் கண்ணைத் திறந்தாலும் திறக்கும். உனக்கும் உடம்பு சொஸ்தமாகிவிடும்'' என்றாள் அந்த முதியவள். ஸியு-மின்னிடமிருந்து இதற்கு என்ன பதில் வருகிறதென்று பார்த்தாள். அவள் எதுவுமே பேசாதிருக்கவே, ''சிங்-சி உன்னை வாங் குடும்பத்தில் ஒருத்தியாக்க விரும்புகிறான். அந்தக் கலியாண முறைக்கு அற்புத சக்தி உண்டென்பது எல்லோருக்கும் தெரியும். அதைப் பின்பற்றிப் பார்ப்பதில் தவறொன்றுமில்லை, ஸியு-மின். நாங்கள் இங்கே உனக்கு அனுசரணையாக இருக்கும்போது ஏன் யோசிக்கிறாய்? ரொம்ப சுலபம் இது. வேறொன்றுமில்லை; இரண்டு மெழுகு வத்தி ஏற்றி, முன்னோரை வழிபட்டு வணங்கினால் போதும்'' என்றாள்.

''ஸயாவோ மாமி! என்னைப் பார்க்கிறாயே, எழுந்திருக்கவே சக்தியில்லையே எனக்கு... எம்படி மூதாதையரை நான் வணங்குவது?'' என்றாள் ஸியு-மின், அழுகை வெடித்து வர.

''ஸியு-மின், அது வெறும் சம்பிரதாயம்தான். நீ எழுந்திருக்கவே வேண்டாம். அந்த எண்ணம் இருந்தாலே வேலை செய்யும்.''

நெடு நேரம் வாளாயிருந்து ஸியு-மின் மெல்ல முனகினாள்: ''ரொம்ப காலம் கடந்துவிட்டதென்றே நினைக்கிறேன், மாமி!..''

கட்டடத்தின் வேறொரு மூலையில் சோதிடன் லூ மணச் சடங்கை நடத்தி வைத்துக்கொண்டிருந்தான். இரு மெழுகு வத்தி விளக்குகள் ஏற்றப்பட்டன. வாங் தூ-பவோவும், அஹ்-சென்னும் பக்கத்தில் பக்கத்தில் நின்று, முன்னோரை நினைந்து வணங்கினர். தூபம் கொளுத்தினர். ஒருவருடைய கைத்தலத்தை மற்றவர் பற்ற, இல்லறம் நடத்தச் சங்கிற்பித்துக் கொண்டனர். தம்பதிக்கும், அங்கு வந்த சில பெண்களுக்கும் ஒரு சிறு தரும போதனையை லூ நிகழ்த்தினான்.

பதினைந்தே நிமிடங்களில் மணச் சடங்கு நிறைவேறி விட்டது.

புதுமண தம்பதியும், விருந்தினரும் பாய்மீது அமர்ந் தனர். எல்லோருக்கும் அஹ்-சென் இனிப்பு நீர் வழங்கி ளுள். மணமக்களின் நல்வாழ்விற்காக எல்லோரும் ஆசிகூறி அருந்தினர். விருந்தினர் அகன்றதும் அறையில் தட்டியை மூடிவிட்டான் தூ-பவோ. கண்கள் ஒளிவிட அஹ்-சென் பக்கம் திரும்பி அவளை வாரி அணைத்துக் கொண்டான்.

''தூ-பவோ, ஜாக்கிரதை! மெழுகுவத்திகளைத் தள்ளி விடப் போகிருய்'' என்ருள் அஹ்-சென்.

ஆனல் அவளுடைய எச்சரிக்கையை அவன் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. அவளை இறுகப் புல்லினன். உணர்ச்சி வேகத்தில் அவன் நிலைதடுமாறி விளக்குகளைச் சாய்த்துவிட்டான். ஆசிகள் அடங்கிய அந்தக் காகிதங்கள் பற்றி எரியலாயின. அணைப்பிலிருந்து அஹ்-சென்னை மெல்ல விலக்கி நெருப்பை அவித்து அந்தக் காகித லிகிதத்தைக் காப்பாற்ற ஓடினன். அஹ்-சென்னும் வந்து உதவி புரிந் தாள். இந்த துர்நிமித்தத்தை தூ-பவோ பெரிதாக எண்ண வில்லை; அவன் சிரித்தான். ''நல்ல காலம், நெருப்பு தட்டி யில் பற்றியிருந்தால் இந்த முகாமே சாம்பலாகிவிட்டிருக் கும்'' என்ருன். ஆனல் எரிந்து கருகிப்போன அந்த காகித ஆசிகளைக் காணும்போது அஹ்-சென்னுக்கு மட்டும் அப சகுனம் போலவே பட்டது. தன் கணவனைத் தன் மார் போடு அழுத்திக் கொண்டபோது, காதல், அச்சம் இரண் டுமே அவள் இதயத்தை ஆட்டி வைத்தன.

ஸியு-மின் பக்கத்தில் அமர்ந்திருந்த ஸயாவோ மாமி யிடம் இந்தத் திருமணத்தைப் பற்றிக் கூற விருந்தினருள் ஒருத்தி வந்தாள்.

''ஏதோ தான் காதலித்த புருஷனை அவள் மணந்து கொண்டாள். அதைப் பார்க்க நமக்கெல்லாம் திருப்தியாக இருக்கிறது. முகாமில் இதுவே முதல் சுப சம்பவம் அல்லவா!''



''மணச் சடங்கு முடிந்துவிட்டதா?'' என்ருள் ஸியு-மின், கண்களை மலர்த்தி.

''ஆமாம், ஸியு-மின். நாளைக்கு உன்னுடைய மண நாள்!'' 'நாளை' என்ற அந்தச் சொல்! அந்த 'நாள்' இன்னும் எவ்வளவோ தொலைவில் இருக்கிறதே!—ஸியு-மின் னின் வற்றிய மேனியில் ஒரு சிலிர்ப்பு பரவியது. அதைக் கண்டதும் ஸயாவோ மாமிக்கும் நாளை வரை அவள் தாள மாட்டாள் போலவே தோன்றியது. சிங்-சிக்குச் செய்தி அனுப்ப யாராவது இருக்கிருர்களா என்று அவள் பார்த் தாள். எவருமே இல்லை. எல்லோரும் அணைக்கரைக்குச் சென்றுவிட்டனர். பெண்களும் அவ்வாறே. தூ-பவோவும் அஹ்-சென்னுமே இதைச் செய்யக் கூடியவர்கள். ஆனல் அவர்கள் மணந்துகொண்டு இன்னும் சற்று நேரங்கூட ஆக வில்லையே. இந்தத் துயரச் செய்தியைச் சொல்லுமாறு அவர்களை நாடக் கிழவிக்கு மனமில்லை. என்ன செய்வ தெனத் தோன்ருமல் விழித்தாள்; துடிதுடித்தாள். அஹ்-சென் அச்சமயம் மணச் சாப்பாட்டில் தன்னுடன் கலந்துகொள்ள அவளை அழைக்க வந்தாள். ஸயாவோ மாமி தலையை ஆட்டி, ''எப்படி வருவது? இவளுடைய நிலையைப் பார்'' என்று மறுத்து விட்டாள். ''போய், நீயே பார். ரொம்ப நேரமாக இவளிடமிருந்து ஒரு சப்த மும் வரவில்லை. இன்னும் தாடையில் கொஞ்சம் தள தளப்பு இருப்பது மெய்தான். இருந்தாலும் இன்னும் ரொம்ப நேரம் நீடிக்காது. சிங்-சி அதற்குள் இவளை வந்து கடைசி முறையாகக் காண்பாளு என்பது சந்தேகமே...'' என்ருள்.

''ஸயாவோ மாமி...'' என்று அஹ்-சென் கதறினள்.

''போய்ப் பார்... நாம் என்ன பண்ணலாம்?''

ஸியு-மின் அருகில் சென்று குனிந்து பார்த்தாள் அஹ்-சென். ஒரே இருள் அறையில். மஞ்சளாக, மங்கலாக ஒரு விளக்கு மட்டும் சற்று வெளிச்சம் தந்தது. ஸியு-மின் கண்களை மருள மருள விழித்தாள். மென்முறுவல் அவள் இதழ்க் கடையில் அரும்பியது. ''சிங்-சி வந்துவிட்டாரா?'' —அவளுடைய குரல் கணீரென ஒலித்தது.

''ஸியு-மின்! கண்ணு, இதோ பார்!'' என்றதும் ஸயாவோ மாமி மண்டியிட்டு, அப்பேதையின் மெலிந்த உடல்மீது கையை வளைத்து போகும் உயிரைச் சற்றுத் தாங்கிப் பிடிப்பதே போல— ''அவன் சீக்கிரமே வந்து விடுவான்...'' என்று உதடுகள் துடிக்கச் சொன்னாள். ஸியு-மின்விடமிருந்து சப்தமே வரவில்லை. சற்று நேரம் கழித்து விழிகளை அகல விரித்தாள். சுற்று முற்றும் அவளுடைய நோக்கு ஓடியது. என்னமோ திருப்தியடைந்தாற்போல் மென்னகை ஆடியது அவள் முகத்தில். ''ஸியு-மின், உனக்கு என்னம்மா வேண்டும்?''

''எனக்கு ஒன்றுமே தேவையில்லை. நன்றி!''

கூதிர்காலத்து மழைத் தூற்றல் விழுவது விடுதியின் கூரைமேல் பறையொலி போல் கேட்டது. பக்கத்தில் இருந்த இடிந்த ஆலயத்தின் வெறிச்சோடிய முன்றிலில் ஒரு காற்று ஊதிச் சென்றது. அஹ்-சென்னுக்கு,`இந்த மழையும் காற்றும், ஆடவனின் அணைப்பினுள் காதலும், மென்மையும இனிமையும் தோய்ந்த ஓர் இன்பத்தின் இன்னிசையாகவே இருந்தது. ஸியு-மின்னுக்கோ அவை அவள் உலகை விட்டுப் பிரிவதற்கு நீட்டி முழக்கி விடையளிப்பது போலவே இருந்தது.

## 14

இரவு வந்ததுமே எதிர்பார்த்தது போல் வெள்ளநீர் மட்டம் உச்சத்தை எட்டி, புல் பூண்டு, வைக்கோல் முறிந்த வீடுகளின் பகுதி, வேருடன் பெயர்ந்த மரங்கள் இவற்றை அடித்துக்கொண்டு கீழ்த்திசை நோக்கிப் பாய்ந்தது. இரு மடங்கு விசையுடன் அணைக்கரைமீது அது மோதிப் புடைத்துச் சென்றது. சில நாட்கள் அமைதியில் இருந்த பிறகு இந்த ஆற்றின் உக்கிரம் பார்க்கப் பயங்கரமாக இருந்தது.

ஆகஸ்ட்டு 18-இல் இருந்த அளவை எட்டாது போனாலும் ஆற்றின் விசை மிகத் தீவிரமாக இருந்தது. சாங்குங் அணைமீது அழுத்தம் அதிகரிக்க அதிகரிக்க, நகரில் தெருக்கள் உட்கவிந்து இடியுறும் சப்தம், சீறிச் செல்லும் வெள்



ளத்தின் ஒலிக்குமேல் கேட்டது. அச்சத்தை மூட்டும் இக்காட்சியைக் கவனித்தபோது வேலையாட்களிடையே ஒரு வெறி உணர்வு மூண்டெழுந்தது. இதற்குள் எவனோ ஒருவன் வுசாங் நகரம் மூழ்கி விட்டதெனப் புரளி எழுப்பினான். ஸயாமா படகுத்துறை இருக்குமிடம் தெரியவில்லை என்று முடிவு கட்டிவிட்டனர் சிலர். வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட பெரிய பெரிய மரங்கள், அத்துறைமீது மோதி அதை அழித்திருக்க வேண்டுமல்லவா?

ஒன்பதாவது பிரிவில் கண்காணிப்பு நிலையில் இருந்த ஒருவன் கூவினான்: ''கரையே நோக்கி மரம் வருகின்றது.'' உடனே மூங்கில் கழிகளில் மாட்டிய துறட்டிகளை நீட்டி மரத்தை ஒதுக்க முற்பட்டனர். அது கரைமீது வந்து மோதினால், மண்ணைக் கிளறி உடைப்பு ஏற்பட்டு அப்பகுதியில் வெள்ளம் நுழைவதற்கு ஏதுவாகி விடும். கண்காணிப்பு வேலை இருமடங்காகியது. விளக்கொளியை அடிக்கடி கரைமீதெங்கும் செலுத்தி எந்த இடம் வலுவாக இல்லை, எங்கே உடைப்புக்கள் ஏற்படக் கூடுமெனக் கவனித்தனர். அவ்வொளிக் கதிர்மீது தூற்றல் விழுந்து பனித்திரை போலாகியது. அதனால் அபாயத்துக்குரிய இடங்கள் நன்கு புரிபடவில்லை. அபாயகர உடைப்பு எக்கணமும் ஏற்படலாமென எதிர்பார்த்து ஆட்கள் வெறி வந்தவர் போல் வேலை செய்யலாயினர்.

காவல் படையின் எண்ணிக்கை அதிகமாயிற்று. கரையை விட்டு வேலையாட்களை வெளியே செல்லவிடவில்லை. நெருக்கடி நிலையைக் குறிக்க, மணற்குழிகளில் இருந்த பெண்களையும், கரையை வலுப்படுத்தும் வேலைமேல் ஏவினர்.

சிங்-சிக்கு வியர்த்துக் கொட்டியது. ஆற்று நீர்த்திவலை வேறு அவன் உடலில் விழுந்து கொண்டே இருந்தது. இந்த அசௌகரியத்தையெல்லாம் அவன் பொருட்படுத்தாமல் மண்ணைக் கொட்டும் வேலையில் தன் கீழிருக்கும் ஆட்களைச் செலுத்திப் பரபரப்புடன் வேலை வாங்கினான். தோள்மீது ஒரு மணல் மூட்டையைச் சுமந்தவண்ணம்

அஹ்-ஹு அவன் எதிரே வந்து நின்றான். மழையையும், ஆற்றையும், நிம்மதியாக மனைவியுடன் இருக்கும் தூ-பவோவையும் சேர்த்து வைதான்.

''அவனுக்கென்ன, கும்மென்று பெண்சாதியுடன் குஷியாக வீட்டிலேயே இருக்கான்!'' என்று முணுமுணுத்துவிட்டு, ''நாம் மட்டும் இங்கே...'' என்று நிறுத்தினான்.

''யாரடா அது?'' என்று ஒரு குரல் அதட்டிக் கேட்டது. பலமான கையொன்று அவன் தோளை அழுத்தியது. அதனால் அவன் தன் நிலை தவறி முன்பக்கம் சாய்ந்து மண்ணைக் கவ்வி, தோளில் மணல் மூட்டையுடன் விழுந்தான். அவன் சமாளித்துக்கொண்டு எழுந்து நின்றான். கைத்துப்பாக்கியை ஏந்தியபடி ஒரு படையினன் நிற்பதைக் கண்டான்.

''நெருக்கடி நிலைமையில் இப்படியா காலம் கழிப்பது? வா எழுந்து. சோம்பேறிப் பயலே!'' என்றான் படையினன்.

மணல் மூட்டையைத் தூக்கி, அஹ்-ஹுவின் தோள் மீது ஏற்றினான் சிங்-சி. ஏதோ சபித்தவண்ணம் நகர்ந்தான் அஹ்-ஹு;

''உன் பெயரென்னடா?'' — படையினன் வினவினான்.

''வாங்·சிங்-சி!'' என்றான் சிங்-சி.

''சரி, மடமடவென்று ஆகட்டும் வேலை'' என்று மிரட்டிவிட்டு அவன் வேறு பக்கம் சென்றான்.

''மடமடவென்று ஆகவேண்டுமா? நாங்கள் மனிதர்களா அல்லது யந்திரங்களா?''

ஸு கெங்-ஸெங் எச்சரிக்கை செய்தான். ''மூன்று, நாலு, ஐந்து பிரிவுகளில் சிறு உடைப்புக்கள் தோன்றியுள்ளன; நீர் கசிகிறது.'' சிங்-சியிடம் வந்து அவன், ''சிங்-சி, நம் காங்கியில் உள்ள மணல் மூட்டைகளைக் கணக்கிடு. துணைக்கரையில் மரப்பலகைகளையும் செருக வேண்டியிருக்கும். மேலதிகாரிகள் நம்மிடம் மரப்பலகைகள் மிகக் கம்மி என்கிறார்கள்'' என்றான்.



பாதிராத்திரி, மேற்பார்வை அதிகாரிகள் வழக்கம் போல் அரிசிக் கஞ்சி உண்ணப் போயிருந்த சமயம், கரையில் வேலை செய்வோர் சற்று ஒய்வு எடுத்து, தம் ஆத்திரம் தீர அவர்களைத் திட்டிப் பேசக் கூடி விட்டனர்.

''மரத்துண்டுகளைத் தரவில்லை இவர்கள்; எப்படி அடைப்புக்களை நிறுத்துவது நாம்?'' என்று குறை கூறினான் சு.

''என்னை என்ன செய்யச் சொல்கிறாய்!'' என்று கோபத்துடன் கைகளை விரித்துக் கூறினான், ஸு கெங்-ஸெங்.

பஜாரி பெற்ற அந்தப்பயல்கள் எப்படியாவது இதைச் செய்தாக வேண்டுமெனக் கூறிவிட்டனர். இது போன்ற நெருக்கடி நேரங்களில், பொறுப்பையெல்லாம் நம் தலை மேல்தான் போட்டு விடுகிறார்கள்'' என்றான் ஒருவன்.

''இங்கேயே மடக்கிப் போட்டால், நாம் என்ன பண்ணலாம்? போகவிட்டாலும், வீட்டுக் கூரை கழிகளையாவது பெயர்த்து வரலாம்'' என்று சு வெறுத்துப் போய்க் காறித் துப்பினான்.

''இங்கே சில பலகைகள் இருக்கின்றன. முதலில் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வோம்'' என்றான் கெங்-ஸெங்.

''மெல்லிசான இந்தப் பலகைகள் எந்த மூலைக்கு?'' என்றதும், சு அந்தப் பலகைகளை எட்டி உதைத்தான்.

மறுபடியும் மனிதர்களைக் கொண்டு உடைப்புக்களில் நிரப்புவார்கள் என்றே நினைக்கிறேன்'' என்றான்.

அச்சமயம் தூ-பவோ புது உடையும், தலையில் மூங்கில் தொப்பியுமாக வந்தான். மது அருந்தியதால் குஷியாகச் சிரித்துக்கொண்டே வந்தான். அணைக்கரையில் நெருக்கடி நிலை யென்பதை அவன் அறியான்.

''வண்டுகள் சுறுசுறுப்பாக வேலை செய்கின்றனவே? இந்தப் பக்கம் வழியெங்கும் ஏன் இத்தனை பந்தோபஸ்து? இங்கே வர முடியுமே தவிர, வெளியே போக முடியாதென்றே தோன்றுகிறது'' என்றான் தூ-பவோ.

அவனையே முறைத்துப் பார்த்தான் கெங்-ஸெங் ஒரு கணம். பிறகு கடும் குரலில், ''தொப்பி, உடையெல்லாம் கழற்றி விட்டு வேலையில் இறங்கு. இன்று இரவெல்லாம் வேலை செய்ய வேண்டியதுதான்; ஓய்வு கிடையாது!'' என்றான்.

''என்ன, நிலைமை அவ்வளவு ஆபத்தா? ஓய்வே கிடையாதா? ஏனடா நீங்களெல்லாம் அதிகமாக உழைத்து விலவிலத்துப் போயிருக்கிறீர்களே'' என்று வியப்பெழக் கூறினான். தன் தொப்பியைக் கழற்ற அவனுக்கு மனமே இல்லை. தன் புது ஆடைகள் மாசாவதை அவன் விரும்பவில்லை.

''அட மடப்பயலே! இந்தச் சமயம் ஏனடா இங்கே வந்து மாட்டிக் கொண்டாய்?'' என்று சு மெதுவாக முணுமுணுத்தான்.

''பொழுது விடியும்போது இங்கே வேலை செய்ய வர வேண்டுமென எனக்கு அநுமதி தந்திருந்தார் ஸு. ஆனால் என்னை முகாமிலிருந்து கிளம்பிக் கொண்டு வந்து விட்டார்களே'' என்றான் தூ-பவோ.

''மாப்பிள்ளே, பரவாயில்லை; இறங்கு வேலைமேலே'' என்றான் சு. மரப்பலகைகளைத் திரட்டச் சென்றான் அவன்.

''அண்ணே! இங்கே அப்படிக் குஷியாக இருக்க முடியாது'' என்று ஒருவன் அவன் தலையிலிருந்து மூங்கில் தொப்பியைத் தட்டி விட்டான். கோபம் வந்து திரும்பிப் பார்த்தான் அவன். இதைச் செய்தவன் ஒரு காவல் படையினன் என்பது தெரிந்தது.

''இங்கே எல்லோரும் மாடுமாதிரி உழைக்கிறார்கள். நீ வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க வந்தாயா?'' என்றான் அந்தக் காவல் படையினன்.



''இப்போதுதானே நான் வேலைக்கு வந்தேன்'' என்று தூ-பவோ கீழே குனிந்து தன் தொப்பியை எடுக்கப்போனான். தூ-பவோ ஏதாவது தொந்தரவில் மாட்டிக் கொள்ளப் போகிறானே என்று சிங்-சி அங்கே வந்து, கடிந்து கொள்வதுபோல், ''ஆகட்டும், தூ-பவோ மடமடவென்று இந்த மணல் மூட்டைகளைக் கரைமேல் ஏற்ற வேண்டும்'' என்று அவனை அழைத்துச் சென்றான்.

''தலை எழுத்தே... நான் இங்கே வரும்போதுதானா இந்தச் சனியன் பிடித்த காவல்படையினன் வரவேண்டும்!''

''அதைப் பற்றிப் பேசிப் பயனில்லை. இன்று காவல் படையினரின் எண்ணிக்கை அதிகமாகி விட்டது. இப்போது அவர்கள் எல்லாம் பாதிராத்திரி உணவுக்குச் சென்றிருக்கின்றனர்.'' திடுமென ஒரு கூச்சல் கேட்டது—'பாவம் அந்தப் புல்தடுக்கிப் பயல் ஆற்றில் விழுந்து விட்டான்.'

கெங்-ஸெங் விரைந்தான். சிங்-சியும், தூ-பவோவும் கூச்சல் வந்த திசையை நோக்கினர்.

''அவன் போனால் போகிறான். ஆற்றிலேதானே விழுந்தான்? உங்கள் வேலையைக் கவனியுங்கள்'' என்றான் ஒரு காவல் படையினன்.

''அதோ அவன் தலை நீருக்குமேல் தெரிகிறது!'' என்றான் ஒரு வேலையாள்.

''உன் வேலையைப் பாரடா!'' என்று உறுமினான் காவலன்.

மேற்பார்வை அதிகாரி ஒருவன் இரண்டு சிப்பாய்களுடன் வருவது தெரிந்தது. சிங்-சியைப் பார்த்து கெங்-ஸெங் கண்ணடித்தான். திடுமென கண்காணிப்பு நிலையத்திலிருந்து குரல் வந்தது— 'பெரிய மரம் ஒன்று கரையோரமாக வருகிறது, உஷார்!'

மேற்பார்வை அதிகாரிகள் கூவினர்: ''மரம் வருகிறது. ஒதுக்குங்கள் — கரைமேல் மோதப் போகிறது — உஷார்!''—ஒரு மின் விளக்கின் ஒளிக்கீற்று கரைமீது படிந்து

சென்றது. வெள்ள நீரில் உருண்டு கொண்டே, ஒரு பிரம்மாண்டமான மரம் பலகிளைகளுடன், இலைக்குலையுடன் ஒரு பக்கம் வேகமாக வந்து கொண்டிருந்தது. கெங்-ஸெங்கை ஓர் அதிகாரி அதட்டி, ''அதை ஆற்றிலிருந்து எடுத்து விடு; தடுப்பு வேலைக்கு உதவும். நமக்குக் கை வசத்தில் பலகைகளே இல்லை'' என்றான்.

''மரத்தின் குறுக்களவு நான்கடிக்குமேல் இருக்கும் போல் தோன்றுகிறது. கிடைத்தால் பலகை அறுக்கலாம்'' என்றான் மற்றோர் அதிகாரி.

கெங்-ஸெங் திகைத்து நின்றான். அறுபது பேர் சேர்ந்து இழுத்தால்கூட அதை அந்த வெள்ளத்தின் விசையிலிருந்து கரையேற்றவே முடியாது.

''எல்லோரும் தயாரா?''

''அது முடியாது எங்களால். இங்கே உள்ள மூங்கிற் கழிகளுக்கு உறுதி போதாது அதை இழுப்பதற்கு. என்ன வேகமாக ஓடுகிறது ஆற்றின் சுழல்!'' என்று கெங்-ஸெங் பதிலளித்தான். ''கயிறு இருந்தால் முடியும்'' என்றான்.

''யாரங்கே? கயிறுகள் தேவை, சீக்கிரம்''—ஒரு அதிகாரி கட்டளையிட்டான். கெங்-ஸெங்கைப் பார்த்து, ''உன்னைத்தானே? கல் மாதிரி நிற்கிறாயே?...'' என்றான் அதிகாரி.

''என்னையா?'' என்றதும் கெங்-ஸெங் அச்சத்தால் கல்லெனச் சமைந்தான்.

சிங்-சியையும், தா-பவோவையும் வேறு இருவர் இழுத்து வந்தனர். அவர்கள் நழுவிவிடச் சமயம் பார்த்தனர், பாவம். ஆனால் அகப்பட்டுக் கொண்டனர்.

''நீங்கள் இருவரும் நீரில் குதித்து உதவி செய்யுங்கள். இங்கேயிருந்து உதவிக்கு ஆட்களை நிறுத்துகிறோம்'' என்றான் அதிகாரி.

அந்தப் பெரிய மரம் கரையை நோக்கி வரவர, வேலை செய்வோரிடையே ஒரு பரபரப்பு உண்டாயது. முன்னெச்



சரிக்கையுடன் இருந்தால், கயிறுகளின் உதவியைக் கொண்டு நிறைய ஆட்கள் மரத்தை இழுத்து விட்டிருக்கலாம். ஆனால் அதிகாரி நினைத்தமாத்திரம் அக்காரியத்தை முடித்து விடுவது, எளிதே அன்று. மரம் என்ன வேகமாக உருண்டு வந்தது! கெங்-ஸெங் நின்ற இடத்திலேயே திடுக்கிட்டுப் போய்ப் பதிந்து விட்டான். அதிகாரி கைத்துப்பாக்கியை நீட்டி, ''கயிற்றை எடடா; அந்த மரத்தைக் கட்டு—உம்'' என்று உறுமினான். கெங்-ஸெங்கின் முகம் வெளுத்து விட்டது. அது வெறும் கட்டளையன்று; அதுவே அவன் இறுதிக்கும் கொண்டுவிடும். சிங்-சி துப்பாக்கியைப் பார்த்தான்; தப்ப வழியில்லை எனத் தெரிந்து விட்டது. தா-பவோவை நோக்கி, ''வா, துப்பாக்கியின்முன் நம் ஜபம் சாயாது!'' என்றான்.

''சற்றுப் பொறு, ஐயா. உடைகளைக் கழற்ற வேண்டும் நாங்கள்.''

தா-பவோ சமயம் பார்த்து நழுவிவிடப் போகிறானே என்று கரைப்பக்கம் நெட்டித் தள்ளினான் அதிகாரி. அவனுடைய பிடி இரும்புக் கொறடா போலவே இருந்தது.

மரம் உருண்டு வந்துகொண்டே இருந்தது. கரை ஓரம் நெருங்கி விட்டது. வேலையாட்கள் அதைப் பற்றக் கழிகளையும், துறடுகளையும் வைத்துக்கொண்டு நின்றனர்.

''குதியுங்கள்'' என்று அதிகாரி கர்ஜித்தான். மீண்டும் கைத்துப்பாக்கியிது ஒரு கண் செலுத்திவிட்டு கெங்-ஸெங் வெள்ளத்தில் குதித்தான். வாயில் கயிற்றைக் கவ்விக் கொண்டிருந்தான். சிங்-சியும் தா-பவோவும் அவனைப் பின்பற்றினர். உருட்டிவோடும் மரத்தைப் பிடிக்க முயன்றனர். அதன் கிளைகள் அவர்கள் முகத்தையும் உடலுறுப்புக்களையும் கீறின. ல—" மரத்தைச் சுற்றிக் கயிற்றை வளைக்கும்போது ஆற்றில் எழுந்த ஒரு பெரிய ஓதம் மரத்தைப் பழையபடி நடுப்பகுதிக்கே இழுத்துச் சென்றது. கரையிலிருந்து விடப்பட்ட தொறடுகள் இற்றுப்போயின. ஒரே இருள். விளக்கொளி பாய்ச்சினர். மெல்ல விலகிச் செல்லும் கயிற்று

உரியை இழுக்க முற்பட்டனர் ஆட்கள். இன்னொரு எதுக்கும்; அந்தப் பிடியும் நழுவி விட்டது. வேறொரு நீர்ச்சுழல் அதை வேகமாகக் கரைமீது ஒதுக்கியது. தொம்மென்று கரையைத் தாக்கியது மரம். கரையின் ஒரு பகுதியே விண்டு போயிற்று.

உடனே பயங்கரக் குழப்பம் மூண்டது. மரத்தையோ, அதை இழுக்கும் கயிற்றையோ எவரும் இலட்சியம் செய்ய வில்லை. அதிகாரிகள், கண்காணிகள், கூலியாட்கள், எல்லோரும் இப்படியும் அப்படியும் ஓடினர், கரை உடைப்பை நிறுத்துவதற்கு. இந்தத் தபகுபலில் கெங்-ஸெங் கூச்சலிடுவது எவர் செவியிலும் விழவில்லை. வெள் ளத்தில் சிறிது நேரம் சுழன்றுவிட்டு ஆற்றின் நடுப்பகுதிக்கே சென்று விட்டது மரம். செல்லச் செல்ல அதன் வேகமும் அதிகரித்தது.

கெங்-ஸெங் அதன் பரந்த அடிமரப் பகுதியைக் கெட்டி யாகப் பற்றினன். அவனுக்கு மூச்சு வாங்கியது. சிங்-சியும் ஒரு பக்கம் தொத்திக் கொண்டிருந்தான். அவனுக்கும் மூச்சுத் திணறியது. பக்கத்தில் ஒரு கூச்சல் கேட்டது. இருளில் ஓர் உருவம், உருட்டியோடும் அந்த மரத்தைத் தாவிப் பிடிக்கத் த்விப்பதைப் பார்த்தான். தூ-பவோதான். ஒரு கையால் மரத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, தூ-பவோவை மறு கையால் தூக்கி விட்டான். மறு பக்கம் சாங்கை ஆற்றிலிருந்து தூக்கிக் கொண்டிருந்தான் கெங்-ஸெங். சாங்கிற்கு ஏறக்குறைய உயிரே போய்விட்டது, ஆற்றில் மூழ்கி மூழ்கி.

''நாம் எத்தனை பேர் ஆற்றில் குதித்தோம்?''

''சரியாகத் தெரியாது'' என்று கெங்-ஸெங் பேசுவது. அந்த வெள்ளத்தின் இரைச்சலில் கேட்கவில்லை. அப்பெரு மரம், கொந்தளிக்கும் கடலில் மாட்டிக்கொண்ட மரக்கல மென நடுங்கியது.

''நாம் இங்கே எத்தனை பேர் தொத்திக் கொண்டிருக் கிறோம்? என்ன, நான் சொல்வது உங்கள் காதில் விழுகிறதா?'' என்றான் கெங்-ஸெங்.



''இதோ நான் சிங்-சி! இதோ நான் தூ-பவோ!'' என்று இருவர் குரலும் கேட்டது.

''நாம் நாலு பேர்.''

''ஸூ மாமா! நீ எந்தப் பக்கம் இருக்கிறாய்? மேற் கொண்டு நாம் செய்ய வேண்டியது என்ன?'' என்று சிங்-சி வெள்ள நீரின் ஒலியையும் மீறிடக் கூவினான்.

''கடவுளுக்குத்தான் தெரியும். முடிந்த மட்டும், இந்த மரத்தை விடாமல் இருப்போம்...கிளைகள் இருக்கும் பகுதியில் தொத்திக் கொள்வோம். எங்கே கொண்டு விடுகிறதோ பார்க்கலாம்'' என்றான் கெங்-ஸெங்.

வலது காலில் ஒரே வலியாக இருந்தபோதிலும் மரத்தின் நடுப்பகுதி வழியே அவன் மெல்ல ஊர்ந்தான். சாங் அவனைப் பின்பற்றினான். இவ்வாறு நாலு பேரும், அணித்தாகச் சேர்ந்து அந்த உருட்டியோடும் மரத்தில் தொத்திச் செல்லும் காட்சி பார்க்கப் பரிதாபமாக இருந்தது. உடம்பு முகமெல்லாம் இரத்த விளாறு. நனைந்து கிழிந்த ஆடைகள். தூ-பவோவுக்கோ தோளில் ஒரே எரிச்சல்.

''தூ-பவோ, இதோ காட்டு'' என்று ஸூ அந்த இருட்டில் அவனுடைய தோளை நோக்கினான். இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. ''சிங்-சியைக் கட்டுப் போடச் சொல்லு'' என்றான். மூன்று அங்குலத்திற்குமேல் சதை கிழிந்து போயிருந்ததை சிங்-சி கண்டான். தூ-பவோவின் சட்டையைக் கிழித்துக் கட்டுக் கட்டி விட்டான்.

''அணைக்கரை விண்டு போயிற்று. என்ன கூச்சல் கேட்டது அங்கே? பயங்கரமான உடைப்பாகத்தான் இருக்க வேண்டும்'' என்றான் சாங்-அஹ்-ஸான்.

மெல்ல அணைக்கரையின் தோற்றம் அவர்களுடைய கண் களுக்கு மறைந்தது. தொலைவில் விளக்கு வரிசைகள் மினுக் மினுக்கெனத் தெரிந்தன. மின் விளக்கின் ஒளி வீச்சில் இப்படியும் அப்படியும் பல நிழலுருவங்கள் கரைமீது செல்வது மங்கலாகவே தெரிந்தது.

''எனக்கு எதுவுமே தெரியவில்லை'' என்றான் கெங்-ஸெங்.

''நாம் எக்கதி?'' என்றான் சிங்-சி.

இதே கேள்விதான் எவர் மனத்திலும்; ஆனால் இதற்குப் பதில் தர யாரால் ஆகும்? உருண்டு செல்லும் மரத்தை நால்வரும் விடாமல் பற்றினர். ஆற்றுச் சுழல் அதை இப்படியும் அப்படியும் உலுப்பிச் சென்றது.

''ஸு! இந்த மாதிரி எத்தனை நாழிகை இருக்கமுடியும். எவ்வளவு பெரிய அலைகள் பார்த்தாயா? நம்மைக் கவிழ்த்து விடும் போலிருக்கிறதே. இந்த மரம் இப்படி உருளுவதை நாம் தடுக்க வேண்டும்'' என்றதும் சாங் சற்றுச் சிரமத்துடன் மரத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டே, ''சுக்கான் போல எதையாவது செருகி இதை நிலை நிறுத்தத் வேண்டும்!'' என்றான். சாங் படகோட்டியாக இருந்தமையால், ஆற்றின் நீரின் விசைகளைப் பற்றி நன்கு அறிந்தவன். ''மரத்தைச் சுற்றிய அந்தக் கயிறு எங்கே?'' என்றதும், முதுகில் மின்னல் போல் ஒரு சுளுக்கு ஏறியது அவனுக்கு.

சிங்-சி மெல்ல மரத்தின் மேல் ஊர்ந்துபோய், கயிற்றைத் தடவிப் பிடித்தான். ''இந்தக் கயிறு எப்படிச் சுக்கானாக உதவும்?'' என்று கெங்-ஸெங் புரிபடாமல் கேட்டான். இன்னொரு பேரலை அவர்கள்மீது எழும்பிப் படிந்தது. நீரோட்டத்தின் வேகம் மறுபடி மரத்தை உருளச் செய்தது. அதன் கிளைகளில் ஒன்று அச்சமயம் முறிந்துவிட்டது. சாங் கூவினான்: ''பிடி, பிடி அந்தக் கிளையை...சுக்கானுக்கு உதவும்.'' மீண்டும் ஓர் அலை மரத்தின் மேல் விழுந்தது. தூ-பவோ திக்குமுக்கலாட நீரிலிருந்த அந்த முறிந்த கிளையைத் தன் இருகைகளாலும் பற்றி, ''கூட யாராவது உதவி செய்யுங்கள்!'' என்று கத்தினான்.

சிங்-சி கயிற்றை அதன்மீது வீசிச் சுருக்குப் போட்டான். ''அஹ்-ஸான், மேற்கொண்டு என்ன?'' என்று கூவினான்.

பதிலே இல்லை. மறுபடியும் கூவினான். மீண்டும் பதில் வராதுபோகவே, அஹ்-ஸான் தொங்கிக் கொண்டிருந்த



மரவங்கை நோக்கினான். அவன் உருவம் அங்குத் தென்படவில்லை. ''அட பாவமே! அவன் தன் பிடியை விட்டு விட்டான் போலிருக்கு'' என்றான் சிங்-சி. எந்தச் சமயம் யாரை அந்த ஆற்றுச் சுழல் இழுத்துச் சென்றுவிடுமோ என அஞ்சி கெங்-ஸெங் தன்னை மரத்துடன் வலிவாகக் கயிற்றால் பிணைத்துக்கொண்டான். அதேபோல் தூ-பவோவையும் சிங்-சியையும் செய்துகொள்ளச் சொன்னான். முறிந்த கிளையை மரத்துடன் நெருக்கிக் கட்டிவிட்டான். அதைச் சுக்கானாக நிற்கச் செய்து மரத்தின் போக்கைக் கட்டிற்குள் கொண்டு வந்தான். மூன்று பேரும் இவ்வாறு வெற்றி காணவே, ''பலே!'' என்று உரக்கக் கூவினர்.

''கரைப்பக்கமாக இதைத் திருப்ப முடிந்தால் நல்லது நமக்கு'' என்று சிங்-சி தொலைவில் நன்றாகப் புலனாகாது மங்கலாகத் தோன்றும் சாங்குங் அணையைத் திரும்பிப் பார்த்தான். விளக்கொளிகளும் இப்போது தெரியவில்லை. ''சாங்குங் அணை...என்ன பயங்கரமடா!'' என்று சொல்லிக் கொண்டான்.

சில நிமிடம் எல்லோருமே மௌனமாக இருந்தனர். அவர்கள், உழைத்து வாழ்ந்த அந்த அணைக்கரை மறைந்தே விட்டது கண்ணுக்குத் தெரியாமல். ஆனால் இப்போது அவர்கள் உயிர் ஆற்றிடை ஊசலாடும்போது அந்த அணையின் கதையைப் பற்றிக் கருதிப் பயனில்லை.

''வெளிச்சம் வரட்டும்...ஏதாவது கிட்டத்தில் கரை தெரிகிறதோ பார்க்கலாம்—இப்படியே பிடியை விடாமல் இருந்தால் சமாளித்துவிடலாம். இந்தச் சுக்கான் இருக்கும் போது மரம் உருளுவதற்கு வழியில்லை. கயிறுகள் சரியாக இருக்கின்றனவா பாருங்கள். நன்றாகப் பிணைத்துக்கொண் டிருக்கிறீர்களா?'' என்றதும் சிரித்தான் கெங்-ஸெங். ''யார் அனுமதியும் இனித் தேவையில்லை. நமக்கு சுயேச்சை யான ரஜா. பட்டிபெற்ற அந்தப் பயல்கள் நினைத்தார்கள், ஓர் ஆறுபேரைக்கொண்டு இந்த இரு டன் கனமுள்ள மரத் தைச் சமாளித்துக் கரைக்குத் தள்ளிவிடலாமென்று. பரவா

யில்லே, நாம் இதைப் பயன்படுத்திக் கொள்வோம்'' என்முன்.

''கரைக்குப் போவது எப்படி?'' என்முன் சிங்-சி.

''எப்படிச் சொல்வது? ஹாங்கோவிற்குக் கீழே வெள்ளக்கால் மிகவும் அகலமாக இருக்கிறதே—ஹாங்கோ...ஊ.. இப்போது வெள்ளத்தில் மூழ்கிவிட்டிருக்கலாம்'' என்முன் முதிய கெங்-ஸெங். தூ-பவோ இடம் மாற்றிக்கொண்டான் தோள்வலியால் துடித்தான்.

''ரத்தப்போக்கு நின்றுவிட்டதா?'' என்று கெங்-ஸெங் கேட்டான்.

''நிறைய ரத்தம் போயிற்று...பலவீனமாகத்தான் இருக்கும். ஸூ மாமா, உன் கால் வலி எப்படி இருக்கிறது?'' என்முன் சிங்-சி.

''ஒரேயடியாக வீங்கிவிட்டது. ஏதாவது எலும்பு பிசகியிருக்க வேண்டும். இப்போது செய்வதற்கு ஒன்றுமில்லே'' என்முன் கெங்-ஸெங்.

அந்த மூன்றுபேரும் நெருக்கமாகத் தொத்திக்கொண்டிருந்தனர். அந்த இருட்டிலும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ள முடிந்தது. ஆற்று வெள்ளத்துடன் கீழ்த்திசை சென்றனர். உடலில் ஒரே ஈரம். மழைத் தூற்றல் விழவே சிலு சிலுப்பு வேறு. நடு நடுவே தாம் கவிழ்ந்துவிடாமல் இருப்பதற்கு இடம் மாறி மாறித் தொத்திக்கொண்டனர். மரம் வெள்ளத்தின் விசையில் சாய்ந்தும் நிமிர்ந்தும் சென்றது. அதன் கிளேகள் அவ்விருளிடையே மேலும் கரேலெனத் தென்பட்டன. தொலேவில் எங்கோ கரைகளில் விளக்கொளி சிறு புள்ளியாகத் தென்பட்டது. அந்த இடத்தில் வெள்ளம் புகாமல் உலர்ந்த தரையே இருந்ததுபோலும். இடை இடையே மேகம் பிரியும்போது வானில் தாரகைகள் கண் சிமிட்டின.

காலம் விரைந்தது. எங்கும் ஒரே நிசப்தம்; ஆற்று நீரின் சலசலப்பு ஒலி ஒன்றுதான். விகாரமாகக் கூவிக்



கொண்டு இராப்புள் ஒன்று இருள் கப்பிய வானில் சிறகடித்துச் செல்லும் அரவம்.

சிங்-சி பிடி நழுவ விடாமல், மரக்கிளே யொன்றைத் தனக்கு ஆதரவாகக் கொண்டான். சிலுசிலுப்போ உடல் வலியோ அவனுக்கு உறைக்கவில்லே. உள்ளத்திலும் விரக்தி மூண்டது. ஏதோ வேடிக்கைப் பார்ப்பது போலவே எண்ணி அந்தப் பயங்கரப் பயணத்தில் சென்முன். பிழைப்போம் என்ற நம்பிக்கை எழவில்லே அவனுக்கு. அதை அவன் பொருட்படுத்தவுமில்லே. இருமுறை அவன் யமனே ஏமாற்றியாகிவிட்டது. இப்போது சாவை ஏற்க அவன் தயார்தான். தொல்லேயைத் தீர்க்கும் என்ற அளவில் அதை வரவேற்கக் கூடச் சித்தமாக இருந்தான்.

ஸியு-மின் தனிமையில் செத்துப்போனுளே என்பதை நினேத்தபோதுதான் ஒரு வேதனே அவன் உள்ளத்தை அரித்து எடுத்தது. ஆனுலும் அவள் செத்துப்போனுதே மேல் என எண்ணினுன். அத்துடன் அவளுடைய துன்பங்கள் முடிந்துவிட்டன அல்லவா? அணேக்கரையில் அந்தச் செய்தியை முதன் முதலில் கேட்டபோது அவனுக்கு அழுகைதான் வந்தது. ஆனுல் இப்போது அந்தக் கலக்கம் இல்லே அவனுக்கு. களிப்பே கண்டான்.

''தூ-பவோ!'' என்று அடிபட்டிருந்த நண்பனே விளித்து, ''எப்படியிருக்கிறது உனக்கு?'' என்முன்.

தூ-பவோ நோவினுல் ஊங்கொட்டினுன். இப்படியும் தன் மணநாள் அவலமாகிவிடுமா என நினேத்துப் புன்றிக் கொண்டான். ''கடவுளே, அவளே இனிமேல் பார்க்கவே முடியாது...சிங்-சி! நாம் உயிருடன் கரையேறுவோமென்று படவில்லே. பாவிகள்—நம்மை—!'' என்று கூறி நிறுத்தினுன். வெறி பிடித்தவன் மாதிரித் தலேயை மரக்கிளேயில் இடித்துக் கொண்டான்.

இந்தப் பக்கம் கெங்-ஸெங் ஓய்ந்து, திராணியற்றுக் கிடந்தான். ''மகனே, எதையும் சகிக்கத்தான் வேண்டும்.

அப்புறம் வாழ்க்கை என்பது என்ன? சக்தியைச் சிதறடிக்காதே. வெளிச்சமானதும் கரை தெரிகிறதா பார்ப்போம். கவலைப்படாதே. இயாங்க்ட்ஸி நதி நம்மை இன்னும் விழுங்காமல் இருக்கிறதே!'' என்றான்.

சிங்-சி மறுபடியும், ''தூ-பவோ, ஸியு-மினைப் பற்றி நீ ஏதாவது கேள்விப்பட்டாயா?'' என்றான்.

''எனக்கு வருத்தமாய் இருக்கிறது, சிங்-சி!'' என்றான் தூ-பவோ.

''தூ-பவோ, நீ இருந்தாயா, அவள் ஆவி பிரியும் போது?''

தூ-பவோ நிதானமாகவே, ''ஸயாவோ மாமி கடைசி மட்டும் அவள் பக்கத்தில் தான் இருந்தாள். உன்னைப் பற்றியே கேட்டுக் கொண்டிருந்தாளாம்; நீ தைரியமாக இருக்க வேண்டும் என்றாளாம். நீ அவளை நாளைக்கு மணக்கப் போகும் செய்தியைச் சொல்லி அவளுக்கு ஆறுதல் கூறினோம். 'நாளை மட்டும் நான் இருப்பேனா?' என்று அந்தப் பேதை சொன்னாள். அப்புறம் நாங்கள் போய் விட்டோம். அதற்கு மேல் நெடுநேரம் சும்மாக் கிடந்தாளாம். பாதி ராத்திரிப் போதுக்கு, அவள் விண்ணுலகை அடைந்து விட்டாள் என்று ஸயாவோ மாமி சொன்னாள்'' என்றான்.

சிங்-சி பேச்சற்றுப் போனான்.

''அவள் செத்துப்போனதே மேல், சிங்-சி. இந்தச் சங்கடத்திலிருந்து தப்ப வழியில்லையே... பார்... அந்த வெள்ளத்தின் சீற்றத்தை. கரை கண்ணுக்கே புலப்படவில்லையே'' என்றான் தூ-பவோ.

மறுபடியும் மௌனம். தூ-பவோ சிந்தனையில் அமிழ்ந்தான். மரம் நீருள் மூழ்கியும் எழுந்தும் விசையுடன் நகர்ந்தது. ஆனால் நட்டாற்றின் ஓட்டத்துடன் சென்றது. கடல் போன்று நீத்தம் தொடுவான் வரை பரவித் தென்பட்டது. கங்குலும் நீண்டது. தூ-பவோவுக்குத் தலை சுழன்று மயக்கம் வந்தது, அதிக ரத்தம் பெருகியதால். சிங்-சிக்கும் மயக்க நிலை. கெங்-ஸெங் ஒருவனே தன் நினைவுடன் இருந்தான்.



கால் வலி அதிகமாகவே அந்த நிலைக்குத் தன்னைக் கொண்டு வந்தவர்களைச் சாபமிட்டுக் கொண்டிருந்தான்.

மெல்ல வெளுப்புக் கீற்று கீழ்வானில் தோன்றியது. இளங்காலைக் காற்று பல்லைக் கிட்டும்படி சீதளமாக இருந்தது. சிங்-சியின் உடல் நடுக்குற்றது. அவன் எழுந்து உட்கார முயன்றான். தன்னால் அவ்வாறு செய்ய முடிந்ததைக் குறித்து அவனே வியப்புற்றான். வானத்தில் வைகறையின் செம்மை படரப் படர அவனுக்கு நம்பிக்கை வந்தது.

''நான் உயிர் வாழ்வேன்'' என்று தன்னுள் கூறிக் கொண்டான். ஸியு-மின் சொன்னது அவன் ஞாபகத்திற்கு வந்தது. இந்த இயாங்க்ட்ஸி நதியை மீண்டும் எமாற்றி விட்டு, ஸியு-மின் ஆசைப் பட்டதற்காவது இவ்வுலகில் வாழவேண்டும்; எராள நிலம் தருவதாகவும், வசதிகள் செய்து கொடுப்பதாகவும் ஆசையூட்டி முடிவில் பயங்கரமான கஷ்டத்தையும் மரணத்தையும் காட்டிய மனிதப் பதர்களின் ஊழலை உலகிற்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற தீவிர உறுதி பிறந்தது அவனுக்கு.

''சிங்-சி!'' — கெங்-ஸெங், குரல் கன்றக் கூப்பிட்டான்.

''அதோ, தெரிகிறதே, அது கரைதான். இடதுபக்கம் பார். இந்தச் சுக்கானைச் சற்றுப் பிடித்துக் கொள்கிறாயா; என் கை விட்டுப் போகிறது. தூ-பவோ எப்படி இருக்கிறான்?'' என்றான்.

தூ-பவோவை சிங்-சி நோக்கினான். அவன் பாதி நீரிலும், பாதி மரத்திலும், கயிற்றுப் பிணைப்பில் தொங்கிக் கொண்டிருந்தான்.

''அவனுக்கு உடம்பு சரியாக இல்லை. சற்று மேலே அவனைத் தூக்கி விடுகிறேன்'' என்றான்.

அப்படியே அவனைத் தூக்கி உயரக் கிளையொன்றுமீது சாய்த்து வைத்துக் கட்டினான் சிங்-சி. பின் சுக்கானைப் பிடித்தான். ஆனால் ஆற்றின் சுழல் அதைப் புரட்டி விட்டது. அதை நிமிர்த்துப் பார்த்தான். மரமே அசைந்தது. அலையொன்றும் அடித்து அவனைத் தண்ணீரில் தள்ளியது.

கயிற்றில் பிணைக்கப்பட்டிருந்தபடியால் மறுபடியும் மரத்தின்மீது அவனால் ஏற முடிந்தது. ஆனால் சுக்கான் சுழன்று விட்டதால் மரம் ஆடியது. பலம் கொண்ட மட்டும் பார்த்தான், சுக்கானை நிமிர்த்த முடியவில்லை. ''பிரயோசனப்படாது ஸூ மாமா; இந்த நீர் விசையில் அது சாத்தியமல்ல'' என்றான் சிங்-சி.

''அப்படியானால் நாம் கரையை அடைய ஆற்று விசையைத்தான் இனி நம்பவேண்டும். இதென்ன இழவு!'' என்று கெங்-ஸெங் சூரியனை நோக்கினான். ஈயப்பாளம் போன்ற மேகப் புரைகளைக் கீறிக்கொண்டு பொன்னிற வட்டம் போல் கதிரவன் எழுந்தான். ''எப்படியோ உடம்பு ஈரமாவது உலரும்'' என்றதும் தூ-பவோ பக்கம் பார்த்தான். ''அட தெய்வமே!'' என்றான்.

''என்ன...என்ன?'' என்றான் சிங்-சி.

''தூ-பவோ லொடக்கென ஆற்றுள் மூழ்கிவிட்டானே!'' ஆற்று நீரில் அவனுடைய தலைமட்டும் தெரிந்தது. மரத்தில் பிணைக்கப்பட்டிருப்பினும், அவன் நழுவி விழுந்ததால் தலை இப்படியும் அப்படியும் நீரில் அலைபட்டது. அவனை இழுக்க பிரம்மப்பிரயத்தனம் எடுத்துக்கொண்டனர். ஆனால் அவன் உயிர் போய் விட்டது.

இருவரும் இந்தக் கோரத்தைக் கண்டு பேசச் சக்தியற்று இருந்தனர். ''பாவம், மயக்கம் போட்டிருப்பான். மரம் ஆடியதும் நீரில் சரிந்து விட்டிருப்பான்'' என்றதும், கெங்-ஸெங் அவனுடைய இடுப்புக் கயிற்றைத் தளர்த்தி நீருள் இறக்கி, ''போய் வா, தூ-பவோ; மறு பிறப்பிலாவது நீ சுகமடைவாயாக!'' என்றான்.

சிங்-சிக்கு அழுகை வந்து விட்டது. ''தூ-பவோ, எப்போதும் தமாஷாகப் பேசும் தூ-பவோ, வெட்கச் சுபாவமுள்ள தூ-பவோ; உணர்ச்சி மிக்க தூ-பவோ போய் விட்டான்!''—

இரண்டு பேரே எஞ்சி நின்றனர். ஓர் அலை அவர்கள் மீது படிந்து சென்றது.



''எப்படியாவது நாம் வெளியேற வேண்டும்'' என்றான் கெங்-ஸெங் வெறுத்துப்போய்.

''அதற்கு வழி?'' என்றான் சிங்-சி.

சுற்றிலும் நோக்கினர். உடைந்த கரைகள்; நீரில் மூழ்கிக் கிடக்கும் மக்கள் இல்லங்கள்; மலையெனக் குவிந்த எக்கர் மணல். தொலைவில் வரண்ட நிலங்கள் யாவும் புலனாயின. ஆற்றுச் சுழல் இவர்களைக் கரைப் பக்கமே ஒதுக்காமல் இருந்தது. ஒவ்வொரு மைலாகச் சென்று கொண்டே இருந்தனர், மணிக்கணக்காகச் சென்றனர்-பட்டினியாலும், மழை, காற்று, ஆற்று நீர் இவற்றாலும் அவதிப்பட்டதால் சோர்ந்து விட்டனர். இரவு மீண்டும் வருவதற்குள் சிங்-சி சுக்கானைப் பிடிக்கப் பார்த்தான். ஆனால் கெங்-ஸெங் பலம் ஒடுங்கிக் கிடந்தான். இரவெல்லாம் குரல் கொடுத்துக்கொண்டே இருந்தான் சிங்-சி. தா-பவோவைப் போல் கெங்-ஸெங்கும் நீருள் ஆழ்ந்துவிடப் போகிறானே என்ற திகில் வேறு. அப்புறம் அயோமயமாக அவனுக்குக் கண் இருட்டி வந்தது. பிரக்ஞை இழந்தான்.

*　　　*　　　*　　　*

தூக்கிப் போட்டு எழுந்தான். மறுபடியும் ஆகாயம் வெளிச்சமாக இருப்பதைக் கண்டான். மரம் ஒரு கரைப் பக்கம் மோதி, முன்னுக்கும் பின்னுக்கும் அசைந்து கொடுத்தது. அந்த மோதலில் கிளைகள் முறிந்தன. அவன் மயக்கம் முற்றும் தெளியவில்லை. ஏதோ கனவில் வருவது போல், வரண்ட மண் தரை அவன் எதிரே தோன்றியது. சிரமப்பட்டு எழுந்தான். வீடுகள், பயிர் நிலங்கள், மரத் தோப்புக்கள் யாவும் காட்சி அளித்தன. தன் கண்களையே அவனால் நம்ப முடியவில்லை. ஆனந்தக் கூச்சலுடன் அவன் கண்ணைக் கசக்கிக்கொண்டு தன் சயிற்றுப் பிணைப்பை அகற்றிக் கரைமீது கால் வைத்தான். அவனுக்குத் தலை கிறு கிறுத்தது. நாணல் புதரிடையே விழுந்து விட்டான்.

நினைவு வந்தபோது, பளிச்சென்ற வெயிலொளி அவன் கண்களைக் கூசச் செய்தது. தலையைத் தூக்கிப் பார்த்தான்.

ஒரு குடிலின் முற்றத்தில் வைக்கோல் படுக்கைமீது தான் படுத்திருப்பதை உணர்ந்தான். கடந்து சென்ற முப்பத்தாறு மணிகாலச் சம்பவங்கள் அவன் மனக்கண் முன்பு இராட்டினம்போல் சுழன்றுச் சட்டென நின்றன.

''லூ மாமா!'' என்று அழைத்தான்.

''உன்னுடன் இருந்த அந்த நண்பர்தானே?'' என்று அவனுக்குப் பரிசயமிராத ஒரு குரல் கேட்டது. ''அந்த ஆள் மரத்திலேயே கட்டுண்டு இறந்து கிடந்தார், அந்த மரத்தை நாங்கள் இழுத்து போட்டபோது.''

''ஐயோ!'' என்று சிங்-சி கண்ணை மூடிக் கொண்டான். நெடு நேரமான பிறகு அவன் மீண்டும், ''நான் எங்கே இருக்கிறேன் இப்போது?'' என்று கேட்டான்.

''இது கியு-கியாங்.''

''கியு-கியாங்கா?''

''நீ எங்கிருந்து வருகிறாய்?''

''ஹாங்கோ.''

''அப்பப்பா, ஆற்றுக்கு மேல் நூறு மைல் தூரத்திலிருந்தா வருகிறாய்? எத்தனை நேரம் நீரில் கிடந்தாய்?''

''இரண்டு இரவு—ஒரு பகல்.''

''நீண்ட பிரயாணந்தான். உடம்பை அலட்டிக் கொள்ளாதே, ஓய்வெடுத்துக்கொள். உணவு கொண்டு வந்து தருகிறோம்; கவலைப்படாதே. உயிர் பிழைத்தாயே, அதுவே பெரிய அதிருஷ்டம்.''

வாங்-சிங்-சி தன் கண்களை மூடிக் கொண்டான். சாங்குங் அணைக்கரை, அங்கே நடந்த காட்சிகள் யாவும் மிதந்து சென்றன.

''ஆமாம், நான் உயிர்ப் பிழைக்கக் கொடுத்து வைத்தவன்தான்!'' என்று தனக்குள் மெல்ல முனகினான்.

# 15

'**தெ**ன் திசை ஏகு, தென் திசை ஏகு, தென் திசை ஏகு' — தண்டவாளத்தின்மேல் விரையும் ரெயில் வண்டிச் சக்கரங்கள் அவன் மனத்துள் இந்தச் சொற்களே மீண்டும் மீண்டும் சந்தம்போல் இடித்துறைத்தன. ரெயிலடியில் கூலி வேலை செய்யும் சிங்-சிக்கு, ஒவ்வொரு புகை வண்டியும் வந்து செல்லும்போது, அதன் சக்கரங்கள் உரைத்துச் செல்லும் இந்த நம்பிக்கை வாசகம் ஒரு திடத்தை உண்டு பண்ணியது. முதலில் வேலை சற்றுக் கடினமாகத்தான் இருந்தது. ஆனால் இப்போது அவனுடைய லட்சியப் பாதை கண்ணுக்குப் புலப்படுகிறதே!

மெல்ல அவன் ஏதாவது வேலை செய்துகொண்டே தென் திசையே ஏகினான், எவர் கவனத்தையும் ஈர்க்காமல், நிசப்தமாகவே. அவனுடன் வேலை செய்யும் ஒருவன் ஒருநாள், ''சிங்-சி, நீ காலையே பிடித்து மாலை வரைக்கும் உழைக்கின்றாய். ஒன்றுமே கேட்காமல் இருக்கிறாயே. உன் மனசில் உள்ள வேதனைதான் என்ன? நான் எப்போதாவது பேசினால் நீ என்னை நோக்குகிறாய்; அந்தப் பார்வையில் சூன்யமே நிலவுகிறது'' என்று கேட்டான்.

ஆனால் சிங்-சி கொத்துக் கோடரியைச் சுழற்றிக் கொண்டே ஏதோ முணு முணுத்தானே தவிர பதில் பேசவே இல்லை. அவன் மனத்தின் மேற்புரையுள், சிந்திக்கும் சக்தியையே இழந்து விட்டான். சாங்குங் அணைக்கரையைப் பற்றிய நினைவே அவன் மனத்துள் உலவியது. ஆனால் இதன் பின்னால், அவனுடைய சொந்த இருண்டு துயரொன்று, மற்ற சிந்தனையோட்டங்களையெல்லாம் மூடிக்கொண்டு அளாவி நின்றது.

இருப்பினும், அவன் சாதித்த மௌனத்திற்குக் காரணம் ஒன்று இருந்தது. தென்திசையே தப்பி ஓடுவதற்கு இந்த மோனப் போர்வை மிக்வும் தேவைப்பட்டது. காப்புடைய இம் மறைப்பின் மூலம் அவன் ஒவ்வொரு வேலையாகத் தன்

பங்கைச் செய்துகொண்டே, ரெயில் பாதையிலேயே மெல்ல மெல்லத் தென் திசையே நகர்ந்தான். முதலில், ஹூனானுக்கு - பிறகு குவாங்குங்கிற்கு - கடைசியில் எல்லைக்கு.

அவன் அவசரப்படவில்லை. காலம் பார்த்துக் கிடந்தான், உரிய தருணம் கிட்டுவதற்கு. நாட்கள் சில சமயம் வாரங்களாக நீளும். வெம்மை தரும் தென்திசையின் மாரிக்காலத்து ஓர் இளங்காலை எல்லையைக் கடந்துவிட்டான்!

முதலில் அப் புதுவாழ்வு சற்று அதிசயமாகத்தான் இருந்தது. தன்னைப்போல் பலர் இருப்பதைக் கண்டான். அவனை மூடியிருந்த போர்வை மெல்ல விலகியது. இதயம் விட்டு நண்பர்களுடன் பேச முடியுமென்பதை உணர்ந்தான். இதுவரை அடைப்பட்டுக் கிடந்த அவ்வுணர்ச்சிகள் வெளிக்கிளம்பின. எல்லாம் வெளியே வரவில்லை. அவன் நெஞ்சின் ஆழ்ப்புரையுள் சில புதையுண்டிருந்தன. அவன் விரும்பினாலும் அவை வெளி வராதவை.

அவனுடைய நண்பர்கள் அவனது துயரக் கதையைக் கேட்டு, அநுதாபத்தால், ''புரிகிறது; தெரியும் எங்களுக்கு அவ்வின்னல்கள்'' என்றனர்.

''பின் ஏன் உலகிற்கு இதை எடுத்துரைக்கக்கூடாது?'' என்று சிங்-சி உணர்வெழக் கேட்டான்.

''நீதான் உலகிற்குச் சொல்லேன்!'' என்று அவர்கள் முறுவல் பூத்தனர்.

முற்றும்